# "எனக்குத் தெரியும்...

## லக்ஸ் டாய்லட் சோப் உங்கள் சருமத்தையும் எழிலோங்கச் செய்யுமென்று." இவ்வாறு கூறுகிறார்

டி.ஆர். ராஜகுமாரி

டி. ஆர். ராஜகுமாரி கூறுவதாவது: "இந்த சுத்தமான, வெண்மையான சோப் என் சருமத்திற்கு அளிக்கும் நறுமணத்தை நான் மிகவும் விரும்புகிறேன். சோபைமிக்க சரும அழகைப் பெற நான் செய்வதுபோல் நீங்களும் செய்யுங்கள். உங்கள் சருமத்திற்கு லக்ஸ் டாய்லட் சோப்பின் நிச்சய பாதுகாப்பை அளியுங்கள்."




## லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகுச் சோப்



# கல்கி


# பொருளடக்கம்


மலர் 13 இதழ் 15 — 1953 நவம்பர் 8 — விஜய ஐப்பசி 23





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


## தீபாவளி வேடிக்கை!




சென்னைச் சட்டசபை காங்கிரஸ் அங்கத்தினரில் சிலர் ராஜாஜி மந்திரி சபைக்கு வெடி வைக்கும் வேலையில் முனைந்திருக்கின்றனர்.

## சிக்கனமான போக்குவரத்துக்கு

# சிறந்த டீஸல் என்ஜின்

முக்கிய அம்சங்கள் :

★ சுலபமாக அமைக்கலாம்

★ டீசல் சிக்கனம்

★ கோல்டு ஸ்டார்ட்டிங்

★ நம்பகமும் சிறந்த டிசைனும்

★ சுலபமான டீசல் அமைப்பு

நீங்கள் விரும்பும் சிக்கனத்துடன் உங்களுக்குத் தேவையான சக்தியையும் அளிக்கிறது. அதனுடைய மிகச் சிறந்த சேவையினால் உங்களுக்கு பராமரிப்புச் செலவை குறைக்கிறது.

**கூடுதலான லாபம்**

உங்களுடைய செலவுகளைக் குறைக்க ஓர் நிச்சயமான உபாயம். இப்பொழுதே சக்தி வாய்ந்த பெர்கின்ஸ் டீஸல் என்ஜின்களைப் பூட்டுங்கள். பராமரிப்புச் செலவில் மிக அதிகமான சிக்கனத்தை அடைவீர்கள். எண்ணை செலவில் 70 சத விதம் வரையில் குறைவு ஏற்படுவதால் உங்களுக்குக் கூடுதலான லாபம் கிடைக்கிறது.

Perkins



PERKINS FOR PEP



Simpson & Co. Ltd

MADRAS-2

கிளைகள் :

உதகமண்டலம், பெங்களூர், திருச்சிராப்பள்ளி, செகந்திராபாத் (டெக்கான்)

அதிகாரம்பெற்ற வியாபாரிகள் : ஸ்ரீ கிருஷ்ணா மோட்டார் & என்ஜினீயரிங் ஒர்க்ஸ், விருதுநகர். ஜார்ஜ் ஓக்ஸ் லிமிடெட், பெஜவாடா, கோயமுத்தூர் & மதுரை. டி. என். ஆட்டோ மோபைல்ஸ், தென்னூர். ஸ்ரீராம விலாஸ் சர்வீஸ் லிமிடெட், கும்பகோணம். ஜி. என். சக்கரபாணி செட்டி & ஸன்ஸ் லிமிடெட், திருநெல்வேலி. மக்கார் (மோட்டார்ஸ்) லிமிடெட், திருவனந்தபுரம், கோட்டயம், எர்ணாகுளம், திருச்சூர், ஆலப்புழை, ஆல்வாய். வி. வி. ஆட்டோமோபைல்ஸ் கள்ளிக்கோட்டை. பி. வி. பாப் & கோ., மங்களூர். மெர்க்காரா & விராஜ்பேட்.






# கல்கி

மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 15


# சமாதான முனையில் சலசலப்பு!

ஒரு கட்டிடத்தையோ, ஊரையோ உருவாக்குவதுதான் கஷ்டமே யன்றி, அழிப்பது வெகு எளிதான காரியம் என்பதைக் கண்கூடாகப் பார்த்து வருகிறோம்.

பல நூற்றாண்டுகளாக மக்களின் மகத்தான உழைப்பினாலும் ஊக்கத்தினாலும் நிர்மாணிக்கப் பட்டிருந்த நகரங்கள், சென்ற மகா யுத்தத்தின் போது சில நாட்களில் தரைமட்ட மாகிவிட்ட கோரத்தைக் கண்டோம்.

சில நாட்கள் என்ன, சில விநாடிகளில் நகரங்களை அழிக்கும் சக்தி அணு குண்டுகளுக்கு உண்டு என்பதும் அந்த யுத்தத்தின் இறுதியில் நிரூபணமாயிற்று.

நினைத்த மாத்திரத்தில் எதையும் அழிக்கவும் சிருஷ்டிக்கவும் எல்லாம் வல்ல இறைவனுக்குச் சக்தி உண்டு என்கிறார்கள்.

ஆனால் நிமிஷ நேரத்தில் எதையும் அழிக்கக் கூடிய வல்லமையை இப்போது ஆட்டி வைக்கும் இரண்டொரு வல்லரசுகள் மாத்திரம் பெற்றிருக்கின்றன.

எனினும் அழிந்த கட்டிடத்தையோ, நகரத்தையோ உடனே நிர்மாணிக்கும் சக்தி மனிதரின் கற்பனைக்கு அப்பாற்பட்ட விஷயமாக இருக்கிறது.

அதுபோலவே அழிவை அடிப்படையாகக் கொண்ட யுத்தத்தைத் தூண்டுவது மனிதருக்கு வெகு எளிதாக இருக்கிறது. சமாதான முழக்கத்தைக் காட்டிலும் யுத்த கோஷம் செய்வது அவர்களுக்கு இலகுவாக இருக்கிறது.

ஆனால் யுத்தத்தை நிறுத்தி, சமாதானத்தைச் சிருஷ்டிப்பது சாத்தியமான காரியமாகத் தோன்றவில்லை.

மற்றொரு மகாயுத்தத்தையோ, குட்டி யுத்தங்களையோ தூண்டிவிடத் தங்களால் இயன்ற கைங்கர்யத்தைக் கூசாமல் செய்ய இன்று உலகில் ஏராளமான தலைவர்கள் இருந்து வருகிறார்கள்.

ஆனால் அவ்வாறு மூண்ட போர்களை நிறுத்தி, நிரந்தர சமாதானம் ஏற்படும் படி செய்வதில் எவரும் தீவிர முயற்சி எடுத்துக் கொள்வதாகத் தெரியவில்லை.

இல்லாவிடில் சென்ற மகாயுத்தம் நின்று ஏழு ஆண்டுகளாகியும் உலகில் அமைதி ஏற்படாமல் இருக்குமா?

அந்த யுத்தத்தின் விளைவாக எழுந்த கிளை யுத்தமான கொரியாப் போரின் நிலைமையும் இன்று அதே ரீதியில்தான் இருந்து வருகிறது.

கொரியா யுத்தம் நின்று தாற்காலிகமாகச் சமாதானம் ஏற்பட்டுள்ள தெனினும், அந்தச் சமாதானத்தை நீடிக்க விடாமல் உருக்குலைப்பதற்கான சக்திகள் மும்முரமாக வேலை செய்து வருகின்றன.

கொரியா சம்பந்தமாக ஏற்பட்ட சமாதான ஒப்பந்தத்தின்படி இந்தியத் துருப்புகள் மேற்படி தேசத்துக்குச் சென்றிருக்கின்றன அல்லவா?

அத்துருப்புகளுக்கும், இந்தியப் பிரதிநிதி தலைமையில் அங்கு வேலை செய்து வரும் நடுநிலைமைக் கமிஷனுக்கும் ஆதரவு அளிக்க வேண்டிய அமெரிக்கா முதலிய தேசங்களின் தலைவர்கள் அவர்களுடைய அலுவல்கள் வியர்த்தமாவதற்கான காரியங்களை மறைமுகமாகச் செய்து வருகிறார்கள்.

இந்தியத் துருப்புகளின் சீரிய தொண்டை அமெரிக்கத் தலைவர்கள் பாராட்டாமல் மௌனமாக இருப்பதை அமெரிக்காவில் உள்ள பிரபல பத்திரிகைகளே வன்மையாகக் கண்டித்திருக்கின்றன.

இந்தியத் துருப்புகள் ஏதோ தங்கள் சொந்த நலனுக்காகவும் லாபத்துக்காகவும் கொரியாவுக்குச் சென்றிருப்பது போல் அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்றே தோன்றுகிறது.

கொரியாப் பிரச்னை விஷயத்தில் இந்தியா ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டதாக நினைப்பவர்கள் இந்த நாட்டிலும் இருக்கிறார்கள். கொரியாவுக்கு இந்திய சர்க்கார் துருப்புகளை அனுப்பியது தவறு என்று கண்டிப்போர் இருக்கிறார்கள்.

அத்தகைய அபிப்பிராயம் முற்றிலும் தவறு என்று பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு சென்ற வாரம் பாட்னாவில் நடந்த பொதுக் கூட்டத்தில் சுட்டிக் காட்டியிருப்பதைச் சகலரும் கவனிக்க வேண்டும்.

சமாதானத்துக்கு இன்றியமையாத சில பொறுப்புகளை இந்தியா ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பல நாடுகள் ஏகோபித்து இந்தியாவைக் கேட்டுக் கொண்டன. ஐக்கிய நாடுகள் சபையும் அவ்விதமே முடிவு செய்தது.

உலக சமாதானத்துக்காக எவ்விதத் தியாகமும் செய்வதற்குத் தயாராக இருக்கும் இந்தியா, உலக சமாதானத்தையே தனது குறிக்கோளாகக் கொண்டுள்ள இந்தியா, மேற்படி பொறுப்புகளை எவ்விதம் தட்டிக் கழிக்க முடியும்! சுயநலம் காரணமாக அவ்வாறு தட்டிக் கழிப்பது பாரத நாட்டின் பெருமைக்கும் பண்பாட்டுக்கும் கௌரவத்துக்கும் ஏற்றதாகுமா!

அதனால்தான் அத்தகைய தர்ம சங்கடமான பொறுப்பை நிறைவேற்றுவதில் உள்ள ஆபத்தையும் கஷ்ட நஷ்டங்களையும் அறிந்துங்கூட இந்தியா அதை ஏற்கச் சிறிதும் பின் வாங்கவில்லை.

போர்முனையில் ஏற்படும் பேராபாயங்களைக் கண்டு அஞ்சாத இந்திய வீரர்கள் சமாதான முனையில் தோன்றும் அற்ப ஆபத்துகளைக் கண்டு எதற்காகப் பின்வாங்க வேண்டும் என்று ஜவாஹர்லால்ஜி கேட்டிருக்கிறார்.

கலகம் நடந்த இடங்களுக்கு நேரில் சென்று மக்களின் வெறியைத் தணிக்க வேண்டும் என்பதே காந்தி காட்டிய வழியாகும்.

ஒருசமயம் கான்பூரில் நடந்த வகுப்புக் கலகத்தைத் தணிப்பதற்காகச் சென்ற வீரர் கணேச சங்கர் வித்தியார்த்தி அந்தப் புனித முயற்சியில் தமது உயிரையே தியாகம் செய்ததை யாரும் மறந்திருக்க முடியாது.

நவகாளியில் தலைவிரித்தாடிய வகுப்பு வெறியைத் தணிப்பதற்காக மகாத்மா காந்தி அப் பிரதேசங்களுக்கு யாதொரு பாதுகாப்புமின்றிக் கால் நடையாகச் சென்றதை யாவரும் அறிவார்கள். அதே வழியைப் பின்பற்றியே இப்போது நமது துருப்புகள் கொரியாவுக்குச் சென்றிருக்கின்றன.

எனவே அவர்களுடைய சமாதான முயற்சிக்கு முட்டுக்கட்டை போடுவோர் உலக சமாதானமாகிற உயரிய லட்சியத்துக்கு இடையூறு செய்தவர்கள் ஆகின்றனர்.

இந்த உலகில் மானிட வர்க்கத்துக்கு உதவியாகச் செய்யும் தன்னலமற்ற சிறிய தொண்டுக்கும் எத்தனை இன்னல்களும் இடையூறுகளும் ஏற்படுகின்றன என்பதையே கொரியாச் சம்பவங்கள் காட்டுகின்றன.

# நூற்றாண்டு விழா

இந்தியாவில் ரயில் வண்டியிலே பிரயாணம் செய்து அறியாத குக்கிராம வாசிகள் இருக்கிறார்கள். வரியே கொடுக்காத ஏழைகளும் இருக்கிறார்கள். ஆனால் உற்றார் உறவினருக்குக் கடிதம் எழுதாதவர்கள் அல்லது அவர்களிடமிருந்து கடிதம் வராதவர்கள் அநேகமாக இருக்க முடியாது. எனவே, இந்தியாவில் உள்ள முப்பத்தைந்து கோடி ஜனங்களுக்கும் நேரடியாகத் தொண்டு செய்யும் ஒரு ஸ்தாபனம் இருக்கிறதென்றால், அது தபால் தந்தி இலாக்காதான் என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

மேற்படி தபால் தந்தி இலாக்காவின் நூற்றாண்டு விழா நவம்பர் மாதம் முதல் தேதி புது டில்லியில் நிகழ்ந்தது. அந்த விழாவையும் அதன் சம்பந்தமான காட்சியையும் நமது ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரசாத் திறந்து வைத்தார்.

இந்தியாவில் லட்சக் கணக்கான கிராமங்கள் இருக்கின்றன. இரண்டாயிரம் ஜனங்களும், அதற்கு மேலும் வசிக்கும் சகல கிராமங்களிலும் தபால் ஆபீஸ்கள் இருக்கின்றன என்று ஜனாதிபதி பெருமையுடன் குறிப்பிட்டார்.

இந்தியாவிலேயே மிகவும் சிறந்த முறையில் நிர்வாகம் நடக்கும் இலாக்காக்களில் தபால் தந்தி இலாக்காவும் ஒன்று என்றும் அவர் கூறினார்.

சென்ற மகாயுத்தத்துக்குப் பின் தபால் தந்தி இலாக்காவில் புகுந்துள்ள சில குறைகளையும் சுட்டிக் காட்ட ஜனாதிபதி தயங்கவில்லை.

சிற்சில சமயங்களில் தபால்கள் போய்ச் சேர வேண்டிய இடங்களுக்குப் பல நாட்கள் தாமதித்துப் போவது உண்டு. தந்திகூட இரண்டொரு நாள் தாமதித்துப் போய்ச் சேருவது உண்டு அல்லவா! இதையெல்லாம் மனதிற் கொண்டே ஜனாதிபதி அவ்வாறு கூறியிருக்க வேண்டும்.

எனினும், ஜனாதிபதிக்கு வந்தனோபசாரம் கூறிய இந்திய சர்க்கார் உதவிப் போக்குவரத்து மந்திரி ஸ்ரீ ராஜ் பகதூர் தபால் தந்தி இலாக்காவில் ஏற்பட்டுள்ள அத்தகைய குறைகளுக்குக் காரணங்களை விளக்கிக் கூறினார்.

இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பு இருந்ததைக் காட்டிலும் இப்போது தபால், தந்தி, டெலிபோன் போக்குவரத்து பன்மடங்கு அதிகமாகி விட்டதே, சிற்சில சமயங்களில் தாமதத்துக்குக் காரணம் என்று அவர் குறிப்பிட்டார். சென்ற ஐந்து ஆறு வருஷங்களுக்குள் தபால் தந்தி இலாக்கா மிகவும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது என்றும் அவர் அறிவித்தார். மேற்படி இலாக்கா எதிர்காலத்தில் குற்றம் குறையின்றி நாட்டுக்குச் சிறந்த தொண்டு புரிந்து வரும் என்றும் அவர் ஜனாதிபதிக்கு உறுதி கூறினார்.

* * *

தபால் தந்திப் போக்குவரத்து சம்பந்தப்பட்ட சிற்சில அம்சங்களில் உலகிலேயே அமெரிக்காவுக்கு அடுத்தபடியாக இந்தியா தான் சிறந்து விளங்குகிறது என்று கூறப்படுகிறது.

இந்தியாவிலே தந்திக் கம்பிகளின் மொத்த நீளம் ஆறரை லட்சம் மைல் தூரம். அதாவது பூமியின் சுற்றளவைப் போல் முப்பது மடங்கு அதிகமாக இருப்பதாய்க் கணக்கு எடுத்திருக்கிறார்கள். உலகிலேயே மிகவும் உயரமான இமய மலைப் பிரதேசத்திலும் இந்திய சர்க்காரின் தந்திக் காரியாலயம் இருக்கிறதாம்.

அதேபோல் தந்தி தபால் இலாக்கா மற்ற அம்சங்களிலும் உன்னதமாக விளங்குவதன் மூலம் பொது ஜனங்களின் நம்பிக்கையையும் பாராட்டுதலையும் பெறுமென நம்புகிறோம்.

இவ்வாறாக இந்தியாவில் உள்ள ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கிராமவாசிக்கும் சிறந்த தொண்டு புரிந்துவரும் தபால் தந்தி இலாக்கா சுதந்திர இந்தியாவில் மேன் மேலும் அபிவிருத்தியடைந்து சுறுசுறுப்புக்கும் திறமைக்கும் நேர்மைக்கும் எடுத்துக் காட்டாக விளங்குமாக!

# ரஸிகமணி டி.கே.சி.



இம்பர் நாட்டில் செல்வம் எலாம்
எய்தி அரசாண் டிருந்தா லும்
உம்பர் நாட்டில் கற்பகக் கா
ஓங்கும் நீழல் இருந்தா லும்,—
செம்பொன் மேரு அனைய புயத்
திறல்சேர் இராமன் திருக்கதை யில்
கம்ப நாடன் கவிதையில் போல்க்
கற்றோர்க்(கு) இதயம் களியா தே.




கம்பர் தரும் ராமாயணம் அரங்கேற்று விழா திருக்குற்றாலத்தில் அக்டோபர் 31ல் வெகு சிறப்பாக நடந்தேறியது. இந்த விழாவுக்கு ராஜாஜி அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

1. தென்காசி ரயில்வே ஸ்டேஷனில் ராஜாஜிக்கு அளித்த குதூகல வரவேற்பு.

2. திருக்குற்றாலத்தில் ராமாயண அரங்கேற்ற விழாப் பந்தலுக்கு விழாத் தலைவர் ராஜாஜி அவர்களையும் ரசிகமணி டி. கே. சி. அவர்களையும் அழைத்துச் செல்லும் நீண்ட ஊர்வலம். (அலங்கரித்த யானை ஊர்வலத்தின் முன்னால் செல்ல நாதஸ்வர வாத்தியம் முழங்க ஆண்களும் பெண்களும் கலந்து சென்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது.)

3. ரசிகமணியும் ராஜாஜியும்.

4. ராஜாஜி, ரசிகமணி டி. கே. சி. அவர்களுக்குப் பொன்னாடை போர்த்துகிறார்.



5. விழாப் பந்தலில் பெண்மணிகள்.

6. தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்து திரளாக வந்திருந்த பிரமுகர்கள், உற்சாகத்துடன் ஊர்வலத்தில் நடந்து வருகிறார்கள்.

7. "கம்பர் தரும் ராமாயணம்" இதோ அரங்கேற்றமாகிறது.

8. விழாவில் கலந்து கொண்ட அறிஞர் பெருங் கூட்டம்.

9. திரு எஸ். எஸ். வாஸன் ரஸிகமணி அவர்களின் உயர்ந்த பண்பைப் பற்றிப் பாராட்டிப் பேசுகிறார்.

10. மேடையில் ஒரு தோற்றம்.

11. "கல்கி" காரியாலயத்தார் சார்பில் ரஸிகமணி அவர்களுக்கு ஒரு வாழ்த்துப் பத்திரம் வாசித்தளித்த பின், "கல்கி" மானேஜிங் டைரக்டர் திரு சதாசிவம் அவர்கள் மாலை அணிவித்து மகிழ்கிறார்.

12. பூர்ண கும்ப மரியாதை.

13. விழா கமிட்டியின் முக்கிய பிரமுகர்களில் ஒருவரான திரு கே. வி. எல். எம். ராமநாதன் செட்டியார் வரவேற்புரை நிகழ்த்துகிறார்.

★ ★ ★

# பாலிசி விஷயம்..






ஆயுள்
நெருப்பு
கப்பல்
விபத்து
மோட்டார்
வண்டிகள்
இயந்திரம்

ஒவ்வொரு நியூ
இந்தியா பாலிசியும்
உறுதி
சேவை
பந்தோபஸ்து
அளிக்கிறது

ஒவ்வொருநாளும் வழங்கப்படும் நூற்றுக்கணக்கான நியூ இந்தியா பாலிசிகளில் பல்வேறு விதங்கள் உள்ளன அவை பலவித அபாயங்களுக்கும் ஈடுசெய்கின்றன ஆனால் இப்பாலிசிகள் அனைத்திற்கும் ஒருவிஷயம் பொதுவானது ஏராள திரவியம் திறமையுடன் கூடிய முற்போக்கான நிர்வாகம். முன் ஜாக்கிரதையுடன் பண முதலீடு ஆகியவற்றின் பயனால் ஏற்பட்ட பந்தோபஸ்து யாவற்றிற்கும் பின்பலமாக உள்ளது.

**நியூ இந்தியா அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**
மகாத்மா காந்தி ரோட், பம்பாய்.




# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 51
## மணிமேகலை கேட்ட வரம்

சித்தப்பிரமை கொண்டவளைப்போல் அப்படியும் இப்படியும் பார்த்துத் திருதிருவென்று விழித்துக் கொண்டு மணிமேகலை உள்ளே வந்தாள். வானதி கூறியதைப்போல் அவளுடைய தோற்றம் பார்க்கப் பரிதாபமாயிருந்தது. அழுது அழுது அவளுடைய முகமும் கண்ணிமைகளும் வீங்கிப் போயிருந்தன.

ஆயினும் எக்காரணத்தினாலோ குந்தவைக்கு அவள் மீது இரக்கம் உண்டாகவில்லை. சமீப காலத்தில் சோழ குலத்துக்கு ஏற்பட்ட விபத்துகளுக்கெல்லாம் கடம்பூர் சம்புவரையர் மாளிகையிலே நடந்த சதியாலோசனைதான் ஆதி காரணம் என்பதை அவளால் மறக்க முடியவில்லை. கடைசியாக, வீராதி வீரனான தன் தமையன் கரிகாலன் அவளுடைய வீட்டிலேதான் கொலையுண்டு மாண்டான் என்னும் எண்ணமும் அவளுக்கு ஆத்திரம் மூட்டிக் கொண்டிருந்தது.

சட்டென்று, இன்னொரு விஷயம் ஞாபகம் வந்தது. இவளுடைய தமையன் கந்தமாறனும் வாணர் குலத்து வீரரும் பழைய சிநேகிதர்கள். அந்த சிநேகத்தை முன்னிட்டுத்தான் வந்தியத்தேவர் கடம்பூர் மாளிகைக்குச் சென்றிருந்தார். அங்கே நடந்த சதியாலோசனையைப் பற்றி அறிந்து வந்து சொன்னார். கந்தமாறன் தன் சகோதரியை வல்லத்து இளவரசருக்கு மணம் செய்து கொடுக்கும் உத்தேசமும் ஒரு காலத்தில் கொண்டிருந்தான். அந்தப் பெண் இவளாகத்தான் இருக்க வேண்டும்!......

இந்தச் செய்தி நினைவு வந்ததும், குந்தவைக்கு மணிமேகலையின் மீது ஒரு புதிய சிரத்தை உண்டாயிற்று. ஆகா! இவள் எதற்காகத் தன்னைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறாள்? தந்தைக்காகவும் தமையனுக்காகவும் முறையிடுவதற்கு வந்திருக்கிறாளா? சம்புவரையர் மாளிகைக்குத் தன் தமையன் கரிகாலனை அழைத்த போது, அவனுக்கு இப்பெண்ணை மணம் செய்து கொடுக்கும் பிரஸ்தாபமும் செய்யப்பட்டது. கரிகாலனிடம் ஒரு வேளை இந்தப் பேதைப் பெண் தன் உள்ளத்தைச் செலுத்தியிருப்பாளா? தான் மணக்க நினைத்தவன் அகால மரணமடைந்ததால் இவள் சித்தம் கலங்கி விட்டதா? அதைப் பற்றி ஏதேனும் சொல்ல வந்திருக்கிறாளா? அல்லது...... அல்லது...... ஒரு வேளை அப்படியும் இருக்கக் கூடுமோ? கந்தமாறன் தன் சிநேகிதனைப் பற்றி இவளிடம் சொல்லித்தானிருக்க வேண்டும். வந்தியத்தேவர் இவள் வீட்டில் தங்கியிருந்திருக்கிறார். முன்னால் ஒரு தடவை இருந்திருக்கிறார். இப்போது அதிக நாள் தங்கி இருந்திருக்கிறார். இவள் மனம் ஒரு வேளை வந்தியத்தேவரிடம் ஈடுபட்டிருக்குமோ? அப்படியானால், அவர் இவளை நிராகரித்திருப்பார் என்பதில் ஐயமில்லை. அதற்கு வஞ்சம் தீர்த்துக்

கொள்ளும் பொருட்டு இல்லாத பொல்லாத பழிகளையெல்லாம் அவர்மீது சுமத்த வந்திருக்கிறாளா?......

இவ்வளவு எண்ணங்களும் அதி விரைவாகக் குந்தவையின் உள்ளத் திரையில் தோன்றி மறைந்தன.

மணிமேகலையின் நெஞ்சத்தை ஊடுருவி அதில் உள்ளதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறவள் போல் குந்தவை உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வையைத் தாங்க முடியாமல் மணிமேகலை தலை குனிந்தாள். அவளுடைய கண்களிலிருந்து இரண்டு கண்ணீர்த் துளிகள் தரையில் சிதறி விழுந்தன.

"பெண்ணே! நீ ஏன் கண்ணீர் விடுகிறாய்? உன் தமையன் இன்னும் உயிரோடுதானே இருக்கிறான்? என் தமையன் அல்லவா உங்கள் மாளிகையில் படுகொலை செய்யப்பட்டு இறந்தான்? அழுதால், நான் அல்லவோ அழ வேண்டும்? ஆனால், என்னைப் பார்! நான் அழவில்லை; கண்ணீர் விடவும் இல்லை. மறக் குலத்து மாதர்கள் வீர மரணம் அடைந்தவர்களைக் குறித்து அழுவது வழக்கமில்லை!" என்றாள் குந்தவை.

மணிமேகலை இளைய பிராட்டியை நிமிர்ந்து நோக்கி, "தேவி! என் அண்ணன் வாள் முனையில் இறந்திருந்தால் நானும் அழ மாட்டேன். ஆனால், இறந்தவர்......இறந்தவர்......" என்று மேலே சொல்லத் தயங்கி விம்மினாள்.

குந்தவை தான் முதலில் சந்தேகித்தது தான் உண்மையாயிருக்க வேண்டும் என்று எண்ணத் தொடங்கினாள். இவள் ஆதித்த கரிகாலரிடம் தன் நெஞ்சைப் பறி கொடுத்திருக்கக் கூடும். அதைச் சொல்லத் தயங்குகிறாள் போலும்! ஐயோ, பாவம்! அப்படியானால் இவளுக்கு ஆறுதல் சொல்ல வேண்டியதுதான். "பெண்ணே! நெஞ்சைத் திடப்படுத்திக் கொள். மனத்தில் உள்ளதைத் தைரியமாகச் சொல்லு! இறந்து போனவன் உன் தமையன் அல்ல; என் அண்ணன்தான். அதற்காக நீ ஏன் அழ வேண்டும்? ஒருவேளை உங்கள் வீட்டில் விருந்தாளியாக வந்திருந்த போது இப்படியாகிவிட்டதே என்று நினைத்து வருந்துகிறாயாக்கும்! அதற்கு நீ என்ன செய்வாய்? வீட்டில் பெரியவர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். பொறுப்பு அவர்களுடையதே......"

"இல்லை, தேவி, இல்லை! பொறுப்பு என்னுடையதுதான்! அதனாலேயே எவ்வளவு அடக்கிப் பார்த்தும் என் துயரத்தை அடக்க முடியவில்லை. என் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதும் நிற்கவில்லை. இந்தக் கையில் பிடித்த கத்தியினால் அந்த வீராதி வீரரைக் கொன்றேன் என்று எண்ணும்போது என் நெஞ்சம் வெடித்துச் சிதள் சிதளாகி விடும்போல் இருக்கிறது......"

குந்தவை தேவி திடுக்கிட்டவளாய், "பெண்ணே! இது என்ன பிதற்றுகிறாய்? உனக்குச் சித்தப் பிரமை பிடித்து விட்டதா?" என்றாள்.

"இல்லை; இல்லை! எனக்குச் சித்தப் பிரமை இல்லை. பிடித்தால் இனிமேல்தான் பிடிக்க வேண்டும். உண்மையில் நடந்ததையே சொல்கிறேன். ஆதித்த கரிகாலரைக் கொன்றவள் இந்தப் பாதகிதான். தங்களிடம் உண்மையைச் சொல்லித் தக்க தண்டனை பெறுவதற்காகவே வந்தேன்......"

"சீச்சீ! இது என்ன அவதூறு? வீராதி வீரனாகிய என் தமையன் ஒரு பெண்ணின் கையால் கொலையுண்டதாக என்னை நம்பச் சொல்கிறாயா? இம்மாதிரி சொல்லும்படி உனக்கு யார் கற்பித்துக் கொடுத்தார்கள்?......"

"ஒருவரும் கற்பித்துக் கொடுக்கவில்லை, தேவி! நான் சொல்லுவதை யாரும் நம்பக்கூட மறுக்கிறார்கள். என் தமையனும் தந்தையும்கூட நான் சொல்வதை ஒப்புக் கொள்ளவில்லை......"

"ஏன் வீண் கதை சொல்லுகிறாய்? அவர்கள்தான் உனக்கு இவ்விதம் சொல்லும்படி கற்பித்திருக்க வேண்டும். அல்லது நீயே உன்னுடைய தந்தையையும் தமையனையும் காப்பாற்றுவதற்காக இப்படிக் கற்பனை செய்து கொண்டு வந்தாய் போலும்!......"

"தேவி! அவர்களை ஏன் நான் காப்பாற்ற முயல வேண்டும்! என் விருப்பத்துக்கு விரோதமாக அவர்கள் என்னை மணம் செய்துகொடுக்கப் பார்த்தார்கள். முதலில், மதுராந்தகத் தேவரைக் கட்டிக் கொள் என்றார்கள். பிறகு திடீரென்று ஆதித்த கரிகாலரை அழைத்து வந்து 'இவரைத்தான் நீ மணந்து கொள்ள வேண்டும். மணந்து கொண்டால் சோழ சிங்காதனம் ஏறுவாய்!' என்றார்கள். அப்படி என்னைப் பலி கொடுக்கப் பார்த்தவர்களுக்காக நான் பரிந்து ஏன் வரவேண்டும்? அவர்கள் செய்த குற்றத்தை நான் செய்ததாக ஏன் ஒப்புக் கொள்ள வேண்டும்? இல்லவே இல்லை!" என்று கூறினாள் மணிமேகலை.

"பெண்ணே! நீ சொல்லுவது ஒன்றை விட ஒன்று விசித்திரமா யிருக்கிறது. என் தமையன் கரிகாலனை மணந்து கொள்ளும் பாக்கியத்துக்காக எத்தனையோ ராஜாதி ராஜர்களின் குமாரிகள் தவங் கிடந்தார்கள். அப்படி யிருக்க, உன் தந்தையும் தமையனும் உன்னைப் பலி கொடுக்க விரும்பியதாக நீ சொல்லுவது ஏன்? சோழர் குலத்தில் வாழ்க்கைப் படுதல் அவ்வளவு பயங்கரமான துன்பம் என்று நீ கருதியது ஏன்?"

"தேவி! எனக்குக் கூடப் பிறந்த தமக்கையோ, தங்கையோ, யாரும் இல்லை. தங்களையே என்னுடைய உடன் பிறந்த சகோதரியாக நினைத்துச் சொல்கிறேன்......" என்றாள் மணிமேகலை.

"என் தமையனைக் கொன்றதாகச் சொல்லுகிறாய்; என்னுடன் சகோதரி உறவு கொண்டாட எப்படித் துணிகிறாய்?" என்று இளையபிராட்டி சற்றுக் கடுமையாகக் கேட்டாள்.

"எனக்கு அந்த உரிமை உண்டு. தங்கள் சகோதரர் கரிகாலர் என்னைக் கூடப் பிறந்த சகோதரியாக எண்ணினார். அவ்வாறு தம் கைப்பட எழுதியும் இருக்கிறார். அதை நினைக்கும்போது தான் அவரை நான் கொல்லும்படி நேர்ந்தது குறித்து என் உள்ளம் துடிக்கிறது. அதற்குப் பிராயச்சித்தம் என்னவென்று கேட்பதற்காகவே தங்களிடம் வந்தேன்!" என்று கூறிவிட்டு மீண்டும் விம்மினாள் மணிமேகலை.

இளையபிராட்டி வானதியிடம் மெதுவான குரலில், "பாவம்! இந்தப் பெண்ணுக்கு உண்மையிலேயே சித்தப்பிரமை தான்போலிருக்கிறது. இந்தச் சமயத்தில் இவளை அழைத்துக் கொண்டு வந்தாயே? திடீரென்று வெறி முற்றிவிட்டால் என்ன செய்கிறது?" என்றாள்.

வானதி "அக்கா! எனக்கும் கவலையாகத்தா னிருக்கிறது. தயவு செய்து கோபமாகப் பேசாதீர்கள். நல்ல வார்த்தையாகப் பேசி அவளைத் திருப்பி அனுப்பி விடுவோம்!" என்றாள்.

குந்தவை மணிமேகலையைப் பார்த்து, "பெண்ணே! நடந்தது நடந்து விட்டது. எல்லாம் விதியின் செயல்! வருத்தப்படாதே! என்னை உன் தமக்கையாகவே நீ பாவித்துக் கொள்ளலாம். ஏதோ சொல்ல வேண்டும் என்றாயே? அது என்ன? அல்லது நீ விரும்பினால் இன்னொரு சமயம் வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளலாம்!" என்றாள்.

"இல்லை, இல்லை; இப்போதே சொல்லி விடுகிறேன். அக்கா! தாங்கள் பெண்ணாய்ப் பிறந்தவர்கள். ஆகையால், நான் சொல்வதைத் தெரிந்து கொள்வீர்கள். புருஷர்களிடம் எவ்வளவு சொன்னாலும் அவர்களால் தெரிந்து கொள்ள முடியாது. ஒரு பெண் தன் உள்ளத்தை ஒருவருக்குக் கொடுத்து விட்டாள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்படிப் பட்டவர் கையில் ஆயுதம் ஒன்றுமின்றி நிராதரவாக இருக்கும்போது, இன்னொருவன் கையில் பெரிய வாளை எடுத்துக் கொண்டு அவரைக் கொல்லப் போகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது அந்தப் பெண் உண்மையான அன்புள்ளவள் என்றால், என்ன செய்வாள்? பார்த்துக் கொண்டு சும்மா இருப்பாளா?......"

குந்தவைக்கு உடனே மந்தாகினியின் நினைவு வந்தது. அவளுடைய கண்களில் கண்ணீர் துளித்தது.

"அது எப்படிச் சும்மா பார்த்துக் கொண்டிருப்பாள்? குறுக்கே சென்று தன் உயிரைக் கொடுத்தாவது தன் காதலனுடைய உயிரைக் காப்பாற்ற முயன்றிருப்பாள்!"

இதைக் கேட்ட மணிமேகலை, "ஆகா! இந்தமாதிரி யோசனை சொல்ல எனக்கு யாரும் இல்லாமற் போய் விட்டார்களே? அந்தப் பாதகி பழுவூர் நந்தினியின் யோசனையைக் கேட்டல்லவா மோசம் போய் விட்டேன்? என்னைத் தன் உடன் பிறந்த சகோதரியாகப் பாவித்து என் காதலருக்கு மணம் செய்து வைக்கவும் எண்ணியிருந்த உத்தமரை இந்தப் பாவியின் கைகளால் கொன்று விட்டேனே?" என்று சொல்லி விம்மினாள்.

இளையபிராட்டி குந்தவை தேவி திரும்பி வானதியைப் பார்த்து, "வெறி முற்றிக் கொண்டு வருகிறது!" என்று மெல்லிய குரலில் கூறினாள்.

பின்னர், மணிமேகலையை நோக்கி, "பெண்ணே! அழ வேண்டாம்! நடந்தது என்னவென்று சொல்லு! இல்லாவிட்டால், இன்னொரு சமயம் சொல்லுகிறாயா?" என்றாள்.

"இல்லை, இல்லை, இப்போதே சொல்லி விடுகிறேன். அக்கா! என் தமையன் கந்தமாறன் வெகுகாலமாகத் தன் சிநேகிதர் ஒருவரைப் பற்றி எனக்குச் சொல்லி வந்தான். அவர் சில மாதங்களுக்கு முன்னால் ஒரு நாள் கடம்பூரில் உள்ள எங்கள் மாளிகைக்கு வந்தார்.

அவரைப் பார்த்தவுடனேயே என் நெஞ்சம் 'இவர்தான் என் நாயகர்' என்று தீர்மானித்து விட்டது......"

இளையபிராட்டி குரலில் சிறிது நடுக்கத்துடனேயே "அப்படி உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பாக்கியசாலி யார்?" என்று கேட்டாள்.

"அவரைப் 'பாக்கியசாலி' என்று சொல்கிறீர்கள்? இல்லை, இல்லை. என் உள்ளம் அவரிடம் சென்றபோது, என் துரதிர்ஷ்டமும் அவரைப் பிடித்துக் கொண்டது. இன்று இந்தத் தஞ்சாவூர்க் கோட்டையின் பாதாளச் சிறையில் அவர் அடைபட்டுக் கிடக்கிறார். அக்கா! பழுவேட்டரையர் வீட்டுப் பெண்கள் சொன்னார்கள். இந்தக் கோட்டையிலுள்ள பாதாளச் சிறை ரொம்பப் பயங்கரமாக இருக்குமாமே? அதற்குள் அடைபட்டவர்கள் திரும்பு உயிரோடு வருவதில்லையாமே?" என்றாள்.

"அதெல்லாம் பொய், பெண்ணே! நானும் இதோ நிற்கும் வானதியும் பாதாளச் சிறைக்குச் சில காலத்துக்கு முன்பு கூடப் போயிருக்கிறோம்......"

"தேவி! நான் பாதாளச் சிறைக்குப் போக முடியுமா? ஒரு தடவை அவரைப் பார்க்க முடியுமா?"

"அவர் யார் என்று நீ இன்னும் சொல்லவில்லை, பெண்ணே!"

"அவர் வாணர் குலத்து இளவரசர்; பெயர் வந்தியத் தேவர்!"

குந்தவையும் வானதியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

வானதி இப்போது குறுக்கிட்டு, "அவரைப் பற்றி உனக்கு ஏன் இவ்வளவு கவலை? அவருக்கும் உனக்கும் என்ன உறவு?" என்று கேட்டாள்.

மணிமேகலை வானதியைப் பார்த்து, "நீ யார் அதைக் கேட்பதற்கு?" என்று ஆத்திரமாய்க் கூறினாள்.

உடனே தணிவடைந்து, "கோபித்துக் கொள்ளாதே, அம்மா! நீ கொடும்பாளூர் இளவரசி வானதி அல்லவா? உன்னுடைய பெரிய தகப்பனார்தானே இன்று இக்கோட்டையின் அதிபதியாக இருக்கிறார்? உன் காலில் விழுந்து கேட்டுக் கொள்கிறேன். எனக்கு ஒரு வரம் கொடு! உன் பெரிய தகப்பனார் பெரிய வேளாரிடம் சொல்லி வந்தியத்தேவரைப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை செய்! அவருக்குப் பதிலாக என்னைப் பாதாளச் சிறையில் போடச் சொல்லு! இளவரசர் கரிகாலரைக் கொன்ற பாதகி நான்! என் குற்றத்தை நானே ஒப்புக் கொள்ளும்போது, இன்னொருவர் பேரில் குற்றம் சுமத்துவது என்ன நியாயம்?......தேவி! தங்களையும் அடிபணிந்து கேட்டுக் கொள்கிறேன். கொடும்பாளூர் பெரிய வேளார் நியாயம் செய்யா விட்டால், தங்கள் தந்தை சக்கரவர்த்தியிடம் நேரில் முறையிட்டுக் கொள்ள விரும்புகிறேன். அதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும்!" என்றாள் மணிமேகலை.

குந்தவையின் உள்ளம் பல உணர்ச்சிகளால் அலைகடல் போலக் கொந்தளித்தது. வந்தியத்தேவரைப் பாதாளச் சிறையில் போய்ப் பார்ப்பதற்குக் கூட அவள் தயங்கிக் கொண்டிருந்தாள். இந்தப் பெண்ணோ வந்தியத் தேவரிடம் கொண்ட காதல் நிமித்தமாகக் கொலைக் குற்றத்தையே ஒப்புக் கொள்ள முன் வந்திருக்கிறாள்.

ஆனால் இவள் கூறுவதில் எவ்வளவு உண்மை? எவ்வளவு கற்பனை? காதலனைக் காப்பாற்றுவதற்காக இப்படிக் கற்பனை செய்து கூறுகிறாளா? ஒருவேளை நந்தினியின் துர்ப்போதனையைப் பற்றிக் கூறினாளே, அதனால் மதிமயங்கி இவளே அக்கொடிய செயலைச் செய்திருக்கவும் கூடுமா?

இல்லை, இல்லை; இவளால் அந்தப் பாதகத்தைச் செய்திருக்க முடியாது. வந்தியத் தேவரைக் கொலைக் குற்றத்திலிருந்து தப்புவிப்பதற்கே இவ்விதம் சொல்லுகிறாள். இவள் பேசும் விதத்திலிருந்தே இது நன்கு தெரிகிறது. இவள் பேச்சை யாரும் நம்ப மாட்டார்கள். இவள் பேச்சை நம்பி வந்தியத்தேவரை விடுதலை செய்யவும் மாட்டார்கள்.

ஆனாலும், இவளிடமிருந்து இன்னும் ஏதேனும் தெரிந்து கொள்ள முடியுமா என்று பார்க்க வேண்டும். கரிகாலனுடைய அகால மரணத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது என்பது நிச்சயம். அதை இந்தப் பெண்ணின் மூலமாக வெளிப்படுத்த முடியுமா?

"மணிமேகலை! உன் நெஞ்சின் உறுதியைப் பாராட்டுகிறேன். உன் காதலனைக் காப்பாற்றும் பொருட்டு நீ உன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொள்ள முன் வந்ததைப் பாராட்டுகிறேன். இம்மாதிரி அரிய செயல்களைக் கதைகளிலும் காவியங்களிலும்தான் கேள்விப் பட்டிருக்கிறோம். உன்னைப் பற்றிக் கவி பாடுவதற்குச் சங்கப் புலவர் யாரும் இந்த நாளில் இல்லாமற் போய் விட்டார்கள்.

ஆனால் உன் வார்த்தையை நான் நம்பி ஞலும், மற்றவர்கள் நம்ப வேண்டுமே? கரிகாலனுடைய உயிரற்ற உடம்புக்குப் பக்கத்தில் வந்தியத்தேவர் இருந்ததாக உன் தந்தையும் தமையனும் சொல்லு கிருர்களே? அவர்கள் பேச்சை நம்பு வார்களா? உன் வார்த்தையை நம்பு வார்களா? உன் வார்த்தையை நம்பு வதற்கு இன்னெரு தடையும் இருக் கிறது. வல்லத்து இளவரசரை நான் தான் அவசரமாக என் தமையனிடம் அனுப்பினேன். கடம்பூருக்குப் போகா மல் தடுத்து விடும்படி சொல்லி அனுப்பி னேன். அப்படிப் போனலும், கரிகாலனை விட்டு ஒரு கணமும் பிரியாமலிருந்து அவனுக்குப் பாதுகாப்பா யிருக்க வேண்டும் என்று சொல்லி அனுப்பி னேன். அன்றியும் கரிகாலனின் மெய் காவற்படையைச் சேர்ந்தவர் வல்லத்து இளவரசர். கரிகாலன் மரணமடையும் போது இவர் அருகில் இருந்திருக்கிருர். அப்படி யிருந்தும் அவனைக் காப்பாற்ற வில்லை. ஆகையினல் கடமையில் தவறி விட்டவராகிருர். தம் உயிரைக் கொடுத் தாவது கரிகாலனுடைய உயிரை இவர் காப்பாற்றி யிருக்க வேண்டும். இவரே கொல்லவில்லை என்று ஏற்பட்டாலும், கடமையில் தவறியதற்குத் தக்க தண் டனை உண்டல்லவா?"

"தேவி! அவர் தமது கடமையில் சிறிதும் தவறவில்லை."

"அதற்கு உன் வார்த்தையைத் தவிர வேறு என்ன அத்தாட்சி இருக்கிறது?"

"இதோ அத்தாட்சி இருக்கிறது! தங்கள் தமையனரின் எழுத்து மூல மான அத்தாட்சியே இருக்கிறது!" என்று கூறிக்கொண்டே மணிமேகலை தன் இடையில் செருகி யிருந்த ஓலை ஒன்றை எடுத்துக் கொடுத்தாள்.

குந்தவை அளவில்லா ஆர்வத்துடன் அந்த ஓலையைப் படித்தாள். ஆம்; ஆதித்த கரிகாலனின் சொந்தக் கையெழுத்துத்தான் அது. வேறு யாருக் கும் தெரியக் கூடாது என்பதற்காக அவனே எழுதியிருக்கிருன். குந்தவைக் குத்தான் மூகவரியிட்டு எழுதியுள்ளான்:-

"என் அருமைச் சகோதரியார், சக்கர வர்த்தி திருமகளார், இளையபிராட்டி யார் குந்தவை தேவிக்கு, ஆதித்த கரிகாலன் எழுதியது.

எத்தனையோ காலமாக எனக்கு இர வில் தூக்கம் கிடையாது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னல் ஒரு கொடிய பாவம் செய்தேன். சரணுகதி அடைந்த பகைவனைக் கொன்றேன். அவனும் அவனுக்காக உயிர்ப் பிச்சை கேட்டவ ளும் என்னை வருத்திக் கொண்டிருக் கிருர்கள். அவர்கள் என்னை நிம்மதி யாகத் தூங்க விடுவதில்லை.

இன்று அதிகாலையில் தூக்கமில்லாமல் வெளிவந்த போது வால் நட்சத்திரம் விழுந்து மறைவதைக் கண்டேன். என் உடம்பிலிருந்தும் ஏதோ அச்சமயம் போய் விட்டது. இப்போது வெறும் கூடு மாத்திரமே இருக்கிறது. சகோதரி! இந்தத் தூர் நிமித்தம் என்னேடு போகட் டும். நம் அருமைத் தங்கைக்கும் அருள் மொழிக்கும் ஒன்றும் நேராமல் ஏகாம் பர நாதர் காப்பாற்றட்டும்.

நானும் நீயும் நம் இளம்பிராயத்தில் சோழ ராஜ்யத்தின் உன்னதத்தைப் பற்றி எவ்வளவோ கனவு கண்டோம். அவற்றை என்னல் நிறைவேற்றக்கூட வில்லை. என் தம்பி நிறைவேற்றுவான். அவன் மூன்று உலகையும் ஆளப் பிறந் தவன். அவனுக்கு வல்லத்திளவரசன் வந்தியத்தேவன் துணைவனக இருப்பான்.

தேவி! வந்தியத்தேவன் நீ இட்ட பணி களை நன்கு நிறைவேற்றினன் என்று அறிந்து திருப்தி அடைந்தேன். இல்லா விடில் அவனை இங்கே இவ்வளவு முக் கியமான காரியத்துக்கு அனுப்பியிருக்க மாட்டாய். என்னை, என் விதியிலிருந்து, காப்பாற்ற அனுப்பி யிருக்க மாட்டாய்.

சகோதரி! இங்கே எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், அதற்கு என் விதி யும் என் பிடிவாதமும் தான் பொறுப்பே தவிர வந்தியத்தேவன் பொறுப்பு அல்ல. நீ சொல்லி அனுப்பியபடி அவன் என்னை இந்தக் கடம்பூர் மாளிகைக்கு வராமல் தடுக்க எவ்வளவோ முயன்றுன். இந்த மாளிகைக்கு வந்த பிறகு நிழலைப்போல் என்னைத் தொடர்ந்து கொண்டிருக் கிறன். அதற்காகவே இந்த வீட்டுப் பெண் மணிமேகலையைச் சிநேகம் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிருன். அவளுடைய உதவியினல், நான் போக உத்தேசித்திருக்கும் இடத்துக்கு முன்னதாகவே போய் ஒளிந்து கொண் டிருக்கிருன். எல்லாம் என்னைக் காப் பாற்றுவதற்காகத்தான்.

ஆனல் விதியிலிருந்தும் வினை வசத்தி லிருந்தும் ஒருவர் இன்னெருவரைக் காப் பாற்ற முடியுமா?

படம் எடுத்து ஆடும் நாக சர்ப்பத்தின் மோகன சக்தியினல் கவரப்பட்ட சிறிய பிராணிகள் தாங்களே வலியச் சென்று

அப்பாம்புக்கு இரையாகி மடியும் என்று கேள்விப்பட்டிருப்பாய்.

அம்மாதிரியே நானும் நந்தினியிடம் போகிறேன். அவள் நம் சகோதரி என்று எனக்கு எச்சரிக்கை அனுப்பியிருக்கிறாய். அதை நம்ப முடியவில்லை. ஆயினும் அவள் விஷயமான மர்மம் ஏதோ ஒன்று இருக்கிறது. அதை அறிந்து கொள்வதற்கே போகிறேன். எப்படியும் இன்று உண்மையை அறிந்து கொள்வேன்.

என் விதி என்ன ஆனாலும், வந்தியத்தேவன் பேரில் குற்றம் யாதுமில்லை. அவன் உன் கட்டளையைச் சரிவர நிறைவேற்றி வருகிறான். சகோதரி! அந்த மாய மோகினி நந்தினியின் வலையில் கந்தமாறனும், பார்த்திபேந்திரனும் அடியோடு விழுந்து விட்டார்கள். அப்படி விழாமல் தப்பிப் பிழைத்தவன் வந்தியத்தேவன் ஒருவன்தான்.

அவனுக்கு என்ன பரிசு கொடுப்பது என்று எனக்குத் தெரியவில்லை. இந்த வீட்டில் மிகக் குடிகையான பெண் ஒருத்தி இருக்கிறாள். என் உடன் பிறந்த சகோதரியைப் போல் அவள் பேரில் எனக்குப் பிரியம் உண்டாகி விட்டது. மணிமேகலையை வந்தியத்தேவனுக்குத் திருமணம் செய்வித்தால், அவனுக்கு நல்ல பரிசாக இருக்கும். ஆனால், சகோதரி, உனக்கு இது சம்மதமாக இருக்குமோ, என்னமோ, தெரியாது.

என் அருமைத் தங்காய்! இந்த ஓலையை அந்தப் பெண்ணிடந்தான் ஒப்புவிக்கப் போகிறேன். நல்ல வேளையாக அவளுக்குப் படிக்கத் தெரியாது. அவளைக் குறித்து உன் விருப்பம் எப்படியோ அப்படிச் செய்! நம் குடும்பத்தில் நீயே மிகச் சிறந்த அறிவாளி. உன் வார்த்தையை நான் தட்டி நடந்தேன். அதன் பலனை அநுபவிக்கப் போகிறேன். தம்பி அருள்மொழியாவது உன் யோசனைப்படி நடந்து சோழ சாம்ராஜ்யத்தை மகோந்நத நிலைக்குக் கொண்டு வருவானாக..."



இந்த இடத்தில் எழுத்து நின்று போயிருந்தது. ஓலையைப் படித்து முடிக்கும்போது குந்தவையின் கண்களிலிருந்து கண்ணீர் சொரிந்தது.

கண்களைச் சட்டென்று துடைத்துக் கொண்டு மணிமேகலையைப் பார்த்து, "பெண்ணே! இந்த ஓலை உன்னிடம் எப்படி வந்தது? யார் கொடுத்தார்கள்?" என்று கேட்டாள்.

"தேவி! இளவரசரே என்னிடம் கொடுத்தார். அவரைப் பற்றி நந்தினி என்னவெல்லாமோ தவறாகச் சொல்லியிருந்தாள். ஆகையால் எனக்குத்தான், காதல் ஓலை எழுதியிருக்கிறார் என்று முதலில் நினைத்துக் கொண்டேன். இதைத் தீயில் போட்டுப் பொசுக்கிவிட எண்ணினேன். பிறகு, என்னதான் எழுதியிருக்கிறார் என்று பார்க்கலாம் என்று நினைத்துப் பத்திரப்படுத்தி வைத்தேன். என் தோழி சந்திரமதியிடம் கொடுத்துப் படித்துக் காட்டச் சொன்னேன். என்னைத் தம் உடன் பிறந்த சகோதரி என்று எழுதியிருக்கும் வீர புருஷரை இந்தக் கைகளினால் கொன்று விட்டேன் என்று எண்ணும்போது என் நெஞ்சு துடிக்கிறது. தேவி! படுகொலை செய்த பாதகிக்கு என்ன தண்டனை உண்டோ அதை எனக்குக் கொடுக்கும்படி செய்யுங்கள்!" என்று வேண்டினாள் மணிமேகலை.

அவளுடைய பரபரப்பும், அவள் பேசிய விதமும், அவள் இதைக் கற்பனை செய்து சொல்லுகிறாள், வந்தியத் தேவரைக் காப்பாற்றுவதற்காகச் சொல்லுகிறாள் என்பதை நன்கு வெளிப்படுத்தின. குந்தவை அதை அறிந்து கொண்டாள். ஆயினும் அவள் கொண்டு வந்த ஓலை கற்பனை அல்ல. அது கரிகாலரின் சொந்த எழுத்து. வந்தியத் தேவரைச் சிறை மீட்கவும் பயங்கரமான கொலைக் குற்றம் அவர்மீது சாராமல் தடுக்கவும் இந்த ஓலையே போதும். இந்தப் பெண் வாயை மூடிக்கொண்டிருந்தால் ரொம்ப அநுகூலமாயிருக்கும். ஆனால் எப்படி இப் பெண்ணைச் சும்மா இருக்கப் பண்ணுவது?

"மணிமேகலை! இன்னமும் கரிகாலரை நீதான் கொன்றதாகச் சாதிக்கிறாயா!" என்று கேட்டாள்.

"ஆம், தேவி!"

"இந்த ஓலையைப் படிக்கச் சொல்லிக் கேட்டதாகச் சொல்கிறாய். இதில் உன்னை உடன் பிறந்த சகோதரி என்று கரிகாலன் குறிப்பிட்டிருக்கிறான். அவ்வளவு உன்மேல் பிரியம் வைத்திருந்
வனை நீ எதற்காகக் கொல்ல வேண்டும்?

"ஓலையை முன்னதாகப் படித்திரு
தால் அந்தப் பயங்கரமான காரியத்தை
செய்திருக்க மாட்டேன். அவருடைய
மனத்தை அறியாமல் செய்து விட்டேன்
அந்த வஞ்சகி நந்தினியும் என் மன
தைக் கெடுத்து வைத்திருந்தாள்."

"எந்த விதத்தில் கெடுத்திருந்தாள்?"

"வந்தியத்தேவர் மீது கரிகாலர் துவே
ஷம் கொண்டிருப்பதாகவும், அவரை
கொன்றாலும் கொன்று விடுவார் என்று
அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள்
அதற்குத் தகுந்தாற்போல கரிகாலரு
கையில் வாளைத் தூக்கிக் கொண்டு
'எங்கே அந்த வந்தியத்தேவன்? அவனை
இதோ கொன்று விடுகிறேன்?' என்று
கூத்தாடவே, நான் உண்மையென்று
நம்பி விட்டேன். உடனே என் கைய
லிருந்த கத்தியினால்......"

"பெண்ணே! இந்தப் பேச்சை விட்
விடு. வீராதி வீரனாகிய ஆதித்த க
காலனை ஒரு அபலைப் பெண் கொன்றாள்
என்பதை நான் நம்பினாலும் உலக
நம்பவே நம்பாது."

"தேவி! வேறு யார் கொன்றிருக்க
முடியும்? கரிகாலருடைய உடல் கிடந்
இருட்டறையில் வந்தியத் தேவரு
நானும் மட்டுமே இருந்தோம். அவ
கொல்லவில்லை. பின்னே, நான்தானே
கொன்றிருக்க வேண்டும்?"

"நீ இப்படிச் சொல்வதினால் இறந்து
போன என் தமையனுக்கு அபகீர்த்தி
உண்டாக்குகிறாய். மேலும் இன்னொன்று
யோசித்துப் பார்! வாணர் குலத்து இள
வரசர் நீ கொலைக் குற்றம் செய்தா
என்பதை ஒப்புக் கொண்டு சும்மா இரு
பாரா? நீ அவரைக் காப்பாற்ற விரும்
வது போல் அவர் உன்னைக் காப்பாற்,
விரும்ப மாட்டாரா? நீ பிடிவாதமாக
சொல்வது போல் அவரும் 'நான்தா
கொன்றேன்' என்பார். நீ பெண் எ
பதற்காக உன்னை ஒருவேளை மன்னித்
விடுவார்கள். அவரை மன்னிக்க மா
டார்கள். இராஜ குலத்தினரை
கொன்ற துரோகிகளுக்கு எவ்வள
பயங்கரமான தண்டனை விதிக்கப்படு
என்று உனக்குத் தெரியும் அல்லவா
நாற்சந்தியில் நிறுத்தி வைத்து......"

இதைக் கேட்ட மணிமேகலை 'ஓ
வென்று அழுது விட்டாள். தேம்
அழுது கொண்டே "அக்கா! தாங்க
தான் அவரைக் காப்பாற்ற வேண்டும்
என்று கதறினாள். (தொடரு

# அன்றாடம் இரண்டே நிமிஷங்கள் தேவை நீங்கள் பூரண எழிலுடன் திகழலாம்



பிரதி இரவிலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் சருமத்தில் தடவி நன்கு தேயுங்கள் — ஒரே ஒரு நிமிஷம் தான் ஆகும். அதிலுள்ள எண்ணெய்கள் சருமத்தில் ஊடுருவிச் சென்று, மயிர்க் கால்களில் படிந்திருக்கும் சிறு சிறு அசிங்கையும் அழுக்கையும் வெளியேற்றி விடுகிறது. சருமத்தை மெதுவாகத் துடைத்து, அது எவ்வளவு பரிசுத்தமாக விளங்குகிறதென்பதைப் பாருங்கள்.

இவ்வற்புத க்ரீமை இன்னும் கொஞ்சம் எடுத்து முகத்திலும் கழுத்திலும் பூசிக் கொள்ளுங்கள் இரவு முழுவதும் அது அப்படியே இருக்கட்டும். காலையில் எழுந்தவுடன் உங்கள் மேனி மிக துல்லியமாயும் பூரண பொலிவுடனும் விளங்குவதைக் கண்டு அதிசயிப்பீர்கள்.

முக சிங்காரிப்புக்குத்தான், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவிக்கொண்டால் அதன் மேல் பௌடர் பூசுவது மிக எளிது — அழகாயுமிருக்கும். ஞாபகமிருக்கட்டும்.






பிரதிதினம் காலையிலும் ஒரு நிமிஷம் உங்கள் முகத்தில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மெதுவாகத் தடவுங்கள். அது பூரணமாக மறைந்து விடும். சருமம் பட்டுப்போன்று மழமழப்பாகவும் அற்புத சோபையுடனும் விளங்கும்.

கண்ணுக்குப் புலப்படாத வகையில் முகத்தில் மறைந்துள்ள இந்த பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் திரைப்படலம் பகல் முழுவதிலும் உங்கள் எழிலைப் பாதுகாக்கும். உங்கள் மிருதுவான சருமத்திற்கு இந்த பாதுகாப்பு அவசியம்—முக்கியமாக வரட்சைக் காற்றிலும் சூரிய கிரணங்களின் வெப்பத்தாலும் சருமம் துவண்டு போகாமல் காப்பாற்றி வர அத்யாவசியம்.

உங்கள் சருமத்திற்கு இவ்விரட்டை பராமரிப்பு ஒவ்வொரு நாளும் தேவை. பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையும் அன்றாடம் தவறாமல் உபயோகித்து உங்கள் அழகிற்கு அழகு ஊட்டுங்கள்!



உலகில் எங்குமே பெண்மணிகள் தங்கள் எழிலை புதுமை குன்றாமல் பாதுகாக்க பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையுமே உபயோகிக்கின்றனர். அவர்கள் இயற்கை அழகின் இரகசியம் அதுதான்.

**பாண்ட்ஸ்**

P. 8513

# வேளை வந்தது!

ஞானம்

மணியார்டர் பாரத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டுத் தபால்காரர் தந்த பணத்தை எண்ணி எடுத்துக் கொண்டேன். முதல் வாரம் பத்திரிகையில் வெளியான என் கதைக்குப் பரிசு அது. 'உங்க அப்பாவுக்கு ஒரு கவர் இருக்கம்மா' என்று தபால்காரர் ஒரு கடிதம் தந்தார். அப்பா வீட்டில் இல்லை. மேஜை மேல் கடிதத்தை வைத்துவிட்டு நான் மாடிக்குப் போய் விட்டேன். என் மனம் எல்லை யில்லாத மகிழ்ச்சியில் மூழ்கியிருந்தது. அதற்குக் காரணமும் இருந்தது. அடுத்த வாரம் எனக்குக் கல்யாணம் நடப்பதாக நிச்சயமாகி இருந்தது.

அவர், என் கணவராக வரப்போகிற ராம மூர்த்தியைப் பற்றி எனக்கு வெகு திருப்தி. அவரைப் பற்றிய விவரங்களைக் கேட்டதுமே, அவர் பெற்றோர்களைப் பார்த்ததுமே நான் சம்மதித்து விட்டேன். சுந்தர ரூபமும், இனிய குணங்களும் படைத்த ராமமூர்த்தி யைக் கண்டதும், 'இவரைக் கணவனாக அடைவது பூர்வபுண்ய விசேஷம் தான்' என்று தீர்மானித்துக் கொண்டேன்.

முதல் நாள் ராமமூர்த்தியின் தாயாரும் தந்தையும் மட்டும் வந்திருந்தனர். இருவருமே நல்ல பண்பாடு உள்ளவர்கள். மாமனாராக வரப் போகிறவர் 'என்ன படித்திருக்கிறாய்? வீட்டில் எப்படிப் பொழுது போக்குகிறாய்?' என்றெல்லாம் விசாரித்தார். நான் பத்திரிகைகளுக்குக் கதைகளும் இலக்கியக் கட்டுரைகளும் எழுதுகிறேன் என்று கேட்டு அவருக்கு வெகு சந்தோஷம். என் கட்டுரைகளை அவர் படித்திருப்பதாகவும், நன்றாயிருந்ததாகவு கூறினார். அவர் சம்ஸ்கிருதம் நன்கு படித் வர். ஆங்கிலம், தமிழ் இலக்கியங்களி னைத் தினைத்தவர் என்று பேச்சிலே தெரிந்தது. கணவனுக்குத் தகுந்தவரா இருந்தாள் அவர் மனைவி. அந்த அம்மா பரம ரசிகை. பெண் பார்க்க வந்த இடத்தி சம்பாஷணை இலக்கியச் சர்ச்சையாகவே இருந்தது! அவர்களுக்கு என்னைப் பிடித் விட்டதாம். மறுநாள் பிள்ளையை அனுப்பு தாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டனர்.

அந்தக் குடும்பத்தில் வாழ்க்கைப்படப் பா கியம் செய்திருக்க வேண்டும் என்பதில் ச தேகமில்லை. அறிவாளிகளும், ரசிகர்களுமா மாமனார், மாமியாரின் உதவியால் என் எழுத் வன்மை வளம் பெறும் என்று எனக்கு வெ மகிழ்ச்சி. பற்பல நூல்களைக் கற்பது போல வும், கணக்கற்ற இலக்கியச் சொற் பொழி கள் நிகழ்த்துவது போலவும், அகில இந்திய விலும் சிறந்த எழுத்தாளி என்று பாரா டப் பெறுவது போலவும் நான் கற்பனை செய்து மகிழ்ந்தேன்.

ராமமூர்த்தி 'முதலெடுத்ததுமே மாமியா மாமனாரைக் கைக்குள் போட்டுக் கொண் விட்டாயே! நீ கெட்டிக்காரிதான்' என் சொல்லிச் சிரித்தார். அவருக்கும் என்னை பிடித்து விட்டது.

லௌகிக விஷயங்கள் ஒரு சிறு தகரா கூட இல்லாமல் நிச்சயமாகி விட்ட 'உங்கள் இஷ்டத்துக்கும், சக்திக்கும் தக்கப எது செய்தாலும் சரி' என்று கூறிவிட்ட ராமமூர்த்தியின் தந்தை. 'இந்தக் காலத்தி இப்படியும்கூட ஒரு பிள்ளை வீட்டுக்காரர்க உண்டா?' என்று ஆச்சரியப்பட்டுப் போன அப்பா. அவர்கள் எதுவும் வற்புறுத்தவில் என்பதற்காகத் தம் பெண்ணுக்குச் செய் தைக் குறைப்பாரா? அப்பா என் கல்ய ணத்தை மிக விமரிசையாக நிறையச் செனத்திகளுடன் நடத்தத் திட்டமிட்டா வேண்டிய ஏற்பாடுகள் நடந்து கொண்டிரு தன. அழைப்புப் பத்திரிகை அச்சடிக்க




கொடுப்பதற்கா அப்பா அச்சாபீசு குப் போயிருந்தா நான் யோசனை யில் ஆழ்ந்தேன் அன்று கதையி பரிசாக இருப தைந்து ரூபா வந்திருந்தது. அ பணத்துக்கு, ஏதாவது ஒரு கிர தரமான அழகிய பொருளை வாங்கி என் அன்பின் சின்னமா என் உள்ளம் கவர்ந்தவருக்கு பரிசளிக்க வேண்டும். என்ன பொருள் வாங் லாம்? என்று யோசித்துக் கொண்டிருந்தேன் மனம் சுற்றிச் சுற்றி அந்தக் கதையில் வந் நிலைத்தது. மேஜை மேலிருந்த பத்திரிகைகளை




எடுத்து நூறாவது தடவையாக என் கதையைப் படிக்க ஆரம்பித்தேன். எழுத்து எழுத்தாக ஸ்வானு பூதியுடன் சுவைத்தேன் என்றால் அதில் ஒரு விசேஷம் இருந்தது. அதுதான் நான் எழுதிய முதல் காதல் கதை. காதலும் கல்யாணமும் வரும் கதைகளைப் படித்துப் படித்து அலுத்துப் போன நான் 'காதல் கதையே எழுதக் கூடாது' என்ற தீர்மானத்துடன் வேறு எதை எதையெல்லாமோ விஷயங்களாக வைத்துக் கதை எழுதி வந்தவள்.

ராமமூர்த்தியைப் பார்த்த அன்று என் தீர்மானத்தையும் மீறி ஏதோ ஓர் உணர்ச்சியால் உந்தப் பட்டு அந்தக் கதையை எழுதினேன். அதில் வந்த காதலனாக ராமமூர்த்தியையும், காதலியாக என்னையுமே வைத்து உருவகப் படுத்தி யிருந்தேன் என்பதில் சந்தேகம் இல்லை. அதைப் படிக்கும்போதெல்லாம் எனக்கு வெட்கம் பிடுங்கியது. ராமமூர்த்தி படித்தால் எப்படிக் கேலி செய்வாரோ என்று நினைக்கும் பொழுது என் உள்ளம் சிலு சிலுத்தது. அசட்டுத் துணிச்சலுடன்தான் அதைப் பத்திரிகாலயத்துக்கு அனுப்பி வைத்தேன். அழகிய படங்களுடன் அது பிரசுரமும் ஆகிவிட்டது. ராமமூர்த்திக்கு என் அன்பின் சின்னமாக அந்தக் கதையே அமைந்து விட்டது. அதைவிட வேறு எந்தப் பரிசு அதற்குச் சமமாக இருக்க முடியும்?

'ஜானகி!' என்று அப்பா கூப்பிட்டார். திடுக்கிட்டு எழுந்த நான் "என்னப்பா?" என்று கேட்டுக் கொண்டே அவரை அணுகினேன்.

அப்பா மௌனமாக ஒரு கடிதத்தை நீட்டினார். அது அன்று தபாலில் வந்த கடிதம். கையெழுத்தைப் பார்த்து ராமமூர்த்தியின் தந்தை சத்திய மூர்த்திதான் எழுதி யிருக்கிறார் என்று அறிந்து, அவசர அவசரமாகக் கடிதத்தைப் படித்தேன்.

"அன்புள்ள நண்பருக்கு,

இக் கடிதத்தை மிகுந்த வருத்தத்துடன் எழுதுகிறேன். சென்ற வாரப் பத்திரிகையில் செள. ஜானகியின் கதையைப் படித்தோம். 'சிருங்கார ரசத்தை வர்ணிப்பதில் காளிதாசன் தோற்றான் ஜானகியிடம்' என்றாள் என் மனைவி. உயர்ந்த முறையில் அமைந்த இனிய கதை. ராமமூர்த்தியும் படித்தான். இலக்கிய ரசனை இல்லாத மடையன்! கவி உள்ளத்தின் அருமையை அறியாத மூடன்! அவனை வேறு என்ன சொல்லட்டும்!

'ஸ்வானுபவம் இல்லாது இவ்வளவு அழகாக இந்தக் காதல் கதையை எப்படிச் சித்தரிக்க முடியும்! இந்தப் பெண்ணின் ஒழுக்கத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை. இவளை நான் மணக்க முடியாது' என்கிறான். இதை எழுதவே எனக்குக் கஷ்டமாக இருக்கிறது.

'அட பாவி! அபாண்டமாக ஒரு பெண்ணின் நடத்தைக்கு மாசு கற்பிக்காதே. கற்பனை செய்யும் உள்ளத்துக்கு அனுபவம் அனாவசியம்' என்று எத்தனையோ விதமாக ஆதாரங்களுடன் என் மனைவியும், நானும் பலவிதமாகப் புத்தி கூறியும் அவன் பிடிவாதம் தளரவில்லை. உங்கள் பெண்ணை, எங்கள் மாட்டுப் பெண்ணாக்கிக் கொள்ள நாங்கள் புண்ணியம் செய்யவில்லை. அவ்வளவுதான்!

சென. ஜானகிக்கு, எல்லா விதத்திலும் தகுந்த கணவன் கிடைக்க வேண்டும் என்பதே என்னுடைய பிரார்த்தனை. இப்படிக்கு,

சத்தியமூர்த்தி.''

என் கண்களிலிருந்து கங்கு கரையில்லாமல் நீர் வழிந்தது. என்னால் எதுவும் பேச முடியவில்லை. எதிர் ஜாமீன், சீர் தகராறு, ஜாதகம் சேரவில்லை, சகுனம் சரியில்லை, பெண் அழகில்லை என்ற காரணங்களால் கல்யாணம் தடைப்படுவது சகஜம். அப்படித் தடைப்பட்டிருந்தால் எனக்கு அத்தகைய விசனம் ஏற்பட்டிருக்காது.

என் நடத்தைக்கே களங்கம் கற்பிக்கும் காரணம் காட்டி என்னை நிராகரித்ததை நான் எப்படிப் பொறுப்பேன்? மனம் கொண்ட மட்டும் அழுது தீர்த்தேன். அக் கடிதம் வீட்டில் அனைவருக்குமே ஒரு அதிர்ச்சியாக இருந்தது. அம்மா, ''கதை எழுதுவது பொழுது போக்குத்தானே? எழுதும் வழக்கத்தையே விட்டுவிடச் சொல்லலாம். அப்படியாவது சம்மதிப்பானா என்று கேட்டுப் பாருங்கள்'' என்று கூடச் சொன்னாள்.

அப்பாவுக்கு இஷ்டமில்லை. ''அந்த முட்டாளைப் போய் நான் இனி பார்க்க மாட்டேன்'' என்று மறுத்து விட்டார்.

ராமமூர்த்தி......! அவர்மேல் எனக்குக் கோபமில்லை. அவரை வெறுக்க என் மனம் துணியவில்லை. அதற்குப் பதில் அதிகமாக நேசித்தேன். 'அவர் அறிவாளிதான்; நல்லவர்தான். என் கெட்டகாலம் அவரை அப்படி நினைக்கச் செய்தது' என்று 'வேளை' மீதுதான் முழுப்பழியையும் சுமத்தினேன்.

ராமமூர்த்திக்கு மணமாகி விட்டதாம். இனி அவர் எனக்கு எட்டாக் கனி. அப்பா முழு முயற்சியுடன் வரன் தேடிக் கொண்டிருந்தார். நல்ல 'வேளை' வரவில்லை. கல்யாணம் தள்ளிப் போய்க் கொண்டே இருந்தது. அது பற்றி நான் நினைப்பதே இல்லை. என்றைக்கோ ஒரு நாள், யாரோ ஒருவருடன் நடக்கும். அது பற்றி எதற்கு நினைத்து வருந்த வேண்டும்? என்று எண்ணினேன். படிப்பும், எழுத்துமே என் மனத்தை ஆக்ரமித்துக் கொண்டிருந்தன.

வருஷங்கள் நாலு உருண்டோடி விட்டன. நான் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரபல எழுத்தாளியாகி விட்டேன். என் பேனா சோகக் கதைகளாகவே வரைந்து தள்ளிக் கொண்டிருந்தது. காதல் கதைகள் எழுத நான் முயற்சித்தால்கூட முடியவில்லை. அந்தப் பாழும் கதை, என் வாழ்வைப் பாழாக்க வந்த கதை, என்னையும் ராமமூர்த்தியையும் பிரித்து என்னைக் கன்னியாக வைத்திருக்கத்தான் உதயமாயிற்றோ, என்னமோ?

பத்திரிகையில் என்னுடைய கதை பிரசுரமாயிற்று. அன்பான மனைவி இறந்து, மனைவியை இழந்த கணவன் படும் துயரை வர்ணிக்கும் சோகச் சித்திரம் அது. அம்மா அதைப் படித்துவிட்டு 'ஹோ' வென்று அழுது விட்டாள். அப்பா வெதும்பிய மனத்துடன், ''ஏன் அம்மா இவ்வளவு கோரமான கதைகளை எழுதுகிறாய்? மனைவியை இழந்த அவன் படும் துன்பம் கண்றாவியாக இருக்கிறதே! இனிமேல் இப்படி எழுதாதே, மகா பாவம்'' என்றார்.

மாலையில் வீட்டு வாசலில் ஒரு டாக்ஸி நின்றது. அதிலிருந்து இறங்கியது யார் என்று நினைக்கிறீர்கள்?— ராமமூர்த்தி! அவர்தான் எப்படி இளைத்துக் கறுத்துப் போயிருந்தார்! என்ன காரணம்?

நான் உள்ளே ஓடி விட்டேன். அப்பா ராமமூர்த்தியை வரவேற்றார். கூடத்தில் வந்து உட்கார்ந்த ராமமூர்த்தி முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு விம்மி விம்மி அழுவது ஜன்னல் வழியாகத் தெரிந்தது. ஒன்றும் புரியாத அப்பா, ராமமூர்த்தியைச் சமாதானப் படுத்த முடியாமல் தவித்தார்.

ராமமூர்த்தி ''ஜானகி எங்கே? வரச் சொல்லுங்கள்!'' என்றார். நான் தயங்கித் தயங்கி வெளியே வந்தேன்.

''ஜானகி! நீ என்னை மன்னிக்க வேண்டும். உன் கவி உள்ளத்தின் அருமையை அறியாமல், ஒரு கற்பனையைக் கொண்டு, உன் ஒழுக்கத்துக்கே பழுது கூறி உன்னை நிராகரித்ததற்குப் பதிலாக நானும் பெரிய துக்கத்தை அனுபவித்து விட்டேன். என் மனைவி சீதா என்னைத் தவிக்க விட்டு விட்டு இறந்து விட்டாள். அந்தத் துக்கத்தில் ஆறு மாசமாக நான் உருகி நைந்தேன். இன்று உன் கதையைப் படித்து விட்டு அழுததுபோல் சீதா இறந்த அன்று கூட அழவில்லை. சீதாவை இழந்து வருந்தும் என் நிலையையே சித்தரிக்கும் அந்தக் கதை என் மனசை உலுக்கி விட்டது. நீ இதை எப்படி எழுதினாய்? ஒரு பெண், ஒரு ஆணின் மன உணர்ச்சியை எப்படி நுட்பமாக அறிய முடிந்தது என்று நான் ஆச்சரியப்பட்டது கொஞ்சமில்லை. 'கதாசிரியனின் கற்பனைக்கு எட்டாத உணர்ச்சியே உலகில் இல்லை. இந்தச் சோகக் கதையும் கற்பனைதான்; அந்தக் காதல் கதையும் கற்பனைதான்' என்று அப்பா வற்புறுத்திக் கூறவும் என் கண்கள் திறந்தன. உனக்கு இழைத்த துரோகத்துக்காக வருந்துவதைக் கூறவும் எனக்குச் சக்தி இல்லை. என்னை மன்னித்து ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று படபடவென்று பேசி நிறுத்தினார் ராமமூர்த்தி. அவர் கண்களில் நீர் ததும்பிற்று.

''வேளை' வந்து விட்டது. நான் ராமமூர்த்தியின் மனைவியாகிவிட்டேன். என் எழுத்துத் தொழிலுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிக்கும் அறிவாளியும், ரசிகருமான சத்தியமூர்த்தி தம்பதியின் மருமகளாகி விட்டேன். ஆனால் கல்யாணத்துக்குப் பின் நான் எழுதுவதையே விட்டுவிட்டேன். என் வாழ்வில் 'கற்பனை' செய்த 'கூத்தை' நினைத்தால் கற்பனைத் திறன் செத்து மடிந்து விடுகிறது. இன்று நான் எல்லோரையும் போல் கணவன், குடும்பம் என்ற கவலையில் உழலும் ஒரு சாதாரணக் குடும்பப் பெண்தான்.

# மதராஸ் கார்ப்பரேஷன் உத்யோகஸ்தர்கள் கோவாபரேடிவ் பாங்க் லிமிடெட்

ஸ்தாபிதம் : 1920

**மதராஸ் கார்ப்பரேஷன் : ரிப்பன் பில்டிங் : மதராஸ்**

○●○

மேற்படி பாங்கியின் முப்பதாவது ஆண்டு பூர்த்தி விழாவை ஒட்டி பிக்ஸட் டெபாஸிட்டுகள் கீழ்க்கண்டவாறு விசேஷ கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் சேர தீர்மானிக்கப் பட்டுள்ளது.

6 மாத காலத்திற்கு 3 சத விதம்
12 மாத காலத்திற்கு 3½ சத விதம்
24 மாத காலத்திற்கு 4 சத விதம்

ரூ. 25,000/-மும் அதற்கு மேற்பட்ட டெபாஸிட் தொகைக்கும் ½ சத வீதம் அதிக வட்டி அளிக்கப்படும்

மதபரிபாலன ஸ்தாபனங்களுக்கு மேலும் அதிகமாக ½ சத வீதம் வட்டி அளிக்கப்படும்

இதர விவரங்களுக்கு காரியதரிசிக்கு விண்ணப்பிக்கவும் :
( போர்டாரின் உத்தரவுப்படி )

A. நாராயணசாமி B. A., A. I. I. B. காரியதரிசி




மூன்று தலைமுறைகளாக பிரசித்தி பெற்றவை



# விளம்பரதாரர்களே....

## நீங்கள் உபயோகிக்கும் பத்திரிகையைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள்!

ஆடிட் பீரோ ஆப் சர்குலேஷன்ஸ் என்ற ஸ்தாபனந்தான் சுருக்கமாக ஆங்கிலத்தில் ஏபிஸி என்று சொல்லப்படுகிறது. இந்த ஸ்தாபனத்தில் இந்தியா, பாகிஸ்தான், ஸிலோன் ஆகிய நாடுகளில் 13 பாஷைகளில் நடத்தப்படும் 125க்கு மேற்பட்ட பிரதான பத்திரிகைகள் அங்கம் வகிக்கின்றன. இந்தப் பத்திரிகைகளின் விற்பனை கணக்கு எந்த சமயத்திலும் ஏபிஸி ஸ்தாபனத்தின் ஆடிட்டர்களால் பரிசோதிக்கப்படுகிறது. அத்துடன் அந்தந்த பத்திரிகையின் நிகர விற்பனை எண்ணிக்கை சர்டிபிகேட்டை ஆறு மாதத்திற்கு ஒருமுறை ஏபிஸி ஸ்தாபனத்தின் அங்கத்தினர்களுக்கு மட்டும் அந்தரங்கமாக அனுப்பப்படுகிறது. ஒரு விளம்பர தாரர் என்ற முறையில் நீங்கள் ஏபிஸி ஸ்தாபனத்தின் அங்கத்தினராக இருந்தால் உங்களுக்கும் அந்த சர்டிபிகேட் அனுப்பப்படும். அப்போது உங்கள் விளம்பரத்திற்கு நீங்கள் உபயோகிக்கும் பத்திரிகையின் உண்மை நிகர விற்பனையை நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

உங்கள் விளம்பரத்திற்காக நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு ரூபாய்க்கும் எவ்வளவு வாசகர்களைப் பெறுகிறீர்கள் என்ற உண்மையும் உங்களுக்குத் தெரியவரும்.

### ஆடிட் பீரோ ஆப் சர்குலேஷன்ஸ் லி-ட்.

முபாரக் மன்ஸில். அபோலோ தெரு
கோட்டை, பம்பாய்

கீழ்க்கண்ட விளம்பரதாரர்களும் விளம்பர ஏஜண்டுகளும் ஏற்கெனவே ABC யின் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள்.

**விளம்பரதாரர்கள்—**

அல்கடு போட்டோகிராபிக்ஸ் லி-ட்., இ. எம். ஆல்காக் அண்டு மொஹாட்டா லி-ட்., ஆஸ்ப்ரோ லி-ட்., இங்கிலாந்து. அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லி-ட்., பாமர் லாரி கோ., லி-ட்., பம்பாய் மியூச்சுவல் லைப் அஷ்யூரன்ஸ் சொஸைட்டி லி-ட்., பூட்ஸ் ப்யூர் ட்ரக் கோ. (இந்தியா) லி-ட்., பர்மாஷெல் ஆயில் ஸ்டோரேஜ் டிஸ்ட்ரிபியூட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லி-ட்., கால்டெக்ஸ் (இந்தியா) லி-ட்., ஸெண்ட்ரல் டிபோர்டு. கார்ன் ப்ரொடெக்ஸ் கோ. (இந்தியா) லி-ட். டன்லப் ரப்பர் கோ. (இந்தியா) லி-ட். கிளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) லி-ட். கோத்ரெஜ் பாய்ஸ் மானுபாக்சரிங் கோ., லி-ட்., இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லி-ட்., இம்பீரியல் டுபாகோ கோ. ஆப் இந்தியா லி-ட்., இந்தியா டயர் அண்டு ரப்பர் கோ. (இந்தியா) லி-ட்., லிவர் பிரதர்ஸ் (இந்தியா) லி-ட்., லிப்டன் லி-ட்., நாஷனல் கார்பன் கோ. (இந்தியா) லி-ட்., பார்லி ப்ராடெக்ட்ஸ் மானுபாக்சரிங் கோ. லி-ட்., பஞ்சாபி சந்து ஹல்வாய் கராச்சிவாலா, ஷாலிமார் பெயிண்ட், கலர் அண்டு வார்னிஷ் கம்பெனி லி-ட்., டாடா ஆயில் மில்ஸ் கோ. லி-ட்., வால்கார்ட் பிரதர்ஸ்.

**விளம்பர ஏஜண்டுகள்—**

அட்வர்டைஸிங் ஸேல்ஸ் பிரமோஷன் கோ., எவரெஸ்ட் அட்வர்டைஸிங் லி-ட்., கிராண்ட் அட்வர்டைஸிங் இன்க். க்ரீன்ஸ் அட்வர்டைஸிங் சர்வீஸ் ஏஜண்ட்ஸ், டி. ஜே. கீமர் அண்டு கோ. லி-ட்., லின்டாஸ் லி-ட்., பி. எஸ். மணி அண்டு கம்பெனி, நேஷனல் அட்வர்டைஸிங் சர்வீஸ் லி-ட்., பிரஸ் ஸிண்டிகேட் லி-ட்., ஷில்பி லி-ட்., ஸிஸ்டாஸ் லி-ட்., எப். டி. ஸ்டுவர்ட் லி-ட்., ஏல். ஏ. ஸ்ட்ரோனக் அண்டு கோ. (இந்தியா) லி-ட்., ஜே. வால்டர் தாம்ஸன் கம்பெனி (ஈஸ்டர்ன்) லி-ட்.

இதைப் பிரசுரித்தவர்கள் :

**ABC ஸ்தாபனத்தின் அங்கத்தினரான 'கல்கி' பத்திரிகை சொந்தக்காரர்கள்**



# பம்பாயில் நான்காம் தமிழ் மகாநாடு

எஸ். பி. எஸ்.

மாதுங்கா நப்பூ கார்டனில் நிறுவிப் பெற்று எழுந்த அழகிய பந்தலைக் கண்டு பம்பாய் வாசிகள் திகைத்து விட்டனர். அதிலும் முதன் முதலாக ஒரு இலக்கியத் திரு விழாவுக்கு நிர்மாணிக்கப்பட்ட பந்தல் என்றவுடன் அவர்களுக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவேயில்லை.

'பாரதி மகாநாடு' என்றழைக்கப்பட்டு மூன்று ஆண்டுகளாகக் கல்கத்தா, பாரதி தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற விழா 'தமிழ் மகாநாடு' என்ற பெயரில் பம்பாய்த் தமிழ்ச் சங்க முயற்சியில் அக்டோபர் மாதம் 16, 17, 18 தேதிகளில் மாதுங்காவில் கோலாகலத்துடன் கொண்டாடப்பட்டது.

சென்னைக்கு வடக்கே தமிழ்த் தொண்டு ஆற்றி வரும் கல்கத்தா-பாரதி தமிழ்ச் சங்கம், கல்கத்தா தமிழ் மாணவர் மன்றம், புனா-கலைக் கழகம், டெல்லித் தமிழ்ச் சங்கம், அஹமதாபாத்-ஸ்ரீ கிருஷ்ண தமிழ் விகாஸ் சககாரி மண்டல், பம்பாய்—ரிசர்வ் பாங்க் தமிழ் நூல் நிலையம் முதலிய ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும், பார்வையாளரும் இதில் கலந்து கொண்டனர். வரவேற்புக் கமிட்டித் தலைவரும், பம்பாய்த் தமிழ்ச் சங்கத் தலைவருமான ஸ்ரீ ஏ. என். சட்டநாதன் அவர்களது நீண்ட வரவேற்புரைக்குப் பின்னர் பம்பாய் மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ எஸ். கே. பாட்டில் மகாநாட்டைத் துவக்கி வைத்தார். "பழங்காலத்தில் தோன்றிய போதிலும் இன்றும் உயிரோடு நிலவி, வளம் பெற்று, மக்களின் நாவில் நிலவி வரும் ஒரு மொழி உலகில் உண்டென்றால் அது தமிழ் பாஷை தான் என்பதில் ஐயமில்லை" என்று ஸ்ரீ பாட்டீல் கூறியபோது அங்கு கூடியிருந்த தமிழர் கூட்டம் ஆர்ப்பரித்து அதை ஆமோதித்தது.

கல்யாணத்துக்குப் பருப்பும், நூலுக்கு முன்னுரையும் போலத் தமிழ் விழாக்களில் ஓவியக் கண்காட்சியும் ஒரு இன்றியமையாத அம்சமாக இருந்து வருகிறது. மகாகவி பாரதி, டாக்டர் ஐயர், புகழ்க் கம்பன், மறைமலை அடிகள், திரு. வி. க. முதலியோரது திரு உருவங்களுடன் குறள் கம்ப ராமாயணம் முதலிய இலக்கியக் கருவூலங்களை வர்ணத்தில் குழைத்த சித்திரப் பொக்கிஷங்கள் காட்சிசாலையை அலங்கரித்தன.

இரவு கலை நிகழ்ச்சி ஆரம்பமாக வெகு நாழிகைக்கு முன்பே விழாப் பந்தல் நிறைந்து விளங்கிற்று. டாக்டர் மு. வரதராசனாரின் 'காதல் எங்கே' என்ற ஓரங்க நாடகம் நிகழ்த்தப் பட்டது.

* * *

அடுத்து நடைபெற்ற நிகழ்ச்சிகளில் பல ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளின் குரல்களைக் கேட்க முடிந்தது. 'பாஞ்சாலி சபத'த்தைப்பற்றிக் கல்கத்தா ஸ்ரீ என். கோபால சுந்தரத்தின் உணர்ச்சிகரமான பேச்சு, 'வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டதே இலக்கியம்' என்று கூறிய புனா ஸ்ரீ என். பிரமநாயகத்தின் பிரசங்கம், கல்கத்தா ஸ்ரீ ப. க. தியாகராஜனின் நயமான 'கவிதை'க் கண்ணோட்டம், பம்பாய்—குமாரி ஆர். கமல விஜயத்தின் ஆணித்தரமான 'நாடகங்கள்' விமரிசனம்—முதலியன காலை நிகழ்ச்சியை அணி செய்தன. பம்பாய்த் தென்னிந்திய ஸ்தாபனங்கள் பல சென்னை விருந்தினரை மாலையிட்டுக் கௌரவித்தன. விழாத் தலைவர் திரு மீனாட்சி சுந்தரனார் பேசுகையில் இன்று பலவாறு உரையாசிரியர்களால் விமர்சிக்கப்படும் கண்ணகியைப் புதிய கோணத்தில் காண்பித்து, அவள் குணப் பண்பு மிகுந்த தலையாய பாத்திரம் என்பதை எடுத்து உணர்த்திய 'மதுரை எரிதல்' என்ற பிரசங்கம் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியில் ஒரு புதிய பாதை.

மீண்டும் பிற்பகல் ஐந்து மணிக்குக் கூடிய போது விழாவை ஒட்டி நிகழ்த்தப் பட்ட டாக்டர் சாமிநாதய்யர் பிரசங்க வியாசப் போட்டிகள், பாரதி பாட்டுப் போட்டிகள்—இவற்றில் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளுக்குப் பம்பாய் முனிசிபாலிடி கல்வி அதிகாரி குமாரி காண்ட்வாலா பரிசுகள் வழங்கினார்.

விழாத் தலைவர் திரு. மீனாட்சி சுந்தரனார். 'யாரும் வகுத்தற்கரிய பிராயத்தினளாகிய' தமிழ்



மகாநாட்டுக்கு வந்திருந்த திரளான கூட்டத்தின் ஒரு பகுதி. மகாநாட்டுப் பிரதிநிதிகளை முன் வரிசையிலும் பின் வரிசையிலும் காணலாம்.



சங்கத் தலைவர் ஸ்ரீ ஏ. என். சட்டநாதன் வரவேற்புரை நிகழ்த்துகிறார். மகா நாட்டுத் திறப்பாளர் ஸ்ரீ எஸ். கே. பாட்டில் பக்கத்தில் அமர்ந்துள்ளார்.

விவரித்துத் திரைகடலோடிய தமிழனின் சிறப்பையும் பழைமையையும் சாங்கோபாங்கமாக விளக்கியபோது சபையினர் உற்சாகம் கட்டுக்கடங்கவில்லை.

பம்பாய் நான்காம் தமிழ் மகாநாட்டின் முடிவுதினத்தில், 'கல்கத்தா பல்கலைக் கழகத்தார் தமிழை ஒரு உப பாடமாகச் சேர்த்திருப்பதைப் பாராட்டியும் வட நாட்டுப் பல்கலைக் கழகங்கள் தென்னாட்டு மொழிகள் ஏதேனும் ஒன்றையும், தென்னாட்டுப் பல்கலைக் கழகங்கள் வட நாட்டுப் பாஷைகள் ஏதேனும் ஒன்றையும் உப பாடமாக அங்கீகரிக்கவேண்டும் என ஏகமனதாகத் தீர்மானம் ஒன்று நிறைவேறியது. தமிழன்னைக்கு இடையறாது சேவை செய்த அறிஞர்கள் திரு. வி. க., ஆர். கே. ஷண்முகம் செட்டியார், டாக்டர் நிர்மூர்த்தி இவர்களது மறைவுக்கு அனுதாபம் தெரிவித்துக் கொள்ளுவதற்காகச் சபையினர் ஒரு நிமிஷநேரம் மௌனம் அனுஷ்டித்தனர்.

அன்னையின் தொன்மையைப் பற்றிக் கூறுகையில் மொஹஞ்சதாரோ, ஹாரப்பா, மெக்ஸிகோ முதலிய இடங்களில் கிடைக்கும் சரித்திரச் சான்றுகள், ஸயாமில் இன்னும் கொண்டாடப்படும் 'திருப்பாவை-திருவெம்பாவாய்' பண்டிகை, அதில் 'ரெம்பாவாய்' நடன நிகழ்ச்சி இவற்றை

பல இடங்களிலிருந்து வந்திருந்த ஆசிச் செய்திகளைக் காரியதரிசி கந்தசாமி வாசித்தார். பிறகு செயலாளர் நீண்ட வந்தனோபசாரம் கூற, 'வாழிய செந்தமிழுடன்' மகாநாடு இனிது முடிவடைந்தது.

# பண்டித மணி

சோம. லெ.

***1953*** தமிழர்களுக்குப் பொல்லாத ஆண்டு. இலங்கையில் நவாலியூர் சோமசுந்தரப் புலவரும், சைவப் பெரியார் சிவபாதசுந்தரனாரும் இந்தியாவில் திரு. வி. க. வும் காலமானார்கள். இப்போது மகாமகோபாத்தியாய "பண்டித மணி" கதிரேசச் செட்டியார் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார். 50 ஆண்டுகளாகத் தமிழ் நாடெங்கும் புகழ் பெற்றிருந்த ஒரு சோதி மறைந்து விட்டது. இலக்கிய உலகில் சிறந்து விளங்கிய ஒரு விளக்கு அணைந்து விட்டது.

பண்டித மணியின் தமிழ்ப் புலமையும் செய்யுள் இயற்றும் ஆற்றலும் முதல் முறையாக 1903-ஆம் ஆண்டில் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர், சோழவந்தான் அரசஞ் சண்முகனார், மு. ரா. கந்தசாமிக் கவிராயர் போன்றவர்களால் பெரிதும் பாராட்டப் பெற்றன. அது முதல் அவரது புகழ் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது.

பண்டிதமணி கடந்த மூன்று ஆண்டுகளாக (கோயமுத்தூர்த் தமிழ் விழாவுக்குச் சில நாட்கள் முன்னர்) உடல் நலமின்றி யிருந்தார். அதுமுதல் அணு அணுவாய்த் தேய்ந்தார். எனினும் திருவாசக உரையை முடிக்கும் வரையாவது உயிருடனிருப்பார் என்று தமிழகம் விரும்பியது. ஆனால் அந்த விருப்பம் நிறைவேறவில்லை.

இளம் பிள்ளை வாதத்தால் 15-வது வயதிலேயே, அவருக்கு ஒரு கால் சப்பையாகி விட்டது. கம்பை ஊன்றித்தான் நடக்க வேண்டியதாயிற்று. அங்கிலையிலும் மனம் தளராது, சொந்த முயற்சியால் கல்வி கற்று, பெரும் புகழ் அடைந்து, உடல் நிலையைப் பொருட்படுத்தாமல் ஊர் ஊராகச் சென்று தமிழ்த் தொண்டாற்றினார். மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையின் தோற்றத்துக்கும்வளர்ச்சிக்கும் அவர் செய்த உதவி அளவு கடந்தது. அவர் இல்லாவிட்டால், சன்மார்க்க சபை இல்லை என்று சொல்லி விடலாம். ஆங்கில அறிவு இல்லாமல், தமிழ்ப் பேராசிரியராக இருந்து தமது பதவியைத் திறம்பட நிருவகித்துத் தமிழ்ப் புலவர்கள் அனைவருக்கும் பெருமை தேடித் தந்தவர் பண்டிதமணி. சென்னை, அண்ணாமலை, திருவாங்கூர் ஆகிய மூன்று பல்கலைக் கழகங்களின் பாட புத்தகக் குழுவின் தலைவராக இருந்த பெருமை இவருக்கே உண்டு.

பண்டித மணியின் தமிழ்ப் புலமை சிகரந் தது. சிலப்பதிகாரம், பெரியபுராணம். திருவாசகம், சீவக சிந்தாமணி, அகநானூறு ஆகிய ஐந்து நூல்களில் அவருடைய பரிச்சயம் சிறப்பாக இருந்தது. சம்ஸ்கிருதத்திலும் அவர் நல்ல புலமை பெற்றிருந்தார். அவருடைய சிறந்த மொழி பெயர்ப்புகள் இதற்குச் சான்றாக உள. சிறந்த அரசியல் நூலாகிய அர்த்த சாஸ்திரத்தையும் பண்டித மணி மொழி பெயர்த்துள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் இதை விரைந்து வெளியிடுவார்களாக.



பண்டிதமணி
திரு. மு. கதிரேசச் செட்டியார்

பண்டித மணி நல்ல சிறந்த சொற்பொழிவாளராக விளங்கினார். தமிழ் நாட்டில் அவர் தலைமை தாங்கிச் சிறப்பிக்காத சமய-இலக்கிய மாநாடுகள் ஒன்றுமில்லை எனலாம். தனித்த முறையில் அவருடன் பேசிக் கொண்டிருப்பது ஒரு தனி இன்பம். அவருடைய பேச்செல்லாம் தமிழ் மணம்; மூச்செல்லாம் இலக்கியம் என்று சுருங்கச் சொல்லலாம். தன்னுடன் பேசுபவர்களின் முகக்குறி, ஆர்வம், குறிபுலன்கள், கருத்து எல்லாவற்றையும்கூர்ந்து கவனிப்பது அவருடைய வழக்கம். இரு பொருள் நயம்படப் பேசுவதில் அவர் இணையற்று விளங்கினார். நகைச் சுவையும் அவரிடம் மிகுதியாக இருந்தது.

மாணவர் மனத்தில் பசுமரத்தாணிபோல் பதியும்படி பண்டிதமணி பாடம் சொல்லிக் கொடுப்பார்.

எவ்வளவு நுட்பமாகப் புடைத்த அரிசியைச் சமைத்தாலும் அந்தச் சோற்றில் ஒருகல் தட்டுப்படுவதுபோல, பிற அறிஞர்களுடைய நூல்களில் பண்டித மணி எளிதில் குற்றங் கண்டுபிடித்து விடுவார். அவருடைய சொல்லம்புகளிலிருந்து தப்புவது அருமை. "புகழுக்குப் பகையும் புலமைக்குப் பொறாமையும் எங்கும் எப்போதும் காத்திருக்கும்" என்று பேகன் என்ற மேனாட்டு அறிஞர் கூறியிருக்கிறார். இது முற்றிலும் உண்மை என்பதைப் பண்டிதமணியின் வாழ்க்கையில் பல தடவைகள் உணர்ந்திருக்கிறேன். அவருடைய புகழும் புலமையும் அவருக்குப் பல பகைவர்களை உண்டாக்கின. 1944-ம் ஆண்டு ஏப்ரலில் கம்பர் விழா மேடையில் சென்னை கோகலே மண்டபத்தில் அவர் தாக்கப் பட்டார். அவருடைய உள்ளமும் உடலும் புண்பட்டன. அந்நிலையிலும் பண்டிதமணி, "நான் சொற்போருக்கு வந்தேனே அன்றி, மற்போருக்கு வரவில்லை. மற்போருக்கு என் உடல் அமைப்பு இடந்தராது. அதற்குரிய பருவமும் கடந்து விட்டது" என்று இலக்கிய நயம்படப் பேசினார். இது போன்ற இலக்கியச் சுவைக்கும், அவரைத் தாக்கிய அறம்புகா நெஞ்சினர்க்கும் வெகு தூரம்.

பண்டித மணியிடம் நாட்டுப் பற்று மிகுதியாக இருந்தது. "ராவ்பகதூர்" பட்டம் தமக்குக் கொடுக்கப்படப் போவதாக அறிந்து, அதை வேண்டாம் என்று மறுத்தார். 1910-இல் செட்டி நாட்டில் சுதேசி இயக்கத்துக்குப் பணம் சேர்த்து "சுதேச மித்திரன்" ஜி. சுப்பிரமணிய ஐயருக்கு அனுப்பினார். கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம் பிள்ளை பண்டித மணியிடம் பெருமதிப்பு வைத்திருந்தார். திருநெல்வேலியில் தாம் சொற்பொழிவு செய்ய இசைந்து ஒரு சங்கத்துக்குக் கடிதம் எழுதிய போது, "பண்டித மணி அவர்கள் வர முடியவில்லை எனின் நானும் அவ்வாறே தந்தி கொடுத்து விடுவேன்" என்று அவர் குறிப்பிட்டிருந்தார்.

நமது ராஜாஜி அவர்களும் பண்டிதமணியிடத்துப் பேரன்பு உடையவர்கள். அவருடைய திருவாசகம்-திருச்சதகத்தைப் படித்து, அது ஒப்புயர்வற்ற உரை என்று பாராட்டி எழுதியிருந்தார்கள்.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைக் காணும் பேறு 14-10-53 ல் எனக்குக் கிடைத்தது. அப்போது கவிமணி, பண்டித மணியின் உடல் நலனைப் பற்றியே பெரிதும் வினவினார்கள். பண்டிதமணி நுட்பமான புத்தியும், நல்ல படிப்பும், வாக்கினிமையும் பக்தியும் உடையவர்கள் என்றும் அவர் திருவாசகத்துக்கு உரை எழுதி வருவது மிகப் பொருத்தம் என்றும் சொன்னார்கள்.

"வையகம்போற்றுந்திரு வாசகத்தின்உட் பொருளைக்
கையிற் கனியாகக் காட்டினனால்-செய்ய தமிழ்ப்
பேரா சிரியர் பெருமான் கதிரேசன்
ஆராய்ந்து முற்றும் அறிந்து"

என்று தாம் பாடிய பாடலையும் நினைவு படுத்தி, பண்டிதமணிக்குத் தம்முடைய வணக்கத்தையும் ஆறுதலையும் தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அதை யான் தெரிவிக்கு முன்னரே பண்டித மணி இறைவன் திருவடி நிழலை அடைந்து விட்டார்கள்.

பண்டிதமணியின் புலமையும், தம் முயற்சியால் உயர் நிலை அடைந்த இயல்பும், இலக்கண இலக்கியப் பயிற்சியும் தமிழ் நாட்டு இளைஞர்களுக்குத் தகுந்த வழிகாட்டியாகும்.

# தாசில்தார் தர்மலிங்கம்

பி. எஸ். மணி

தாசில்தார் தர்மலிங்கம் பிள்ளை படாடோப மனிதர். பழைய அதிகார வர்க்க பரம்பரையில் பதவி வகித்ததால் அவருக்கு அதிகார மோகம் மிகுந்திருந்தது. அவருடைய அதட்டலையும், உருட்டலையும் கண்டு யாரும் அவரை நெருங்குவதில்லை.

அந்த சுபாவம் அவர் பதவியிலிருந்து விலகிய பின்னருங்கூட நீங்கவில்லை. ஆனால் ஒரே ஒரு வித்தியாசம் என்னவென்றால் பதவியிலிருந்து விலகிய பின்னர் அவருடைய அதிகாரம் ஊரில் செல்லவில்லை; வீட்டில் மட்டும்தான் சென்று வந்தது.

அவருடைய பிள்ளை பரமசிவம் பரமசாது. அப்பாவைக் கண்டாலே அவனுக்குச் சிம்மசொப்பனம். அவருடைய நிழல் தெரிந்தால் நாலுகாத தூரம் ஓடி ஒளிந்து கொள்வான். அவர் அவனை அதட்டி, உருட்டி, மிரட்டி, அடித்துத் தம்மைக் கண்டாலே சிம்மசொப்பனம் காணும்படி வைத்திருந்தார்.

அவர் வீட்டுக்கு யார் வந்தாலும் சரி, தாசில்தார் தர்மலிங்கம் பிள்ளை அவர்களிடம் தம் பிள்ளையைப் பற்றிச் சொல்லாமல் இருப்பதில்லை.

“ஸார்! என் பையனுக்கு என்னைக் கண்டால் கிலி. அடித்து வளர்த்ததால் அப்பாவுக்கு அடங்கி ஒடுங்கிய பிள்ளையாயிருக்கிறான். ஒரு தடவை என் பையன் சொன்னபடி கேட்கவில்லை. என்ன செய்தேன், தெரியுமா? இதோ மூலையில் சாத்தியிருக்கிறதே, இந்தப் பிரம்பினால் வெளுத்து வாங்கிவிட்டேன். அன்றையிலிருந்து என் பிள்ளை நிமிர்ந்து நோக்கினால் இந்தப் பிரம்பைச் காட்டுவேன். அவ்வளவுதான்; அடங்கி ஒடுங்கிப் போய் விடுவான்!” என்று தம்முடைய வீரப்பிரதாபங்களைக் கூறித் தம்மைப் புகழ்ந்து கொள்வார் தாசில்தார் பிள்ளை.

பரமசிவத்துக்குச் சின்னஞ் சிறு வயதிலிருந்து இதைக் கேட்டுக் கேட்டு காது புளித்து விட்டது. வயதான பிறகும் தன் தந்தை பலரிடம் தன்னை அடக்கி ஆண்டதைப் பற்றிக் கூறுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. தனக்கு அவமானச் சின்னமாகத் திகழும் அந்தப் பிரம்பைக் கண்டு உள்ளம் குமுறுவான். ஆனால் தைரியமாகத் தந்தையிடம் சென்று, “அப்பா! என்னை ஏன் இப்படி அவமானப்படுத்துகிறீர்கள்?” என்று கேட்டதில்லை. அப்படிக் கேட்பதற்கு அவனுக்குக் கொஞ்சமாவது தைரியமிருந்தால்தானே?

அன்றைக்கு அவனுக்குப் பெண் கொடுப்பதாக இருந்த சுந்தரம் பிள்ளை அவன் வீட்டுக்கு வந்திருந்தார். அவர் அவன் தந்தையிடம் “இந்த வருஷமே உங்கள் பையனுக்கு மணம் முடித்துவிட வேண்டியதுதான். எத்தனை நாளைக்கு முறைப் பெண்ணை வைத்துக் கொண்டிருக்கிறது?” என்று கேட்டார்.

“ஏன்? நம் பையன் நம் வார்த்தையை மீறி வேறு பெண்ணை மணம் முடித்துக் கொண்டு விடுவானோ என்று பயப்படுகிறீர்களா?” என்று கேட்டார் பிள்ளை. அவருக்குத் தம் பிள்ளையிடத்தில் அவ்வளவு நம்பிக்கை. கீறின கோடு தாண்டமாட்டான் என்ற தைரியம்.

“அதற்காக இல்லை. வந்து...” என்று மென்று விழுங்கினார் சுந்தரம் பிள்ளை.

“என் பையன் என் சொல்லைத் தட்டமாட்டான். அப்படித் தட்டினால் என்ன நேரும் என்கிறது அவனுக்குத் தெரியும். முன்பொரு தடவை......” என்று கூறித் தாம் பிரம்பாலடித்த கதையைக் காது மூக்கு வைத்து அவரிடம் கூறினார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த பரமசிவத்துக்கு உள்ளம் குமுறியது. நேராகத் தட தடவென்று அவருடைய அறையில் போய் அந்தப் பிரம்பை எடுத்து வந்து அடுப்பில் போட்ட பிறகுதான் அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது.

தர்மலிங்கம் பிள்ளை வந்தவருடன் பேசி முடித்து விட்டுத் திரும்பியபொழுது பிரம்பைக் காணாமல் தவித்தார். அது காணாமல் போனது தமது அந்தஸ்தே பறி முதலானது போல் தோன்றியது.

“டேய்,பரமசிவம்! என்பிரம்பு எங்கேடா? அதைக் கொண்டு வராவிட்டால் உன் தோலை உரித்து விடுவேன்!” என்று இரைந்தார்.

தந்தையின் கோபத்தைக் கண்டதும் பரமசிவத்துக்குச் சப்த நாடிகளும் ஒடுங்கி விட்டன. அவன் வாய்திறக்காமல் சமையலறைப் பக்கம் கையைக் காட்டினான்.

சமையலறைக்குள் சென்ற தாசில்தார் தர்மலிங்கம் அடுப்பில் தம் பிரம்பு தகனமாவதைக் கண்டார். பரமசிவம் தன தந்தை மறுபடியும் முன் போல் தன்னை உதைத்து விடப் போகிறாரோ என்று பயந்து நடுநடுங்கிக் கொண்டிருந்தான்.

ஆனால் அவன் அதிசயப்படும் படியாக அவன் தந்தை, “அப்பா! நீ வயது வந்த பிள்ளை. உன் மனத்தை நான் தெரியாமல் பல தடவைகள் புண் படுத்திவிட்டேன் என்பதை இப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன். இனி, என்னிடமிருந்து உன்னை இழிவுபடுத்தும் சொல்லை ஒரு நாளும் கேட்க மாட்டாய்” என்று கூறிவிட்டு விர்ரென்று வாசலுக்குப் போய்விட்டார்.



ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழி பெயர்ப்பு: ரா. வீ.

## 21. ஏன் இந்தச் சங்கோசம்?

சுதாகர் அவளுடைய தைரியத்தையும் அழுத்தந் திருத்தமான கேள்வியையும் பார்த்துப் பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தான். ஆனால் ஜ்வாலாப் பிரஸாத் 'கடகட'வென்று சிரித்துவிட்டு, "கவலைப்படாதே! இதோ ஒரு நொடியில் போனதும் வந்ததுமாக வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு அவளுடைய மறுமொழியைக் கூட எதிர்பார்க்காமல் அங்கிருந்து சென்று விட்டார்.

ராதாவுக்கு அவருடைய அந்தச் செய்கை பிடிக்கவில்லை. எனவே, சிறிது நேரம் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். பிறகு சுதாகர் பக்கம் திரும்பி, "ஆமாம், உங்கள் பெயர் என்ன சொன்னீர்கள்?" என்று கேட்டாள்.

"என் பெயரா? சுதாகர்!"

"உங்களுக்கு இலக்கியத்தில் பற்று உண்டோ?"

"கல்லூரியில் முக்கிய பாடம் எனக்கு இலக்கியம்தான்!"

"அப்படியா? எனக்கு ஆங்கிலம், தாய்மொழி ஆகியவற்றில் உள்ள இலக்கியங்களைப் பயில வேண்டும் என்று ஆசை!"

"என்னால் முடிந்த வரை உதவி செய்கிறேன். தாங்கள் எதுவரை படித்திருக்கிறீர்கள் என்பதை நான் அறியலாமா?" என்று வெகு வினயமாகக் கேட்டான் சுதாகர்.

"தாய்மொழி, ஆங்கிலம் ஆகியவற்றில் உள்ள நாவல்களை நான் படித்து விடுகிறேன். சிற்சில இடங்களில் சரிவரக் கருத்துப் புரிய மாட்டேன் என்கிறது. யாராவது சொல்லிப் புரிய வைத்தால் நன்றாக அநுபவித்து அதன் ரஸத்தைப் பருகலாம். இன்னொரு விஷயம். சொல்லச் சற்றுச் சங்கோசமாக இருக்கிறது. அதாவது......அதாவது......"

"பரவாயில்லை, சொல்லுங்கள். சங்கோசப் படாதீர்கள்!"—சுதாகர் கூறினான்.

"அதாவது நான் சிற்சில சமயம் ஏதாவது எனக்குத் தோன்றியதை எழுதுகிறேன். ஆனால் நிராகரிக்கப்பட்டு விட்டால் என்ன செய்வது என்ற பயத்தில் எந்தப் பத்திரிகைக்கும் பிரசுரத்துக்கு அனுப்புவதில்லை. என் எழுத்தில் உள்ள குற்றங் குறைகளைத் திருத்தித் தரவேண்டும். தாங்கள் இவ் விஷயத்திலும் உதவி செய்வீர்களானால் நான் கொஞ்ச காலத்தில் இலக்கிய சேவை செய்வதற்குத் தகுதியுள்ளவளாக ஆகிவிட முடியும்!" என்று சொல்லியவாறே ராதா எழுந்தாள். சுதாகரும் அவள் கூடவே எழுந்தான்.

ராதா அன்ன நடை நடந்து வெகு உல்லாசமாக உள்ளே சென்றாள். சுதாகரும் வெகு பவ்யத்துடன் தனது வருங்கால எஜமானியைப் பின் தொடர்ந்தான்.



ராதாவின் அறை வெகு நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. நேர்த்தியான சோபா ஒன்றைக் காட்டிச் சுதாகரை அதில் உட்காருமாறு சொன்னாள் ராதா. பிறகு தனது புஸ்தக அலமாரியைத் திறந்து ஒவ்வொரு புஸ்தகமாக எடுத்துக் காட்டினாள். பிறகு, "இதோ பாருங்கள்! இது பிரேம் சந்தரின் சேவாசதனம்! இது சந்திரஹாரம்! இது சித்திரலேகா! இது அருவிக்கரை ஆசிரமம்! இந்த நாவல்களையெல்லாம் நான் படித்திருக்கிறேன். இவையெல்லாம் துப்பறியும் நாவல்கள். இவற்றிலும் ஒன்றுகூட விடாமல் நான் படித்திருக்கிறேன். இதோ இந்த வரிசையில் இருப்பவை கவிதை நூல்கள். இவை எல்லாவற்றையுமே படித்திருக்கிறேன். ஆனால் இவர்களில் தலைசிறந்த எழுத்தாளர் யார் என்றுதான் என்னால் சரிவரப் புரிந்து கொள்ள முடியவில்லை. உயர்ந்த ஸ்தானத்தை அடைந்து விட்ட பல ஆசிரியர்கள் வர வரப் புது புஸ்தகங்கள் எழுத எழுதக் கீழே இறங்கி வருகிறார்கள் போலவும் தோன்றுகிறது....ஆமாம், எழுத்தாளன், தான் அடைந்த ஸ்தானத்தை இன்னும் மேலே போக முடியா விட்டாலும் அப்படியே கடைசி வரை நிர்வகிக்க முடியாதா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

அவள் சிரிப்பதைப் பார்த்த சுதாகரும் சிரித்தான். ஆனால் அவன் ஏன் சிரித்தான்? அதை அவனாலேயே புரிந்து கொள்ளவில்லை.

சிறிது நேரத்துக்குள்ளாக, அவன் எதிரே ராதா ஒவ்வொன்றாக எடுத்துப் போட்ட புஸ்தகங்கள் மலைபோல் குவிந்து விட்டன. ராதா, தான் சேர்த்து வைத்திருந்த சில படங்களையும் எடுத்துச் சுதாகருக்குக் காட்டினாள். இளம் பிராயத்தினளான ராதாவின் கலையன்பைக் கண்டு காளைப் பருவத்தினனான சுதாகர் வியந்தான். அதுமட்டும் அல்ல; அப்படியே பிரமித்துக் கூடப் போய் விட்டான். சித்திரக் கலையில் பாரத நாடு மிக மிகப் பின்னணியில் இருக்கிறது என்பது சுதாகருடைய எண்ணம். ஆனால் பரமானந்தருடன் பழகிப் பழகி அவனுடைய அந்த எண்ணம் மாறி விட்டது. அது மட்டும் அல்ல; கலையையும் கலைப் பண்பையும் பற்றி அவன் கொண்டிருந்த பழைய எண்ணங்கள் கூட அவருடைய சேர்க்கையால் அடியோடு மாறத் தொடங்கி விட்டன. கல்லூரியில் படித்து வந்த காலத்தில் சித்திரக் கலையென்றால் அவன் ஒரே எண்ணம்தான் கொண்டிருந்தான். அதாவது, சித்திரக் கலை என்பது முகத்தின் எழிலை மட்டும் காட்டும் எழில் சித்திரம் என்பதுதான்.

முகத்தைத் தவிர சரீரத்தின் வேறு எந்த அங்கத்தையாவது எழிலுருவமாகத் தீட்டிக் காட்டியிருந்தால் அவன் கண் கொண்டு பார்க்க மாட்டான்; கண்களை இறுக மூடிக் கொண்டு விடுவான். உலகம் ஒரேயடியாக நெறி முறையிலிருந்து தவறி அதள பாதாளத்தை நோக்கிச் செல்வதாகவே அவனுக்குத் தோன்றும். அந்தக் கற்பனை அவனுடைய உடலை ஒரேயடியாக உலுப்பி நிலை கலங்கச் செய்துவிடும். ஆனால் இப்பொழுது கலை, நெறி ஆகியவற்றைப் பற்றி அவன் எண்ணங்கள் தீவிர வாதப் பாதையை விட்டு மிதவாதப் பாதையில் செல்லத் தொடங்கியிருந்தன. அப்படியிருந்த பொழுதிலும் அவன், கலைக்கு ஒரு எல்லை உண்டு என்று வற்புறுத்தி வந்தான். அவன் தன் நினைவுக்கு அப்பாற்பட்ட, எல்லைக் கோட்டைத் தாண்டி விட்ட சித்திரங்களைப் பார்க்கவே விரும்புவதில்லை. அவன் அவை

களை ரஸாபாஸமானவை, பார்க்கத்தகாதவை என்றே ஒதுக்கித் தள்ளி வந்தான்.

ஆனால் அன்று ருமானிய, கிரேக்கக் கலைஞர்களின் உடல் அழகைக் காட்டும் சித்திரங்களை ஒவ்வொன்றாக ராதா அவன் எதிரில் எடுத்து வைக்கவே அவன் அயர்ந்து விட்டான்! அவனுக்கு ராதாவினிடம் ஒரு திகிலேகூட உண்டாகி விட்டது. ராதாவின் துணிச்சலையும் தைரியத்தையும் கண்டு அவன் திகில் அடைந்தான் என்று சொல்வதுதான் இன்னும் அதிகமாகப் பொருந்தும்.

ஆனால் அவன் தன் உள்ளத்து உணர்ச்சிகளைச் சிறிதும் அவளிடம் வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. வெகு கெட்டிக்காரத்தனமாகவும், அபாரமாகவும் அந்தச் சித்திரங்களின் நுணுக்கங்களையும் கலைப் பண்பையும் பற்றிப் புகழ்ந்து பேசத் தொடங்கி விட்டான். அதைக் கேட்ட ராதாவுக்கு இத்தனை படித்த அறிவாளி இவ்வளவு நாட்கள் யாருக்கும் தெரியாமல் எங்கே யிருந்தான் என்று ஏக வியப்பாகப் போய் விட்டது.



சுதாகருக்குத் தான் அழகன் என்ற எண்ணமோ, உணர்வோ இதுகாறும் விசேஷமாக எழுந்ததில்லை. அவன் தன் அழகில் இதுவரை கர்வம் கொண்டதில்லை. தன் அழகை அவ்வளவாக [illegible]ட்டியம் செய்ததும் இல்லை. அவன் எளிய சுபாவம் படைத்த வாலிபனாகவே வாழ்ந்து வந்தான். படாடோபத்துக்கும் அவனுக்கும் வெகு தூரம். ஆடம்பரமாக இருக்க வேண்டும் என்று அவன் கனவிலும் கருதியதில்லை. அவன் முகம் பவுடர் போன்ற செயற்கைச் சாதனங்கள் எதுவும் இன்றியே கவர்ச்சிகரமாக இருந்தது.

ராதா அன்றைக்கே படிக்க ஆரம்பித்து விட்டவள் போல் சுதாகரிடம் பல கவிதைகளுக்கும் பொருள் கேட்டாள். சுதாகர் ஒவ்வொன்றின் பொருளையும் வெகு விஸ்தாரமாகப் பல உபமான உபமேயங்களுடனும், உதாரணங்களுடனும் விளக்கினான். அவன் பாடம் சொல்லும் முறை ராதாவுக்கு மிகவும் பிடித்து விட்டது.

அந்தச் சிறிது நேரத்துப் பழக்கத்துக்குள்ளேயே அவள் சுதாகருடன் நெருங்கிய அன்னியோன்னிய பாவத்துடன் பேசிப் பழகத் தொடங்கி விட்டாள். அவள் பேசிய தோரணை, அவனுக்கும் அவளுக்கும் உள்ள அறிமுகம் இன்று நேற்று ஏற்பட்டது போல் அல்ல; எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டதுபோலவே தோன்றியது. ஏறக்குறைய இரண்டு மணி நேரம் ராதாவுடன் பேசிக் கொண்டிருந்து விட்டான் சுதாகர். அப்புறம் மணியைப் பார்த்த பொழுதுதான், அவனுக்கு நாம் அநாவசியமாக அதிகமாகப் பேசி அவள் மனத்துக்கு அலுப்பை உண்டாக்கி விட்டோமோ என்று தோன்றியது. 'முதல் நாளே நாம் இத்தனை பேசி விட்டோமே! எஜமானி நம் பேச்சில் அலுத்துப் போய் அதிருப்தி கொள்ளாமல் இருக்க வேண்டுமே! அப்படி அதிருப்தி கொண்டிருந்தால் கைகூடி வந்த காரியம் அல்லவா கெட்டு விடும்?' என்ற பயம் அவன் உள்ளத்தை ஆட்கொண்டது. 'நாம் இன்று இங்கே வெகு நேரம் உட்கார்ந்திருந்து விட்டோம். இனி புறப்பட வேண்டியதுதான்!' என்று மனத்துள் தீர்மானித்துக் கொண்டான். எனவே, சிறிது நேரத்துக்கெல்லாம் தருணம் பார்த்து. "எனக்கு விடை கொடுத்தனுப்ப வேண்டும்!" என்று வினயமாக வேண்டிக் கொண்டான்.

அதைக்கேட்ட ராதாவுக்கு வியப்பு உண்டாயிற்று. "ஏன்? தாங்கள் இங்கே இருக்கப் போவதில்லையா?" என்று கேட்டாள்.

பொருளாதார நிலைமை ஒரு மனிதனுக்கும் இன்னொரு மனிதனுக்கும் இடையே கடலைப் போன்ற இடைவெளியை ஏற்படுத்தி விடுகிறது. மனிதத் தன்மைக்கு நடுவே ஹிமாலயத்தைப் போன்ற பெருஞ் சுவரை எழுப்பி விடுகிறது. அறிவு வளர்ச்சிக்கான விஷயங்களைப் பேசிக் கொண்டு வந்த ராதா, பேச்சின் சுவாரஸ்யத்தில் சுதாகர் வேலை தேடி வந்த ஏழைப் பட்டதாரி என்பதை அடியோடு மறந்து விட்டாள். அறிவும் விலை போகும் வஸ்து. அந்த அறிவுக்கு இருப்பிடமான அறிவாளிகளை விலைக்கு வாங்கிக் கொள்ளும் திறன் வாய்ந்த பணக்காரர்கள் இந்த உலகத்தில் எத்தனையோ பேர் இருக்கிறார்கள் என்னும் உணர்வும் அவளுக்கு அப்பொழுது உண்டாகவில்லை.

"தங்களுக்கு என் சேவை சம்மதமானால் ஒரு நேரம் குறித்து விடுங்கள். நான் அந்த

நேரத்துக்கு எவ்வித ஆட்சேபணையும் இன்றிக் கட்டாயம் வந்து சேருகிறேன்!'' என்றான் சுதாகர்.

சுதாகர் வேலையை நாடி வந்திருக்கிறான் என்னும் விஷயம் ராதாவுக்கு அப்பொழுது தான் நினைவு வந்தது. அவன் முகத்தை ஒரு முறை பார்த்தாள். அவன் மீது அவளுக்கு அளவு கடந்த அநுதாபம் உண்டாயிற்று. சுதாகரின் முகத்தில் தாண்டவமாடிக் கொண்டிருந்த அநாதரவான தன்மையைக் கண்டு அவள் துடிதுடித்தாள்.

அவள் மனம் அவளையும் அறியாமல், சுதாகரையும் தன்னையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டது. அவளோ லட்சாதிபதி; பணச் செருக்குப் படைத்தவள். அதிகார மோகம் பிடித்தவள். அகந்தை தலைக்கேறியவள். அத்துடன் தன்னிடம் வந்து மாட்டிக் கொண்டவர்களைப் பொம்மலாட்டப் பொம்மையைப் போல் ஆட்டி வைக்க வேண்டும் என்று ஆசை கொண்டவள். சுதாகர் நன்றாகப் படித்துப் பட்டம் பெற்றவன். நாகரிகம் வாய்ந்தவன்; நல்ல அறிவாளி. அவன் தலையெழுத்தை என்னவென்று சொல்வது? மழைத் தூற்றலை எதிர் நோக்கி ஏங்கி நிற்கும் சாதக பட்சி போல், அவளிடம் வேலை வேண்டி வந்திருந்தான்.

அந்தக் கற்பனை அவளுக்குப் பிடிக்கவில்லை. என்ன கோரம்? அது அவள் மனத்தைப் பிழிந்தெடுத்தது. சுதாகரைப் பற்றி அம்மாதிரிக் கற்பனை செய்ய அவள் மனம் இடம் கொடுக்கவில்லை. அவன் மேல் அவளுக்கு அநுதாபம் ஏற்பட்டதோடு மட்டும் அல்ல; அன்பும் பரிவும் வேறு உண்டாயின. அவன் விசித்திரமான முறையில், "நான் ஒரு சுத்த அசடு. உங்களை எத்தனை நேரமாக உட்கார வைத்துச் சிரமப் படுத்திக் கொண்டிருந்து விட்டேன். நீங்கள் பொருள் சொல்லிக் கொடுத்த முறை என் மனத்தை வெகுவாகக் கவர்ந்து விட்டது. உங்கள் வீட்டார்கள் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள் என்ற நினைவே எனக்கு இல்லாமற் போய் விட்டது. அதற்காக மன்னிக்க வேண்டும்!'' என்றான்.

"இல்லை, இல்லை! அப்படி யெல்லாம் ஒன்றும் இல்லை; என்னை எதிர்பார்ப்பவர்கள் என்று இங்கே யாரும் கிடையாது!'' என்று பதில் அளித்தான் சுதாகர்.

"அப்படியானால் நீங்கள் தனியாகவா இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் ராதா.

"ஆமாம். தனியாகத்தான் இருக்கிறேன். எப்பொழுதாவது பரமானந்தரிடத்திலும் இருப்பேன்!'' என்றான் சுதாகர்.

"அப்படியானால் எல்லோரையும் எப்பொழுது அழைத்து வரப் போகிறீர்கள்?'' என்று சர்வ சகஜமாகக் கேட்டாள் ராதா.

அற்புதமான, அதுவரை எண்ணியே பார்க்காத அந்தக் கேள்வியைக் கேட்டுச் சுதாகர் சிரித்தான். ராதா அவனைப் பார்த்தாள். சுதாகர் ஏன் சிரிக்கிறான் என்று அவளுக்கு விளங்கினால் தானே? தான் அப்படி என்ன சிரிக்கக் கூடிய கேள்வியைக் கேட்டு விட்டோம் என்றும் அவளுக்குப் புரியவில்லை.

"ஏன் சிரிக்கிறீர்கள்? ஒரு வேளை உங்களுக்குக் கல்யாணம் ஆகி யிருக்கலாமோ என்று எண்ணித்தான் நான் அப்படிக் கேட்டேன்!'' என்றாள் ராதா.

இன்னும் தனக்கு விவாகம் ஆகவில்லை என்னும் விஷயத்தை வெகு சங்கோசத்துடன் சொன்னான் சுதாகர். ஆனால் தனக்குக் கல்யாணம் ஆகவில்லை என்னும் விஷயத்தைச் சொல்வதில், இவ்வளவு சங்கோசப்படுவதற்கு என்ன இருக்கிறது என்பது அவளுக்கே சரியாக விளங்கவில்லை; சற்றும் புரியாப் புதிராகத் தான் இருந்தது.

கல்யாணம் என்னும் சொல்லைச் சொல்வதற்கே, சுதாகரைப் போல் வெட்கப்படும் மனிதனைத் தன் வாழ்க்கையில் ராதா அது வரை பார்த்ததில்லை. அவளுடைய கணவர் ஜ்வாலாப் பிரஸாத் மூன்று கல்யாணங்கள் செய்து கொண்டிருந்தார். கல்யாணம் என்னும் சொல்லைச் சொல்வதில் மட்டும் என்ன? கல்யாணம் செய்து கொள்வதில்கூட அவருக்கு வெட்கப்படும் வழக்கம் உண்டான தில்லை. அவருக்கு அவ்விஷயத்தில் குளிர் விட்டுப் போயிருந்தது. ஆனால் சுதாகர் படும் சங்கோசத்தையும் வெட்கத்தையும் காணும் போது ராதாவுக்கு ஏக ஆச்சரியமா யிருந்தது. 'இப்படியும் பெண்பிள்ளை போல் வெட்கப்படும் ஆண் பிள்ளை உண்டா?' என்றே எண்ணினாள். அவள் நினைத்தால், கல்யாணப் பேச்சை எடுத்து அவனை இன்னும் வெட்கித் திக்குமுக்காடித் தலைகுனியுமாறு செய்திருக்கலாம். ஆனால் அவள் அப்படிச் செய்ய விரும்பவில்லை. எனவே, அவள் பேச்சை மாற்றித் தன் பங்களாவிலேயே தங்கிவிடுமாறு அவனை வற்புறுத்தினாள். சுதாகருக்குப் பம்பாயில் உற்றார் உறவினர் என்று யாரும் இடையாது என்பதைத்தான் அவள் அவனிடம் பேச்சுக் கொடுத்துத் தெரிந்து கொண்டிருந்தாளே? அதனால் அந்த விஷயத்தை எடுத்துப் பேச்சை மாற்றுவதற்கு அவளுக்கு வெகு சௌகரியமாய்ப் போய் விட்டது.

சுதாகர் அவளுடைய அந்த அழைப்புக்கு வந்தனம் தெரிவித்தான். ஆனால் அந்தப் பங்களாவில் தங்கத் தன்னால் இயலாது என்றும் தெளிவாக மறுத்து விட்டான். "எனக்குத் தனிமைதான் மிகவும் பிடிக்கும். நான்கு பேரோடு கூடி யிருந்து எனக்குப் பழக்கம் இல்லை. ஓய்வு நேரங்களை நான் படிப்பிலும் சிந்தனையிலும் செலவிடுகிறேன். எனவே, என் இயல்புக்குத் தனிமைதான் உகந்தது. ஆகவே, மன்னிக்க வேண்டும்!'' என்றான்.

"தாங்கள் விரும்புவதுபோல் தங்களுக்கு இங்கேயும் தனியிடம் கொடுக்க முடியும். இந்தப் பங்களா மிகப் பெரியது. தங்கள் தனிமையைக் கலைக்க யாரும் வர மாட்டார்கள். தாங்கள் தங்கள் இஷ்டப்படி இங்கே தைரியமாக இருக்கலாம், தாராளமாகப் பழகலாம்!'' என்றாள் ராதா.

"அது சரி, ஆனால் எனக்குப் பிறர் வீட்டில் சாப்பிட்டுப் பழக்கமில்லை; தூங்கிப் பழக்கமில்லை. நான் மிகப் பெரிய சங்கோசி. என்னதான் நீங்கள் எனக்குச் சௌகரியம் செய்து கொடுத்தாலும் எனக்கு என்னவோ மாதிரித்தான் இருக்கும்; இடைஞ்சலாகவும் இடையூறாகவும் தோன்றும். அதனால்தான் சொல்கிறேன்!" என்று தன்னுடைய சிரமத்தைச் சொன்னான் சுதாகர்.

அதைக் கேட்ட ராதா யோசனையில் ஆழ்ந்தான். இவ்வளவு வற்புறுத்திச் சொன்னபிறகும் பங்களாவில் இருக்க முடியாது என்று நிர்மானமாக மறுத்த மனிதனை அன்றுதான் அவன் முதல் தடவையாகப் பார்த்தான். எத்தனையோ பேர் அழையா வீட்டு சம்பந்தியாக வந்து அவனுடைய பங்களாவில் பழி கிடந்திருக்கின்றனர். இன்னும் எத்தனையோ பேர் தங்கிப் போக இடம் கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்று பல்லை இளித்துக் கெஞ்சிக் கூத்தாடிக் காரியத்தைச் சாதித்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால் சுதாகரோ அவர்களுக்கெல்லாம் எதிராக, வீட்டுக்கு எஜமானியே 'தங்கு, தங்கு' என்று பன்முறை பன்னிப் பன்னி வேண்டிக் கொண்டுங்கூட 'முடியாது' என்று மறுத்துக் கொண்டிருந்தான். அது வியக்கக் கூடிய விஷயம்தானே?

## சௌக்கியமா?



























சபாக்காரர்:—ஆமாம், நாடகம் இப்பொழுது தான் ஆரம்பித்தது. சப்தம் போடாமல் மெல்ல உள்ளே போங்கள்.

வந்தவர்:— ஏன் அதற்குள்ளேயே எல்லோரும் தூங்கி விட்டார்களா?

"பங்களா பெரிதாகக் கிடக்கிறது. தங்கலாம் என்று நாம் சொன்னதைச் சுதாகர் தவருக எடுத்துக் கொண்டு விட்டாரோ? நம் பேச்சில் அவனுக்கு அகந்தை தொனிப்பதாகத் தோன்றியிருக்குமோ? அதனுல்தான் 'முடியாது' என்று மறுத்து விட்டாரோ?" என்று எண்ணிய ராதா, 'நாம் ஏன் அப்படிச் சொன்னோம்?' என்று மிகவும் மனம் வருந்தினாள். படிப்பிற் சிறந்தவர்களின் தன்மானத்துக்குப் பெருமை அளிக்க வேண்டும் என்ற கட்சியைச் சேர்ந்தவளாகையால், ராதாவின் மனத்தை என்னவோ செய்தது.

"இதை உங்கள் சொந்தப் பங்களாவாகவே எண்ணிக் கொண்டு இங்கேயே இருங்கள். இங்கே உங்களுக்கு வேண்டிய சௌகரியங்களுக்கெல்லாம் ஏற்பாடு செய்து தருகிறோம்!" என்று மறுபடியும் வேண்டினாள், அவனை எப்படியாவது மசிய வைத்து விடவேண்டும் என்ற நோக்கத்துடன்.

"வேண்டாம். வீண் சிரமம் உங்களுக்கு வேண்டாம். நான் இம்மாதிரியே தினம் வந்து படிப்புச் சொல்லித் தந்து விட்டுப் போகிறேன். கொஞ்ச நாட்கள் கழித்து நான் சொல்லித் தரும் முறை தங்களுக்குப் பிடித்தால் சொல்லுங்கள். அப்புறம் இங்கேயே இருப்பதற்கான ஏற்பாட்டைச் செய்து கொள்கிறேன்!" என்று மறுத்தும் மறுக்காமலும் பதில் சொன்னான் சுதாகர்.

அதற்குப் பிறகு ராதா அதிகமாகப் பிடிவாதம் பிடிக்கவில்லை. சம்பள விஷயமாகவும் ஒன்றும் பேசவில்லை. சுதாகரும் இத்தனை பெரிய வீட்டில் சம்பள விஷயமாகப் பேசுவது நம்முடைய தன் மானத்துக்குக் குறைவானது, அநாகரிகமானது என்று எண்ணிப் பேசாமலேயே இருந்து விட்டான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் வீட்டுக்குப் புறப்பட எண்ணி விடை கேட்டான். ராதாவும் வேறு மறுமொழி யொன்றும் கூருமல் அவனுக்கு விடை அளித்துவிட்டாள்.

ராதாவின் சுபாவம் சுதாகருக்கு மிகவும் விசித்திரமானதாகத் தோன்றியது. பெண்களுக்கு நல்ல கல்வியறிவு புகட்டப்பட வேண்டும் என்ற கட்சியைச் சேர்ந்தவன்தான் சுதாகர். ஆனுல் கல்வியறிவு முற்ற முற்றப் படித்த பெண்ணின் உள்ளத்து உணர்ச்சிகள் எத்தகையனவாகப் பரிணமிக்கும்? அதனுல் எத்தகைய முடிவுகள் ஏற்படும் என்பதைப் பற்றியெல்லாம் அவன் சிந்தித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வந்தவன் அல்ல. ஏதோ ஒரு குருட்டாம் போக்கில் குழந்தைத்தனமாக அந்த முடிவுக்கு வந்தவன்தான் அவன்.

எல்லை மீறிய கல்வியறிவு மனத்தையும் புத்தியையும் கட்டவிழ்த்து விட்டு மனிதனைச் சுதந்திர உணர்ச்சி யுடையவனாக்கி விடுகிறது. அந்தச் சுதந்திர உணர்ச்சி தோன்று தோட்ட காலந் தொட்டு, பரம்பரை பரம்பரையாக வாழ்ந்து வந்த வாழ்க்கையின் புராதனமான கோட்பாடுகளுக்கு எதிராகி விடுகிறது; புதிய கவர்ச்சி மிகுந்த வாழ்க்கையைத் தேடித் திரியும் அளவுக்கு மனிதனின் மனத்தை மயக்கி மாற்றி விடுகிறது. எனவே, மனிதனின் மனத்திலிருந்து வாழ்க்கையின் பழைய பழக்க வழக்கங்களும் பண்பாடுகளும் இடம் பெயர்ந்து தடம் புரண்டு விடுகின்றன. வாழ்க்கை புது விதமாகச் சுவடிடத் தொடங்கி விடுகிறது. கல்வியறிவு கொண்ட சமூகத்தில் நாம் இதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

புதிய வாழ்க்கையின் மீது ஏற்படும் மோகத்தினுல், ஊசி முனையில் சென்று குத்தித் தவருன பாதையில் போகவிடாமல் திருப்பும் பழைய கடுமையான நீதிநெறி முறைகள் வழுவி விடுகின்றன; பழைய கோட்பாடுகள் தாறுமாருகத் தகர்ந்து விடுகின்றன; பழைய பலபண்புகள் சிதறிச் சின்னபின்னமாகி விடுகின்றன. வாழ்க்கை சுவடு விட்டுச் சுவடு மாறிப் புதுப் பாதையில் கூடச் செல்லத் தொடங்கி விடுகிறது. நீதி நெறி முறையென்னும் சொற்களின் பரிபாஷையே கூட இடம் பெயர்ந்து தடம் புரண்டு விடுகின்றன.

ஆனுல் ஆசாரம் ஒழுக்கம் ஆகியவை பழைய நீதி நெறிகளுடன் மட்டும்தான் நெருங்கிய தொடர்பு கொண்டவையா? புதிய நீதி முறைகளுக்கும் அவற்றுக்கும் ஸ்தானப் பிராப்தி கூடக் கிடையாதா? 'பழையன கழிதலும், புதியன புகுதலும்' கொள்கை தவருனது என்று ஊர்ஜிதம் செய்துவிட முடியுமா? இதையெல்லாம் பற்றி இப்பொழுது சிந்திக்க இந்த உலகத்தில் யாருக்கு நேரம் இருக்கிறது? (தொடரும்)

# காமுவின் தலைதீபாவளி

துரோணன்

சில வருஷங்களாக இல்லாத ‘தீபாவளி மழை’ இந்த வருஷம்தான் அதிசயத்துடன் ‘சோ’ வென்று கொட்டிக் கொண்டிருந்தது. வெளி வானம் பார்ப்பதற்கே பயங்கரத்துடன் கன்னங் கரேலென்ற மேகங்களைச் சுமந்து கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கொருதரம் தடபுடலான இடி முழக்கங்கள். பின்னர் அதைத் தொடர்ந்து ‘பளீ’ரென்ற மின்னல்கள்! இந்த ஆர்ப்பாட்டங்கள் தீபாவளிக்கு நான்கு தினங்களுக்கு முன்பிருந்தே அடாப் பிடியாக ஆரம்பித்திருந்தன.

வெளி உலகத்தின் இத்தகைய சோகக் கட்டம் முழுவதும் தாயுள்ளமான காவேரியின் மிருதுவான இதயத்தைக் கசக்கிப் பிழிந்தது போன்று இருந்தது.

சமையலறையில் காரியமாக இருந்தகாவேரியம்மாள் பைத்தியம்போல் தானாகவே பொருமித் தள்ளிக் கொண்டிருந்தாள். அதன் காரணம், வீட்டில் மளிகைச் சாமானோ ஒன்றில்லை. ஜவுளிகளோ, எல்லாம் கடைத் தெருவிலிருந்தன. பணம் இருக்கும் இடமோ-கொஞ்சம்கூடத் தெரியவில்லை. இத்துடன் போதாதென்று, கொட்டிலில் கட்டியிருந்த காராம் பசு தீவனமில்லாமல் பொறுமையுடன் வெறும் வாயை மென்று கொண்டிருந்தது! இவ்வளவு சம்பிரமங்களுக்கு மத்தியில் காமுவின் தலை தீபாவளி நடக்க வேண்டியிருந்தது. மாப்பிள்ளை வருவதற்கு முன்னர், அவருடைய வருகை பற்றிய செய்தியும்; தீபாவளித் திட்டங்கள் பற்றிய குறிப்பும் முதல் நாள் காலைத் தபாலில் வந்திருந்தன. அப்பொழுதே மேல் துண்டை உதறிப் போட்டுக்கொண்டு கிளம்பிய ராஜாராமய்யர் இன்னமும் திரும்பிய பாடில்லை. இதெல்லாம் ஒரு பக்கம் இருந்தாலும், எங்கும் வெளியே சென்று வர முடியாதபடி, இந்த மழை வேறு வந்து சோதனை செய்ய வேண்டுமா?

“ஏ, காமு—காமு!” தாய் காவேரியம்மாளின் கூப்பாடு அந்த மழையொலியில் கலந்து கொண்டது. ஆனால், காவேரி கூடத்துப் புறத்துக்கு வந்து, புழக்கடைப் புறத்தை நோக்கி மீண்டுமொருதரம் கூவினாள். அப்பொழுதுதான் தோட்டத்து மாட்டுக்கொட்டிலில் பசுவின் சமீபமாக நின்று கொண்டிருந்த காமுவின் செவிகளில் விழுந்தது. அடுத்த கணம், அவள் பதறியபடியே முற்றத்து மழையில் நனைந்த வண்ணம் ஓடி வந்தாள்.

அம்மா சீறினாள்: “எங்கேயடி தொலைந்து போனாய்? இப்போதான் மாட்டைக் கொஞ்சுவதற்கு வேளை பார்த்தாயாக்கும்? அதுதான் எல்லாம் சூழியறத்துக்குக் காலம் வந்துடுத்தே — நல்லத்துக்கா நீ பிறந்தாய்? பிறக்கிறபோதே மழையையும் அழைத்து வந்து சந்தி சிரிக்க வைச்சே; உன் கலியாண முகூர்த்தத்தன்றைக்கும் இப்படித்தான் மழை வந்து ஐந்நூறு ரூபாய் சாமான்களையும் நாசம் பண்ணி விட்டது. இப்போதும் உன் தலை தீபாவளிக்கும் அடை மழை வந்து கழுத்தை யறுக்கிறது. நீ ஒரு துக்கிரி!”

காமு இலேசாக விம்மினாள். “என்னை என்னம்மா பண்ணச் சொல்றே? நானா மழையைக் கூப்பிட்டேன்?”

“ஓ, ஓ! மற்ற குழந்தைகள் இரண்டும் பிறந்த போதெல்லாம் இப்படியா அமர்க்களம் நடந்தது? இல்லை—போன வருஷம், மூணு வருஷமெல்லாம் தீபாவளிக்கு மழை பெயறதுதானே?” என்று காவேரி சற்று விடுவிடுப்பாகவே கூறிவிட்டு, எங்கேயடி பசங்கள் ரெண்டும்?” என்றாள் சற்று அதட்டலான குரலுடன்.

“எங்கேயோ மத்தாப்பு வாங்கணும் என்று ரெண்டு பேரும் ஓடினார்கள்; நான் கூப்பிட்டதையே இலட்சியம் பண்ணலியே அம்மா, நான் என்ன செய்யறது?” என்று காமு அடக்கமான குரலுடன் கூறிக் கொண்டே கையைப் பிசைந்தவாறு நின்றாள். ‘படபட’ வென்று தொடர்ந்த ஒரு இடி முழக்கம் செவிகளைப் பிளந்தது.

“வாசற்புறமாவது போய்ப் பார்த்துக் கூப்பிட்டுத் தொலையேண்டி, மரம் மாதிரியா நிற்கிறாயே? உன் அப்பாவானால் நேற்றுக் காலை போனவரைக் கண்ணியேயே காணோம். எங்கே போனாரோ — கிடைத்ததோ, இல்லையோ? இந்தக் காலத்திலே யார் காலணாக் கடன் கொடுப்பார்? எதுக்குமே அதிர்ஷ்டம் வேணும்” என்று அரைக் கணத்திற்குள் காவேரி வார்த்தைகளைக் கொட்டித் தீர்த்து விட்டு உட்புறம் திரும்பிச் சென்றாள்.

காமு இரேழிப்புறம் சென்றதற்கும், வாசற் புறத்திலிருந்து உடையும், உடலும் சொட்ட நனைந்த வண்ணம் ராஜாராமய்யர் வருவதற்கும் சரியாக இருந்தது. காமு பரபரப்புடன் திரும்பி உள்ளே ஓடினாள். அடுத்த கணமே செய்தியறிந்த காவேரியம்மாள் உள்ளேயிருந்து வந்து, உலர்ந்த உடைகளை யெடுத்துத் தன் கணவரிடம் கொடுத்தபடியே அவரது முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். ஒரு நிமிஷப் பார்வைதான். அடுத்தபடியாக, அதே பார்வையை ஆக்ரோஷத்துடன் காமுவின் பக்கம் திருப்பினாள் காவேரி. அவளது விழிகள் தன் மகளின் அதிர்ஷ்டஹீனத்தைப் பற்றிய வசைகளைப் பொழிந்து கொண்டிருந்தன. ஏனெனில், முயற்சியின் அபஜயம் அவரது முகத்தில் பிரதிபலித்தது!

“நாம் பிராணனை விட்டுப் பாடுபட்டால் போதுமா? எதற்கும் அதிர்ஷ்டம்னு ஒன்று

இருந்தாத்தான் நடக்கும்!" என்று தன் கணவரின் முகத்தை நோக்கியபடி காவேரி கூறிக்கொண்டே ஒருதரம் பெருமூச்செறிந்தாள். தொடர்ந்து, "அப்புறம் என்ன யோசனை?" என்றாள் பரிவாக.

"அப்புறம் என்ன? இனிமேல் ஒரு அடி கூட நகர என் காலில் தெம்பு இல்லை."

"உங்கள் கையிலே காசு இல்லை; காலிலே தெம்பு இல்லை. மாப்பிள்ளை மனசிலே அழுப்பு தானிருக்கிறது. என்னத்தைப் பண்ணுகிறது?" என்று காவேரி கூறிக் கொண்டே காமுவை நோக்கினாள். எல்லாவற்றிற்குமே குற்றவாளி 'நீதான்' என்பது போலிருந்தது அவளது பார்வையின் வேகம்.

ராஜாராமய்யர் இலேசாக ஒருதரம் சிரித்துக் கொண்டார். "ஹூம்! நாலு பவுன் சங்கிலியில்லாமல் மாப்பிள்ளைக்குக் கை கடிகாரம் ஓடமாட்டேன் என்கிறதாம்! என்ன நாசூக்காக எழுதி விட்டான்!" என்று விரக்தியுடன் கூறிக்கொண்டார். பின்னர், ஊஞ்சல் சங்கிலியிலேயே சாய்ந்த வண்ணம் சற்று நேரம் சிந்தனை செய்தார். காவேரியும் உட்புறம் சென்றாள். ஆனால் அடுத்த கணமே, "காவேரி, இனி எனக்கு ஒருவழியும் தெரியவில்லை. இன்னும் இருப்பதோ ஒரே நாள் பொழுதுதான். ஆகையினாலே, நம்ம பசு கோமுவைக் கந்தன் கிட்டே கொடுத்து, தஞ்சாவூர்ச் சந்தையிலே கொண்டு போய் விற்கச் சொல்ல வேண்டியதுதான். நமக்குப் பிராப்தம் அவ்வளவுதான்" என்று நாக்குளற, இதயம் துடிக்க அடங்காத் துக்கத்துடன் கூறினார் ராஜாராமய்யர்.

காவேரி நீண்ட பெரு மூச்செறிந்தாள். பின்னர், ஆயாசத்துடன், "அம்பிகே, இன்னும் என்னவெல்லாம் சோதனை செய்யப் போகிறாயோ?" என்று கூறிக்கொண்டே ஒரு பொட்டுக் கண்ணீரையும் உகுத்தாள்.



கூடத்துப் புறத்துக் களஞ்சியத்தின் ஓரமாகக் கண்ணீரும் கம்பலையுமாக நின்று கொண்டிருந்த காமுவின் செவிகளில் இச்செய்தி விழுந்ததுமே அவள் ஒருகணம் அரண்டு விட்டாள். "அப்பா" என்று கூவிக் கொண்டே அவருடைய சமீபமாக வந்து தேம்பித் தேம்பியழ ஆரம்பித்தாள்.

"அப்பா, நான் ரொம்ப துரதிருஷ்டக்காரி. என்னால்தானே நீங்களெல்லாம் இவ்வளவு கஷ்டப்படுகிறீர்கள்? நடக்கிறபடி நடக்கட்டும். இதற்காக நம் வீட்டிலுள்ள கோமுவை விற்கக்கூடாது. அது எத்தனையோ தலைமுறையான வம்சம் என்று எனக்குப் பாட்டி சொல்லியிருக்கிறாள்." இந்த வார்த்தைகள் காமுவின் தேம்பல்களுக்கிடையே திக்கித் திக்கி வெளிப் பட்டன.

"வேறே என்னம்மா செய்யறது? நானும் நேற்றுக் காலை முதல் ஒரு மழைத் துளிகூட விணாகாமல் அலைந்து விட்டேன். காசுக் கடையில் போய்த் தவணைக்குக் கூடக் கேட்டுப் பார்த்து விட்டேன். ஒரு டாக்டர் பரீட்சை தேறின ஒரு அழகான மாப்பிள்ளை எனக்கு ஏற்பட்டதே ஏதோ ஒரு பெரிய அதிர்ஷ்டம். அவனது மனம் கோணாமல் இப்பொழுது இதை நாம் வாங்கிக் கொடுக்க வேண்டாமா? அசடு—பேசாமலிரு" என்று கனிவும் ஆறுதலும் பிரதிபலிக்க ராஜாராமய்யர் கூறி முடித்தபொழுது காமுவின் கபடற்ற உள்ளம் அவளது துக்கத்தை மிகைப்படுத்திற்று.

அந்தப் பசு ராஜாராமய்யரின் குடும்பத்தில் எவ்வளவோ வம்சமாக வந்திருந்தது. அதைப் பிரிவதென்றால் எவ்வளவு துக்கங்களையும் சமாளிக்க வேண்டியிருக்கும்? ஆனால், என்ன பயன்? பசுவையும், கன்றையும் சேர்த்து, கந்தனின் கையில் ஒப்படைத்தபோது, ராஜாராமய்யர் சிறு குழந்தைபோல் விம்மினார். இதையெல்லாம் உணர்ந்துதானோ, என்னவோ, அந்த நன்றியுள்ள பசுவும் கொட்டிலைச் சுற்றிச் சுற்றிவந்து, 'ஹூங்' காரமிட்டபடியே நின்றது!

வெளியுலகத்தில் — தீபாவளியின் முழக்கங்கள் திகழ்ந்து கொண்டுதானிருந்தன. ஆனால், 'கர்ணம் ராஜாராமய்யரின் வீட்டிலோ — பசு பணமாகவும், பணம் பவுனாகவும், துணியாகவும் மாறுவதற்காகச் சந்தையை நோக்கி அப்பொழுதுதான் ஊர்ந்து கொண்டிருந்தது!

## 2

விடியற்காலை மழை சற்று நின்றிருந்தது. கார்மேகங்களெல்லாம் கலைந்து நாலா திக்குகளிலும் பரவிச் சிதறிக் கொண்டிருந்தன. கீழ்வானத்தின் வெளிறிய மஞ்சள் ஒளி ஏதோ ஒரு பிரமையை நீக்கும் நம்பிக்கை போல் உதயமாகிக் கொண்டிருந்தது.

முதல் நாளிரவு கந்தன் திரும்பி வந்து, பசுவைத் தரகன் ஒருவனிடம் இருநூற்றைம்பது ரூபாய்க்கு விற்றதாகவும், அந்தத் தொகை முழுவதும் தங்கச் சங்கிலி ஒன்

திற்கே போதுமானதாக இருந்ததாகவும் தெரிவித் திருந்தான். பாவம், குற்றவாளியான காமு என்ன செய்ய முடியும்!

இன்னும் வைகறைக் கோழி கூடக் கூவவில்லை. கூடத்துப் புறத்தில் ஏழைமைப் போரின் சலனம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

வாசலில் எதிர்பாராதபடி ஒரு அழகான 'ஆஸ்டின் கார்' வந்து கிரீச்சிட்டபடி நின்றது. இந்தச் செய்தியறிந்த கணமே, கூடத்தில் பயங்கரமான மௌனமும், பரபரப்பும் குடி புகுந்தன. காரை விட்டு இறங்கிய டிரைவர், ராஜாராமய்யரிடம் வந்து "என்னுங்க சார், இப்படிப் பண்ணிப்பிட்டீங்க! சீக்கிரமா, வீட்டுலே அம்மா, குழந்தைகள் எல்லாரையும் கையோட அழைச்சிக்கிட்டு வரச் சொல்லி ஐயா அனுப்பிச் சிருக்காங்க! போய்க் காரிலே ஏறுங்க" என்றான் பதற்றமான குரலுடன்.

ராஜாராமய்யர் ஒன்றும் புரியாமல், கலவரமடைந்தார். "ஊரிலே ஐயா, பெரியம்மா, எல்லாரும் சௌக்கியந்தானே? ஐயா வரவில்லையா?" என்றார் பரபரப்புடன்.

"எல்லாரும் சௌக்கியந்தாங்க. கிளம்புங்க எல்லாரும்! இனிமே இந்த சகதி ரோட்டிலே பத்து மைல் போயாகணும். உங்களைக் கொண்டு போய் விட்டு விட்டு அதற்கு மேலேதான், நான் ஐயாவை ஒரு கேசக்காக அழைச்சிக்கிட்டுப் போகணும்—இதற்காகத்தான் என்னை ராத்திரி ரெண்டு மணிக்கே கிளப்பி விட்டாங்க" என்று அவன் பாட்டில் ஏதேதோ கூறிக் கொண்டே அவர்களைத் துரிதப்படுத்தினான் டிரைவர்.

அடுத்த கணம், புரியாமலே, இயந்திரம் போல் எல்லோரையும் ஏற்றிவிட்டுத் தாமும் ஏறிக் கொண்டார் ராஜாராமய்யர். முதல் நாள் வாங்கி யிருந்த அந்த தங்கச் சங்கிலியையும் அவர் மறக்காமல் எடுத்துக் கொண்டார். அடுத்த நிமிஷம் முதல், எதிர்க் காற்றைப் பிளந்து கொண்டு சென்ற காரின் உட்புறத்தில் மூன்று இதயங்கள் விஷயம் புரியாது பதைத்துக் கொண்டிருந்தன.

* * *

இருபது மைல்களையும் ஒன்றரை மணி காலத்திற்குள்ளாகவே உதறி விட்டு வந்திருந்த ஆஸ்டின் கார் கர்வத்துடன் 'கிரீச்' சிட்டபடியே வீட்டு வாசலில் நின்றது. மாப்பிள்ளையான டாக்டர் சேதுராமன் வாசற் புறத்திலேயே காரின் வரவுக்காகக் காத்திருந்தான். அவனுடன் நின்று கொண்டிருந்த நண்பன் உடனே ஓடோடியும் சென்று உட்புறத்தில் தகவலைத் தெரிவித்தான்.

அடுத்த கணத்தில், ஒரு இளம் பெண் கையில் ஆரத்தித் தாம்பாளத்துடன் வந்து காமுவுக்கு வரவேற்புக் கூறிவிட்டு, எல்லோரையும் உள்ளே அழைத்துச் சென்றாள். இவையெல்லாம் கனவா, நனவா என்று யோசித்துக் கொண்டே ராஜாராமய்யர் சந்தேகமும் வியப்பும் பொங்கத் தம் கண்களாலேயே ஓராயிரம் கேள்விகள் விடுத்து விட்டார்!

சாதாரணமான குசலப் பிரச்னங்களுக்குப் பின் ராஜாராமய்யரின் வியப்புக்களும், படபடப்பும் தீருவதற்குத் தானாகவே ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டது!

"மாமா, நேற்று மத்தியானம் வரையில் உங்கள் மீதெல்லாம் பிரமாதமான கோபத்துட னிருந்தேன். ஆனால், நேற்றிரவுதான், இந்தப் பழி—இதோ இருக்கிறானே, என் சிநேகிதன் சீனு—இவன் தன்னுடைய குற்றங்களை ஒப்புக் கொண்டு, கன்னத்திலும் போட்டுக் கொண்டான்! அப்புறம்தான் என் கோபம் தீர்ந்து, இன்று விடியற்காலை உங்களிடம் காரை அனுப்பி அழைத்துக் கொண்டு வரச் சொன்னேன்" என்றான் மாப்பிள்ளையான டாக்டர் சேதுராமன்.

"ஏன், அப்படி யென்ன நடந்துவிட்டது?" என்றார் ராஜாராமய்யர் ஆர்வத்துடன், அவனது நண்பனை உற்று நோக்கியபடியே.

"நீதான் நடந்ததைச் சொல்லேண்டா! குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கின்றதோ?" என்று நண்பனை நோக்கிக் கேட்டு விட்டுக் கண்களைச் சிமிட்டிக் கொண்டே மாமனாரின் பக்கம் திரும்பினான் சேதுராமன்.

"மாமா, எனக்கு இருக்கும் உறவினர்களெல்லாம், என்னுடைய வயசான தாயாரும், இந்தச் சிநேகிதன் சீனுவும்தான் என்பது





ஒருவர்:—ஸார் எங்கே போனாலும் பணம் பணம் பணம் என்கிறான் எனக்குப் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கு.

மற்றவர்: — பரவாயில்லை. ஆஸ்பத்திரியிலே உங்களை இலவசமாகவே சேர்த்துக் கொள்வார்கள்.

உங்களுக்குக் கலியாணத்தின் போதே தெரிந்திருக்குமே?'' என்றான் சேது.

ராஜாராமய்யர் தலையசைத்தவாறே ஆமோதித்தார். சேது தொடர்ந்தான் :

''என் தாயாருக்கோ, எனக்கோ - பிறர் ஏதாவது செய்வது என்பது பிடிக்காது. அவளுக்கும் ரொம்ப வயசாகி விட்டபடியால், எங்கும் கிளம்புவது முடியாது. ஆகவே, உங்களையும், குழந்தைகள் எல்லோரையும் தீபாவளிக்கு நான்கு நாட்கள் முன்னாடியே இங்கு வரவழைத்து விடுவது என்றும், இந்தப் போக்கிரிச் சீனுவையும், இவன் சம்சாரம் கோமதியையும் சேர்த்து வைத்து வேலை வாங்குவது என்றும் என் தாயார் யோசனை கூறினாள். அதன்படியே, உங்களுடைய கடிதம் கிடைத்த அன்றைக்கே, உங்களையெல்லாம் கிளம்பி வரும்படியாகக் கடிதம் எழுதி மேஜைமீது வைத்திருந்தேன். இந்த யோக்கியன் அதை மறைத்துவைத்துவிட்டு, என்னென்னவோ எழுதி, என் கையெழுத்துப் போலவே 'போர்ஜரி'யும் செய்து உங்களுக்கு அனுப்பியிருக்கிறான்! என் தாயார், 'ஏன் அவர்களெல்லாம் வரவில்லை'யென்று கேட்டுக் கேட்டு என் பிராணனை வாங்கி விட்டாள். இந்த விஷயத்தை இந்தப் பிரபுகூட என்னிடம் சொல்லவில்லை. அவனது மனைவிதான் சொன்னாள்!'' என்று கூறிவிட்டு, நண்பனை ஒருதரம் ஏற இறங்கக் கவனித்துப் பார்த்தான் சேதுராமன்.

''அப்பா சாதுக் குழந்தை! போதும் நிறுத்து. என் கலியாணத்தின் போது நீ செய்த அட்டகாசங்களுக்கெல்லாம் இது உறைபோடக் கூடக் காணாது!'' என்று கூறிவிட்டு நகைத்தான் நண்பன் சீனு.

திகைப்பும், பரபரப்பும் சேர, ராஜாராமய்யர் விழித்தார்! இதற்குள்ளாக, உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்த மற்றொரு செய்தி அவரைத் திக்குமுக்காடச் செய்தது!

''சம்பந்தியம்மா! நீங்கள் ஏழையோ, கோழையோ - இதெல்லாம் நம்ப செயலிலே இல்லை. ஆனால், உங்கள் பெண் எங்கள் வமிசத்துக்குள் நுழைந்த மறு வாரமே, உங்கள் மாப்பிள்ளைக்கு கவர்மெண்டு ஆஸ்பத்திரியிலே வேலையாகிவிட்டது! ஊரிலே, உலகத்துலே எத்தனையோ இருக்கு - எல்லாத்துக்குமே அதிர்ஷ்டம் வந்துட்டுதா? அதிர்ஷ்டம்னு ஒண்ணு இருந்து விட்டால், பேயாத மழையெல்லாம் கூடப் பேயும்!'' என்றது ஒரு கிழட்டுப் பெண் குரல்.

அடுத்த ஒரே கணத்தில் காவேரியின் தாயுள்ளத்தை அரித்துக் கொண்டிருந்த ஏழ்மையின் கொடுமை விடை கொண்டு விட்டது! ஆனந்த பாஷ்பம் பொங்க இரேழிப் புறத்திலிருந்த தன் பர்த்தாவை நோக்கினாள் புதுமையடைந்த காவேரியம்மாள்!

அந்த நிமிஷம் முதல் காமுவின் தலை தீபாவளி ஏக அமர்க்களத்துடன் நடந்தது!

விடியற்காலை கங்கா ஸ்நானத்துக்குப் பின், ராஜா ராமய்யர்தாம் கொண்டு வந்திருந்த அந்தத் தங்கச் சங்கிலியைத் தாம்பாளத்தில் எடுத்து வைத்தார். ஆனால், அடுத்த கணமே இதைக் கவனித்துக் கொண்டிருந்த சீனு ஓடோடியும் வந்து அவருடைய காதுடன் சில செய்திகளைக் கூறித் தன்மானத்தைக் காப்பாற்றிக் கொண்டான்!

ஊரெங்கும் தீபாவளியின் வெடி சப்தங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. இதனிடையில் இன்னொரு அதிசயமும் நிகழ்ந்தது.

''ஏண்டாப்பா, சேது! இந்த மாட்டைச் சங்கிலியைப் போட்டாவது கட்டச் சொல்லக் கூடாதா? நன்றும் மாடு வாங்கிக் கொண்டு வந்திருக்கான் உன் டிரைவர்! முந்தா நாள் சாயந்திரம் அது வீட்டுக்கு வந்தது முதல் அது பண்ணுகிற அட்டகாசம் சகிக்க முடியல்லே! இங்கே வந்து பாரு. அதுவும் தீபாவளி கொண்டாட முற்றத்திலே வந்து நிற்கிறது!'' என்றாள் சேதுராமனின் தாய்.

கூர்மையான காதும், நுண்ணிய அறிவும் கூட அந்த வம்சாவளிப் பசுவின் உள்ளம் தான் பழக்கப்பட்டிருந்த குரல்களைக் கேட்டதுமே சும்மா இருக்க முடியுமா? பாதி அறுந்த தும்பும் கழுத்துமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்த கோமு தன் வாலை உயர்த்தியபடியே 'ஹூங்கார'த்துடன் முற்றத்தில் கூத்தாடிக் கொண்டிருந்தது!

அதன் கழுத்தை யணைத்தபடியே தன் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்தாள் காமு!


அஜந்தா

T.H. 8964



# பரம்பரை குணமேன்மை



இந்த இணையில்லா கூந்தல் சிங்காரம் அஜந்தா சில்பம் செய்த நாட்களில் செய்து வந்ததைப்போலவே, இன்றும் திறமையுடன் செய்து கொள்ள முடிகிறது. இருபதாண்டுகளாய் அதன் சிறந்த குணங்களால் டாம்கோ பரிமள கூந்தல் தேங்காய் எண்ணை இந்தியக் குடும்பங்களில் ஒரு பரம்பரையை வளர்த்திருக்கிறது.

**டாம்கோ**

**பரிமள கூந்தல் தேங்காய் எண்ணையும் ஷாம்பூவும்.**

A TATA PRODUCT

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, லிட்.

மெம்பர், இந்தியன் சோப் அண்டு டாய்லட்ரீஸ் மேக்கர்ஸ் அஸோஸியேஷன்

# வட இந்திய தீபாவளிகள்

எஸ். ஆர்.

தீபாவளிப் பண்டிகையை வட இந்தியர்கள் எவ்விதம் கொண்டாடுகிறார்கள் என்பதைக் கேட்கப் பலருக்கும் ஆர்வம் உண்டாகலாம். தீபாவளியன்று மாப்பிள்ளையை அழைக்கும் வழக்கமோ, புது உடைகள், புடவைகள் வாங்கும் வழக்கமோ அவர்களிடையே இல்லை.

வட இந்தியாவில் உள்ள எல்லாப் பிரதேசங்களிலும் அன்று சூரிய அஸ்தமன சமயத்தில் தீப அலங்காரம் செய்யப்பட்டிருக்கும். அப்போது மகாலக்ஷ்மி பூஜை செய்வார்கள். சில பாகங்களில் தனலக்ஷ்மி பூஜை என்று சொல்லுவார்கள். சில விடங்களில் பிரதோஷ லக்ஷ்மி பூஜை என்றும், குபேரபூஜை என்றும் குறிப்பிடுவோர் உண்டு.

குறிப்பாக வங்காளத்திலே மாலையில் லக்ஷ்மி பூஜையுடன் நள்ளிரவு காளி பூஜையும் நடைபெறும்.

குஜராத்தி, மார்வாரி முதலிய மற்றும் வியாபாரம் நடத்தும் இதரப் பிரதேசத்தினர் யாவரும் தீபாவளியன்று மாலையில் தம் வியாபார ஸ்தலங்களை நன்கு அலங்கரிப்பார்கள். தங்களுடன் லேவாதேவி வைத்துக் கொண்டு இருக்கும் அனைவரையும் அழைத்து அவர்களுக்கு வெற்றிலை, பாக்கு, பக்ஷணம் முதலியவைகளை வழங்குவது உண்டு. அன்று புதுக் கணக்குப் புஸ்தகங்களை ஆரம்பித்து "அன்று தேதியில் வரவு ரு..." என்று பதிவு செய்வார்கள்.

ஒரு தாம்பாளத்தில் தங்க நாணயங்களையோ (சவரன்) அல்லது வெள்ளி ரூபாய்க் குவியலையோ வைத்து அதை லக்ஷ்மியாகப் பாவித்து அதற்குப் பூஜை நடத்துவார்கள். வாசலிலும் வீடு முழுவதும் நாம் கார்த்திகைக்கு அகல் தீபம் ஏற்றுவது போல் அவர்கள் தீபம் ஏற்றுவது உண்டு. வட இந்தியாவில் வசிக்கும் தென் இந்தியர்கள் அவர்களைப் போல் தீபாவளியின் போது அகல் தீபம் ஏற்றாமல் கார்த்திகையின் போது ஏற்றுவதைக்கண்டு அவர்கள் பெரிதும் வியப்புறுவதும் உண்டு.

* * *

பஞ்சாப், டில்லி, உத்தரப் பிரதேசம் முதலிய இடங்களில் தீபாவளி தினத்தன்று குடும்பத்தில் சாதாரணமாக உபயோகப்படும் படியான பித்தளைப் பாத்திரம் ஒன்று வாங்கும் வழக்கமும், குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் ஒரு சிறு மண் பொம்மை அளிக்கும் வழக்கமும் இருந்து வருகின்றன. அன்று தெரு முழுவதும் வரிசை வரிசையாகப் பாத்திரங்கள் அடுக்கியுள்ள கடைகளையும் பொம்மைக் கடைகளையும் காணலாம்.

வங்காளத்தில் மாத்திரம் மேலே கூறப்பட்ட லக்ஷ்மி பூஜையை ஒரு தனி முறையில் கொண்டாடுகின்றனர். வாழைமரத்தின் பட்டையை நறுக்கி அதைப் படகுபோல் செய்து அதன் நடுவில் மாட்டுச் சாணியால் செய்யப்பட்ட உருண்டை ஒன்று வைக்கப்படும். இந்தப் படகை வீட்டு வாசற்படியின் வெளியில் இடது புறம் வைத்து அதன் அருகில் ஒரு அகலை ஏற்றி வைப்பார்கள். வீட்டுச் சிறுவர்கள் கிழிந்த முறம் அல்லது சல்லடையைத் தட்டி மேளம் வாசிப்பார்கள். சிறிது சணல் தட்டை அல்லது வைக்கோலைக் கொளுத்தி இந்தப் படகைச் சுற்றி வெளியில் எறிந்து விடுவார்கள். அதாவது அலக்ஷ்மி வீட்டை விட்டு வெளியே அகற்றப்பட்டாள் என்று பொருள்.

பிறகு வாசலில் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு, வாயைக் கொப்பளித்து வீட்டிற்குள் நுழைந்து வேறு ஒரு படகில் மாவினால் செய்த லக்ஷ்மியைப் பூஜிப்பார்கள். இந்தப் படகில் மாவினால் செய்யப்பட்ட மூன்று மூர்த்திகள் வைக்கப்பட்டிருக்கும். நடுவில் மஞ்சள் வர்ணத்தில் லக்ஷ்மியும், கறுப்பு வர்ணத்தில் ஒருபுறம் குபேரனும், மற்றொரு புறம் நீல வர்ணத்தில் நாராயணரும் வீற்றிருக்க, பதினாறு அல்லது இருப்பத் தொன்று திரிகள் கொண்ட மாவிளக்கினால் தீப ஆராதனை நடைபெறும். அதன் பிறகு இந்தப் படகு ஒரு அகல் தீபத்துடன் கங்கையிலோ, குளத்திலோ கொண்டு விடப்படும்.



பரமஹம்சர் பூஜித்த கல்கத்தா காளி கோவில்

மேற் கூறிய லக்ஷ்மி பூஜையைச் சாயந்திரம் முடித்த பிறகு, வங்காளிகள் நள்ளிரவில் காளி பூஜையை நடத்துவார்கள். மூன்று அல்லது நாலு அடி உயரம் பயங்கரத் தோற்ற மளிக்கும் காளியின் மண் பிரதிமைகளை இரவு பத்து மணிக்குப் பிரதிஷ்டை செய்வார்கள். அதன்முன் அகல் தீபங்கள்

ஏற்றுவார்கள். ஆடுகளைப் பலியிடுவார்கள். இரவு முழுவதும் ஹோமம் முதலிய பூஜைகளை நடத்தி மறுநாள் அதி காலையில் பூஜையை முடிப்பார்கள். இவ்வருஷம் நவம்பர் ஐந்தாம் தேதி வியாழக்கிழமை இரவு காளி பூஜையும், வெள்ளிக்கிழமை சாயந்திரம் லக்ஷ்மி பூஜையும் கொண்டாடப்படும்.

குஸ்தி, கசரத் முதலியவைகளைப் பழக ஏற்பட்டுள்ள "வ்யாயாம் மண்டல்" எனக் கூறப்படும் சங்கங்கள் அநேகம் வங்காளத்தில் இருக்கின்றன. காளி சக்தி ஸ்வரூபமாகையால், அவள் தான் பலம் அளிப்பதற்கு ஏற்ற அதிதேவதை எனக் கருதி, இந்தச் சங்கங்களில் எல்லாம், காளியின் பிரதிமைகளை அமைத்து அவசியம் அன்று இரவு பூஜை செய்வார்கள். மறுநாள் இந்தப் பிரதிமைகளை ஊர்வலமாக எடுத்துச் சென்று ஆறு அல்லது குளத்தில் விட்டு விடுவது வழக்கம்.



தீபாவளி தினத்தில் வங்காளிகள் பூஜை செய்யும் காளிப் பிரதிமை.

* * *

தீபாவளிக்கு அடுத்து வரும் ஒன்பதாவது நாள்தான் அக்ஷய நவமியாகும். அன்று சூரியன் துர்க்கை அம்மனைப் பூஜித்து வரம் பெற்றதாகக் கூறப்படுகிறது. வங்காளத்தில் ஒவ்வொரு வீட்டிலும் அன்று ஜகதாத்ரி என்றபெயருடன் துர்க்கைபூஜிக்கப்படுகிறாள்.

இது துர்க்கா பூஜையைப்போல் பிரதிமைகள் அமைத்துப் பொது ஸ்தலங்களில் மிகுந்த ஆடம்பரத்துடன் பூஜிக்கப்படுவது இல்லை. அதிக அமளியின்றி ஒவ்வொரு வீட்டிலும் இப் பூஜை நடைபெறும்.

இதற்குப் பிரதிமைகள்கூட அமைப்பதில்லை. ஒரு கலசம்தான். ஜகதாத்ரியின் சின்னம். பூஜையும் ஒரே நாள்தான். அன்று துர்க்கையைப் பூஜிப்பவர்களுக்கு, சேர்ந்தாற்போல் நான்கு மாதங்கள் துர்க்கையைப் பூஜித்த பலன் கிட்டும் என்று தேவி புராணம் கூறுகிறது.

* * *

தித்திப்புப் பண்டங்கள் தீபாவளி ஸ்நானத்துக்குப் பிறகு உண்ணும் வழக்கம் வட இந்தியாவிலும் பரவி உள்ளது. "தினம் தினம் பட்சணம் தின்ன இது தீபாவளியா என்ன?" என்று ஹிந்தியில் ஒரு பழமொழி உண்டு. சர்க்கரைப் பாகை மர அச்சிலிட்டு மிருகங்கள்போலும் பக்ஷிகள்போலும் பொம்மைப் பட்சணங்களை அநேக வர்ணங்களில் செய்து அன்று கடைகளில் விற்பனை செய்வார்கள். இது தீபாவளி சமயம்தான் கிடைக்கும்; மற்றச் சமயங்களில் கிடைக்காது. ஒவ்வொருவரும் மேற்படி பட்சணங்களைக் கடைகளில் வாங்கி உண்பது வழக்கம்.

சிறு குழந்தைகளும் பெரியோரும் கண்களுக்கு இட்டுக்கொள்ளும் மை தீபாவளி அன்று இரவுதான் கூட்டப்படும். இதற்கு "அமாவாஸ் - கா - கஜல்" என்று பெயர். தீபாவளி இரவு கூட்டிய மை இட்டுக்கொண்டால்தான் திருஷ்டி படாமல் தடுக்கலாம் என்ற நம்பிக்கை வட இந்தியாவில் நிலவி வருகிறது. இந்த மை திரட்டுவதற்குக் கடுகு எண்ணெய்தான் உபயோகிக்கப் படுகிறது. தீபாவளி இரவு முழுவதும் ஒவ்வொரு வீட்டிலும் பெரிய அகல் ஒன்றை எரிய விட்டு இது சேகரிக்கப்படுவதைக் காணலாம். இதை மறு வருஷ தீபாவளி வரையிலும் ஜாக்கிரதையாக வைத்திருப்பார்கள்.

* * *

உத்தரப் பிரதேசத்திலுள்ள கிராமங்களில் தீபாவளிக்கு மறு நாள் 'கோவர்த்தன்' என்ற பெயருடன் ஒரு பூஜையும் உண்டு. வீட்டு வாசற் படியின் வெளிப்புறத்தில் ஒரு சிறு திண்ணை எழுப்பி அதன் மீது மண்ணினால் ஒரு பொம்மை வீடு கட்டுவார்கள். அந்த வீட்டிற்குள் மண்ணினால் செய்த கணபதியும் கௌரியும் வைக்கப்படும். அதன் முன் மாவிலை கட்டிய அரிசி குத்தும் உலக்கையும், புதிய கரும்புக் கழியும் வைத்திருக்கும்.

"கரும்புக் கழிபோல் இந்த வீடு உயர வேண்டும்; கங்கையும் யமுனையும் போல் செல்வம் பொங்க வேண்டும்" என்று பாடிக்கொண்டு, வீட்டிலுள்ள சுமங்கலி ஸ்திரீகள் உலக்கையை மூன்று தரம் சுற்றுவார்கள். உலக்கையைச் சுற்றுவதினால் தரித்திரம் அகன்று விடும் என்பது அவர்களின் நம்பிக்கை. தீபாவளிக்குப் பிறகுதான் சாதாரணமாய் அப்பிரதேசங்களில் கரும்பு அறு

# படித்துப் பாருங்கள்!

## உள்ளம் கவர் கள்வன்

எங்கும் நிறைந்த ஈசனைப் பற்றி நால்வர் பாடியுள்ள பாடல்கள் தமிழ் மக்களுக்கோர் அருஞ் செல்வமாகும்! பக்தர்களுக்கோர் வற்றாத பக்திச் சுனையாகும்! இளம் பிள்ளைப் பிராயத்திலேயே ஞான அமுதுண்டு ஆண்டவன் மீது மெய் சிலிர்த்து ஞான சம்பந்தர் பாடியுள்ள பதிகங்களில் இயற்கை வர்ணனைகளைக் காணலாம். நுட்பமான கருத்துக்களைக் காணலாம்; பக்திச் சுவையைக் காணலாம். இவையாவும் எவ்வளவு உண்மை என்பதை ஞானசம்பந்தரின் எட்டுப் பாடல்களுக்கு 62 பக்கம் கொண்ட இந்நூலில் விளக்கம் கூறப்பட்டிருக்கிறது என்பதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

ஆசிரியர்: கி. வா. ஜகந்நாதன்: பிரசுரம்: அமுத நிலையம் தேனாம் பேட்டை, சென்னை–18. விலை: ரூ 1.

## தே. வி. யின் கீர்த்தனங்கள்

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் சமீப காலத்தில் பாடி வந்த கீர்த்தனங்களின் தொகுப்பே இது. சங்கீத உலகில் இவர்களுடைய கீர்த்தனங்களுக்கு நல்ல வரவேற்பு ஏற்பட்டது. இசைத் தட்டுகளில் பல கீர்த்தனங்கள் பதிக்கப் பட்டன. இசையரங்குகளில் பல கீர்த்தனங்கள் பாடப்படுகின்றன. சொல் அழகும் கருத்தழகும் பக்தியும் கொண்ட இக் கீர்த்தனங்களை ஒரு முறை கேட்டவர்கள் பல முறை கேட்க விரும்புவார்கள், ஒரு முறை படித்தவர்கள் பல முறை படிக்க விரும்புவார்கள்.

பிரசுரம்: பாரி நிலையம், 57, பிராட்வே, சென்னை, விலை: ரூ. 1—12—0

## காவிரிக் காவலர்

சங்க கால நூல்களில் மிகவும் போற்றப் படுவது புறநானூறு. இந்நூல் பழந் தமிழ் மன்னர்களைப் பற்றிப் பல அரிய செய்திகளையும், பழந்தமிழ் மக்களின் வாழ்க்கை முறைகளைப் பற்றியும் அறிந்து கொள்ளப் பெருந் துணையாக இருக்கிறது. இதை ஆதாரமாகக் கொண்டு பழைய சோழ மன்னர்களைப் பற்றிய பல ரஸமான தகவல்களைத் தொகுத்து எளிய தமிழில் ரஸமான நூலாகச் செய்திருக்கிறார். தமிழில் சங்க கால இலக்கியங்களுடன் அதிகப் பயிற்சி இல்லாதவர்களும் சோழ மன்னர்களின் பெருந் தன்மைகளை எளிதில் உணர்ந்து கொள்ளலாம், இந்நூலின் வாயிலாக.

ஆசிரியர்: வித்வான் கா. இராமய்யா, பிரசுரம்: முருகன் வெளியீட்டகம், 197, கீழ வெளி வீதி, மதுரை, விலை: ரூ 1–8–0.

---

வடை செய்யப்படும். இந்திரனுக்குச் சேர வேண்டிய பண்டிகையைத் தான் ஏற்றுக் கிருஷ்ணன் கோவர்த்தனகிரியைத் தாங்கியது இன்றுதான் என அவர்கள் கருதுகின்றனர்.

பம்பாய், பூனா பிராந்தியங்களில் வசிக்கும் மகாராஷ்டிரர்கள் தீபாவளி தினத்தன்று தான் பலிச் சக்கரவர்த்தி முக்தி அடைந்ததாகக் கருதுகின்றனர். தீபாவளிக்கு ஒரு வாரம் முதல் வீட்டின் எல்லா அறைகளையும் நன்கு சுத்தம் செய்து, மாவினால் இழைக் கோலம் இட்டு அலங்கரிப்பது உண்டு. பொட்டுக் கோலம் இடுவதிலும், வர்ணமிட்ட மண்களினால் தரையில் வித விதமான சித்திரங்கள் வரைவதிலும் மகாராஷ்டிரப் பெண்டிர் கைதேர்ந்தவர்கள்.

ஒரு தட்டில் மாவினால் பலிச் சக்கரவர்த்தியின் உருவம் செய்து, அறையின் மத்தியில் வைப்பார்கள். "கஷ்டம் எல்லாம் தொலைய வேண்டும்; பலிச் சக்கரவர்த்தியின் நாடு செழித்து ஓங்க வேண்டும்" என்று மராத்திப் பெண்கள் பாடுவது வழக்கம்.

டில்லி, வங்காளம், பீஹார் உத்தரப் பிரதேசம் முதலிய இடங்களில் தீபாவளிக்கு அடுத்த இரண்டாவது நாள் ஒரு விசேஷக் கொண்டாட்டம் உண்டு. சகோதரிகள் தம் சகோதரர்களுக்கு, மரியாதை செலுத்துவதற்கென ஏற்பட்ட பண்டிகை இது. ஒவ்வொரு சகோதரியும் தம் சகோதரர்களைத் தம் வீட்டுக்கு அன்று வரும்படி அன்புடன் அழைத்து விருந்து அளிப்பார்கள்.

யமனுடைய சகோதரி யமுனா இன்று தன் சகோதரனை அழைத்து விருந்து செய்வித்ததாயும், உண்ட பிறகு மிகவும் மகிழ்ச்சி கொண்ட யமன், இவ்விதம் சகோதரிகளின் விருப்பத்துக்கு இணங்கி விருந்து உண்ணும் ஒவ்வொருவனும் நீடூழி வாழ்வான் என ஆசீர்வதித்ததாயும் கூறப்படுகிறது.

யமுனை நதிதான் யமனின் சகோதரி எனக் கருதப் படுவதால், அந்நதியில் அன்று ஸ்நானம் செய்வது மிகவும் விசேஷம். பிரயாகையிலும் யமுனை நதியின் இருபுறமுள்ள நகரங்களிலும் இன்று பெரிய மேளா நடைபெறும்.

ஸ்நானம் முடிந்ததும், சகோதரன் மனையில் அமர, சகோதரி தன் வலது கையில் சந்தனக் கிண்ணம் ஏந்தி, இடது கைச் சுண்டு விரலால் அண்ணன் நெற்றியில் திலகம் இடுவாள். இச்சமயம் அவள் பாடும் பாட்டுக்கு, "என் உடன் பிறந்தான் நெற்றியில் திலகம் இட்டு, யமனின் வழியில் முள் இட்டேன். (அதாவது யமன் வராதபடி செய்தேன்.) யமுனையைப் போல் என் சகோதரனை யானும் பணிந்திடுவேன்; யமனைப் போல் என் சகோதரனும் அமர வாழ்வு பெறுவான்" என்பதுதான் பொருள்.

இதன் பிறகு பெரிய விருந்து நடக்கும். சாதாரணமாக எல்லா வீடுகளிலும் அன்றையச் சமையலைச் சகோதரி தானே தன் கையினால் செய்வாள். ஒருவனுக்கு அநேக சகோதரிகள் இருந்தால், ஒவ்வொருவர் வீட்டுக்கும் சென்று ஒரே நாளில் ஒன்றன் பின் ஒன்றாய் விருந்து சாப்பிடுவது மிகவும் வேடிக்கையாய் இருக்கும். உடன் பிறந்தவர்களுக்குள் சிறு வயதில் ஏற்பட்ட அன்பு, விவாகத்துக்குப் பிறகு சிறிதும் குன்றக் கூடாது என்ற உயர்ந்த எண்ணத்துடன் ஏற்பட்ட பண்டிகைதான் போலும் இது!

கல்கத்தா பஸ் முதலாளி ஹெவி டியூடி மோட்டார் எண்ணெயைப் பாராட்டுகிறார்

# பழுதுபார்க்கவேண்டிய அவசியம் குறைகிறது — ஓட்டச்செலவுகளும் அதிகமில்லை

## முச்செயல்-திறனுள்ள மோபிலாயில்

## உபயோகிப்பதன் மூலம்

நாங்கள் 10 பஸ்கள் ஓட்டிவருகிறோம். தொழிலில் 32 வருஷ அனுபவம் உண்டு. தினம் சராசரி 60 மைல் விதம் ஓடும் எமது பஸ்களுக்கு ஒரு ஹெவி டியூடி எண்ணெய் அத்யாவசியம் என்று கருதுகிறோம். நாங்கள் முச்செயல் திறனுள்ள மோபிலாயில் உபயோகிக்கத் தொடங்கியதிலிருந்து பஸ்களை ஓட்டுவதற்கான செலவினங்கள் நிச்சயமாக கம்மி தான். தவிர, முன்பு போல் அடிக்கடி பழுதுபார்க்க வேண்டிய அவசியமும் ஏற்படுவதில்லை.

Jaswant Singh



ஸ்ரீ. ஜஸ்வந்த் சிங், பஸ் முதலாளி, கல்கத்தா




முச்செயல் திறனுள்ள மோபிலாயில் உபயோகித்துச் செலவுகளை மிச்சப்படுத்துகிற புத்திசாலிகளுள் இந்த பஸ் முதலாளியும் ஒருவர். மோபிலாயில் மோட்டாரின் செலவினங்களைக் குறைக்கிறதென்று ஸ்ரீ. ஜஸ்வந்த் சிங் தம் அனுபவத்திலிருந்து அறிகிறார் — நீங்களும் அப்படியே அனுபவப்படுவீர்கள்! அனுபவஸ்தர்களின் வழிகளைப் பின்பற்றி முச்செயல் திறனுள்ள மோபிலாயிலையே உபயோகியுங்கள்.

மோபிலாயில் ஒரு ஹெவி டியூடி மோட்டார் எண்ணெ, ரெகுலர் அல்லது பிரீமியம் வகை எண்ணெய்களை விட அதிகமான பாதுகாப்பு அளிக்கிறது. பறக்கும் செங்குதிரையின் சின்னம் காணப்படும் இடத்திற்குச் சென்று இவற்றே உங்கள் வண்டியில் மோபிலாயில் நிரப்பிக்கொள்ளுங்கள். இந்த எண்ணெ 3 வழிகளில் உங்கள் பணத்தை மிச்சப்படுத்தும்:—

**தேய்மானத்தைக் குறைக்கிறது**—எல்லா சீதோஷ்ண நிலைமைகளிலும் ஒழுங்காக லூப்ரிகேட் செய்கிறது

**ரிப்பேர் செலவுகளைக் குறைக்கிறது**—என்ஜினில் ஹானிகரமான கரி படியவிடுவதில்லை.

**பெட்ரோல் செலவைக் குறைக்கிறது**—உலோக பாகங்களை ஆஸிட்டுகள் அரித்துவிடாமல் தடுத்து, சக்தி வீண் போகாமல் பாதுகாக்கிறது.

## முச்செயல்-திறனுள்ள மோபிலாயில்

அதிகமான மோட்டார்க்காரர்கள் உலகில் வேறெந்த மோட்டார் ஆயிலையுமின்றி இதையே விசேஷமாக உபயோகித்து வருகின்றனர்

**ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி** (கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 7847




வழக்கம்போல் அன்றும் ரயிலில் கூட்டம் தாங்க முடியவில்லை. எப்படியோ சமாளித்துக்கொண்டு நாராயணஸ்வாமி ஐயரும் ரயிலில் ஏறி ஒருஇடம் பிடித்துக் கொண்டார். ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் ஏராளமான ஜனங்கள் ஏறிக் கொண்டும் இறங்கிக் கொண்டும் இருந்தார்கள்.

பழைய பத்திரிகை ஒன்றைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவர், அதில் போட்டிருந்த கல்யாண போட்டோவைப் பார்த்ததும், அதன் கீழே எழுதி யிருந்ததை உரக்கப் படிக்கலானார்:

"ஸ்ரீ சுதர்சன் கம்பெனி சொந்தக்காரர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரத்துக்கும் மாலங்குடி மிராசுதார் நாராயணஸ்வாமி ஐயர் பெண் செள. நீலாயதாட்சிக்கும் மணமகன் இல்லத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க தம்பதிகள்."

எதிர் வரிசையில் உட்கார்ந்திருந்த கிழவர் ஒருவர் திடீரென்று, "யாரு? சுதர்சனம் கம்பெனியா? மீனாட்சி சுந்தரமா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

பத்திரிகை படித்துக் கொண்டிருந்தவர், "ஆம் ஏன்? உங்களுக்கு அவர்களைத் தெரியுமோ?" என்று கேட்டார்.

"நன்றாகத் தெரியும்! அந்தப் பையனின் அப்பாவைத்தான் நன்றாகத் தெரியும். உம், போகட்டும். எப்படியோ சுந்தரத்துக்குக் கல்யாணமாகி விட்டது. நன்றாக இருக்கட்டும்!" என்று மனத்துள் சொல்லிக் கொள்பவர் போல் மெதுவாகச் சொன்னார்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? என்ன சமாசாரம்? ஏதாவது ரகசியமோ?"

"ஒரு வகையான ரகசியம் தான்! ஆனால் நமக்கு ஏன் அந்தப் பாடு? வேறு யாருக்கும் அந்த விஷயம் தெரியாதுபோல் தோன்றுகிறது. விடுங்கள்" என்றார் கிழவர்.

ரகசியம் என்று எதையாவது சொல் விட்டால் அதைத் தெரிந்து கொள்ள அதிக படியான ஆர்வமும் பிடிவாதமும் உ டாவது மனித இயல்பு. கல்யாணச் செய்தி வாசித்தவர் பல முறை கேட்டுக் கொண் பிறகு அவ்வயோதிகர் மெதுவாகச் சொல் ஆரம்பித்தார்.

"சுமார் இருபத்தைந்து வருடங்களுக் முன்னால் சுதர்சனமும் அவருடைய மனை யும் ராமேசுவரத்துக்குப் போனார்கள். வெ காலம் குழந்தைப் பேறு இல்லாமலிருந் தால் ராமேசுவரம் சென்று ஸேது ஸ்நான செய்து நாகப்பிரதிஷ்டை முதலிய சடங் களும் செய்ய எண்ணிச் சென்றார்கள். திரும் வரும் வழியில் அவர்கள் சில நாட்க மதுரையில் தங்கும்படி நேர்ந்தது. அ பொழுது ஆடிப் பூர உற்சவமாதலால் ஏக கூட்டமாக இருந்தது.

ஒரு நாள் விளக்கு வைக்கும் நேரத்தி கோயில் பிராகாரத்தில் சுமார் இரண்டு வ துக்குழந்தை ஒன்று அழுதுகொண்டு அங்கு இங்கும் அலைந்து கொண்டிருந்ததாம். சுத சனத்தையும் அவர் மனைவியையும் கண்டது ஓடிவந்து அவர்களைக் கட்டிக் கொண்டதா குழந்தையை எடுத்துக் கொண்டு யாருை யது என்று எவ்வளவோ விசாரித்தும் ஒ தகவலும் கிடைக்கவில்லையாம்.

அந்தக் காலத்தில் போலீஸில் எழுதி வை பது அவ்வளவாக வழக்கமில்லை. ஆகையா ஏதோ மீனாட்சி அம்மனின் கிருபையா தங்களுக்குக் கிடைத்தது என்று எண்ணி சுதர்சனம் தம்பதிகள் குழந்தையைத் தங் ளுடன் எடுத்து வந்து விட்டார்கள்.

குழந்தைக்கு நன்றாகப் பேச வாராததா அதன் வாய் மொழியாக ஒன்றுமே அறி முடியவில்லை. ஆகையால் மீனாட்சி சுந்தர என்று பெயரிட்டுத் தாங்கள் பெற்றெடுத் மகனைக்காட்டிலும் அருமையாகவும் அன்பா வும் வளர்த்து வந்தார்கள்.

சுதர்சனம் என்னுடைய தூர பந்து. அ சமயம் நான் அவருடன் கூடவே இருந்தே ஏதோ பெயரைக் கேட்டதும் பழைய நின




வந்தது. சுதர்சனமும் அவர் மனைவி லக்ஷ்மியும் நல்ல மாதிரி. பணம் பவிஷு எல்லாமிருந்தும் தெய்வ பக்தியும் ஒழுக்கமும் உள்ளவர்கள்'' என்று கூறி முடித்தார்.

• •
•

கதையின் ஆரம்பத்தில் அசட்டையாக இருந்த நாராயணஸ்வாமி ஐயர் சுதர்சனமும் அவருடைய மனைவியும் மதுரையில் குழந்தையைக் கண்டு எடுத்தார்கள் என்று சொன்னதும் சிரத்தையுடன் கேட்கலானார். கிழவர் கூறி முடித்ததும் அப்படியே பிரமை பிடித்தவர்போல் நாராயணஸ்வாமி ஐயர் பின்னால் சாய்ந்து விட்டார்.

சிறிது பிரமை தெளிந்ததும் ஒன்றும் தோன்றாமல் மனதிற்குள் தவித்தார். அப்பெரியவரிடம் இன்னும் விவரமாகக் கேட்கலாமா என்று எண்ணினார். ஆனால் கடைசியில் ஏதாவது தம்மைப்பற்றிச் சந்தேகப்படுவாரகளோ என்று பேசாமல் இருந்து விட்டார்.

ஊர் வந்து சேர்ந்த நாராயணஸ்வாமி ஐயரின் மனம் ஒரே குழப்பத்திலிருந்தது. "ஊர், பெயர், குலம், கோத்திரம் ஒன்றும் தெரியாத ஒரு பிள்ளைக்குக் கொண்டுபோய் முன்பின் யோசனை செய்யாமல் பெண்ணைக் கொடுத்து விட்டோமோ?'' என்று அவர் மனத்தில் பெரிய ஏமாற்றமும் துக்கமும் குடிகொண்டன.

தகப்பனாரின் மன நிலையை அறியாத நீலாய தாட்சி வரப்போகும் தீபாவளியைக் குதூகலமாக எதிர்நோக்கிக் கொண்டிருந்தாள். இன்னும் பதினைந்து நாட்களில் தனது கணவரை மீண்டும் சந்திக்கும்போது தன்னுடைய வித விதமான அலங்காரங்களுடன் அவரைச் சந்தோஷப்படுத்த வேண்டும் என்றெல்லாம் திட்டமிட்டுக் கொண்டிருந்தாள்.

•
• •

நீலாவும் அவள் தகப்பனாரும் ஒரு சமயம் சென்னைக்கு ஒரு உறவினர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போயிருந்தார்கள். கல்யாணத்துக்கு வந்திருந்த சுந்தரம் நீலாவைப் பார்த்ததும் அவளையே மணம் செய்து கொள்ள வேண்டும் என்று எண்ணினான். பிறகு அவர்கள் இருவரும் அங்கே இருந்த ஒரு மாதமும் அநேகம் தடவைகள் சந்திக்க நேர்ந்தது. இருவருக்கும் ஒருவரை ஒருவர் மிகவும் பிடித்து விட்டது. நீலாவின் அறிவும் குணமும் சுந்தரத்தின் உள்ளத்தை மிகவும் கவர்ந்து விட்டன.

சுந்தரத்தின் செல்வம், செல்வாக்கு, அடக்கம், கௌரவம் முதலியவற்றைக் கண்ட நீலாவின் தகப்பனாரும் யாதொரு ஆட்சேபணையுமின்றி அதற்குச் சம்மதித்து அவர்கள் திருமணத்தை விமரிசையாக நடத்தி விட்டார். அதற்குச் சிறிது காலம் முன்பு சுந்தரத்தின் தாயும் காலமாகி விட்டிருந்ததால் உறவினர் என்று கூறிக் கொள்ளச் சுந்தரத்துக்கு யாருமே இருக்கவில்லை.

நாராயணஸ்வாமி ஐயருக்கு இருப்புக் கொள்ளவில்லை. மதுரைக்கு நேரில் சென்று ஆராய்ந்து, ரயிலில் தெரிந்து கொண்ட விஷயம் உண்மைதானென்று நிச்சயமாகத் தெரிந்து கொண்டு வந்தார்.

உடனே தம் மருமகனுக்குத் தமது குடும்ப கௌரவமே போய் விட்டது என்றும் இந்த விஷயத்தை மறைத்து ஒரு பெண்ணை ஏமாற்றியிருக்கக் கூடாதென்றும், இனி தன் மகள் ஊர், பெயர், குலம் ஒன்றுமே தெரியாத ஒருவருடன் வாழ்க்கை நடத்துவது இயலாது என்றும் முடிவாக எழுதி விட்டார்.

இது ஒன்றையும் அறியாத நீலா கனவு உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தாள். சீக்கிரமாகத் தன் கணவருடன் சென்று பங்களாவில் குடித்தனம் செய்யப் போவதையும், அவருடைய அன்பிலும் இன்பத்திலும் திளைத்து ஆனந்திக்கப் போவதையும் எண்ணிக் குதூகலப்பட்டுக் கொண்டிருந்தாள்.

ஜன்னல் அருகே நின்று கொண்டிருந்தவள் 'தபால்!' என்ற சத்தத்தைக் கேட்டதும் ஓடிச் சென்று இரு கடிதங்களை வாங்கி வந்தாள்.





குரோம்பேட்டை, ராதா நகர் இளைஞர் மன்றத்துக்கு அக்டோபர் மாதம் 14-ந் தேதி நம் முதல் மந்திரி ராஜாஜி அவர்கள் விஜயம் செய்து அம் மன்றத்துக்கு ஆசி கூறினார். ராஜாஜி அவர்களையும் இளைஞர் மன்றக் குழுவினரையும் படத்தில் காணலாம்.

தன் அருமைக் கணவர் தனக்கும் தன் தந்தைக்கும் எழுதி யிருக்கிறார் என்பதைக் கை எழுத்திலிருந்தே தெரிந்து கொண்டாள். ஆவலுடன் தன் கடிதத்தைப் பிரித்துப் படிக்கலானாள் :

''என் அருமை நீலா.

சில காரணங்களினால் நான் தீபாவளிக்கு வர முடியவில்லை. ஆயினும் என் உள்ளம் உன்னிடம்தானிருக்கும்.

சுந்தரம்.''

கடிதம் வெகு சுருக்கமாக இருந்தது.

சென்ற சில மாதங்களாகக் காவியமும் கவிதையும் சொரிந்து ஓடும் காதற் கடிதங்களை எழுதிய தன் ஆசைக் கணவரா இப்படி எழுதி யிருக்கிறார் என்பதை அவளால் நம்ப முடியவில்லை. தந்தைக்கு வந்திருக்கும் கடிதத்தை எடுத்துக் கொண்டு மேலே ஓடினாள். ஒரு சாய்மான நாற்காலியில் உட்கார்ந்து கண்ணை மூடிக்கொண்டிருந்த தந்தையைக் கண்டதும் ''அப்பா! இதைப் பாருங்கள்!'' என்று இரு கடிதங்களையும் அவரிடம் கொடுத்தாள்.

திடுக்கிட்ட அவள் தந்தை ஒன்றும் புரியாமல் கடிதங்களை வாங்கிக் கொண்டார். முதலில் நீலாவின் பிரித்த கடிதத்தைப் படித்தார். அவருக்கு உடனே விஷயம் புரிந்து விட்டது. பிறகு சற்று பரபரப்புடன் தமக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினார்.

''அன்புள்ள மாமா,

நான் தெரிந்து ஒரு தவறும் செய்யவில்லை. நீங்கள் எழுதிய பிறகுதான் எனக்கே நான் அவர்கள் சொந்த மகன் அல்ல என்ற உண்மை தெரிய வந்தது. உடனே ஏதாவது பழைய சமாசாரம் தெரியுமோ என்று என் தகப்பனாரின் பழைய பெட்டிகளைப் பரிசோதித்ததில், ஏதோ சந்தேகப்படும்படியான இரண்டொரு சமாசாரம் பழைய கடிதங்களிலிருந்து கிடைத்தது. உண்மையில் என் தாயும் இதுவரையில் அவ் விஷயத்தை என்னிடம் சொன்னதில்லை. எனவே நான் மனம் அறிந்து தவறு எதுவும் செய்யவில்லை. தங்களுக்கும் தங்கள் குடும்பத்துக்கும் அபகீர்த்தி என்று நீங்கள் எண்ணலாம். இதோடு என் உரிமையை மறந்து விடுகிறேன். ஆனால் நீலாவை மறப்பது எளிதல்ல. தெரியாமல் செய்த தவறை நீங்கள் அவசியம் மன்னிக்க வேண்டும்.

சுந்தரம்.''

கடிதத்தைத் தந்தையுடன் கூடவே படித்துவிட்ட நீலா 'தடால்' என்று கீழே விழுந்து விட்டாள். அதற்குப் பின் ஒரு வாரம் அவளுக்கு நினைவே வரவில்லை.

நினைவு வந்து கண்ணைத் திறந்து பார்த்ததும் எல்லாம் கனவோ என்ற பிரமை அவளுக்கு ஏற்பட்டது.

நாராயணஸ்வாமி ஐயர் அவளருகே வந்து, ''அம்மா! உடம்பு என்ன செய்கிறது?'' என்று வாத்ஸல்யத்துடன் கேட்டார்.

''அப்பா! இப்பொழுதே ஒரு கடிதம் எழுதி அவரை வரச் சொல்லுங்கள். நான் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும். குலமும் கோத்திரமும் எனக்கு வேண்டாம். உண்மை அன்புக்கு எதுவும் குறுக்கே நிற்க முடியாது!'' — கண்ணீரும் கம்பலையுமாக உணர்ச்சியுடன் கூறிய நீலா மறுபடியும் களைப்பினால் கண்களை மூடிக் கொண்டாள்.

* * *

தீபாவளிக்கு முன்னால் மீனாட்சி சுந்தரம் வந்து சேர்ந்தான். நீலாவுக்கும் உடம்பு நன்ருகக் குணமாகி விட்டது.

அவள் தந்தை, ''அம்மா! உன்னுடைய உபதேசம் என் கண்களையும் மனத்தையும் பரிசுத்தமாக்கி விட்டது. நான் ஆலோசித்துப் பார்த்தேன். குலத்திலும் கோத்திரத்திலும் ஒன்றுமில்லை. ஒழுக்கம், உயர்ந்த குணம் முதலியவைதான் முக்கியம்'' என்று நமது காந்தி அடிகள் சொல்லியிருக்கிறார் அல்லவா? நாளைய தீபாவளிதான் நம்முடைய வீட்டில் புனிதமான தீபாவளி'' என்றார்.

இவ்விதம் கூறியபோது அவர் கண்களில் ஆனந்தக் கண்ணீர் ததும்பி நின்றது.



சிறந்த பாட்டரிக்கு

# குறைந்த விலை...

இந்த

**5** காரணங்களுக்காக

# ஸ்டாண்டர்ட்

பாட்டரிகளையே நீங்கள்

விரும்புவீர்கள்



**1** **குறைந்த விலை** "ஸ்டாண்டர்ட்" இந்தியாவின் மிக பெரிதான பாக்டரியில் தயாரிக்கப்படுகிறது. அவர்கள் தயாரிப்பின் திறமை "ஸ்டாண்டர்ட்" உங்களுக்கு மற்ற எந்த கல்ல பாட்டரிகளையும்விட குறைவான விலைக்கு கிடைக்கும்படி செய்கிறது.



**2** **நீடித்த உழைப்பு** கூர்ந்த கவனிப்புடன் சிறந்தமுறையில் தயாரிக்கப்படுவதாலும், சுத்தமான ரப்பரில் செய்த பலம் பொருந்திய கேஸில் அடைத்திருப்பதாலும் "ஸ்டாண்டர்ட்" உங்களுக்கு அதிக காலம் உழைக்கிறது.



**3** **பூர்ண கேரண்டி** சந்தேகத்திற்கோ வாக்குறுதிக்கோ வகையில்லை. ஒவ்வொரு "ஸ்டாண்டர்ட்" பாட்டரியுடனும் உங்களுக்கு ஆதாரமாக பூர்ண கேரண்டி சர்ட்டிபிகேட் கிடைக்கிறது. சர்வீசும் இலவசமாக கிடைக்கிறது.



**4** **சிறந்த தயாரிப்பு** "ஸ்டாண்டர்ட்" ஒரே பாக்டரியில் மிக ஏராளமான பாகங்களை செய்கிறார்கள். ஆதலால் ஒவ்வொரு பாகங்களுக்கும் அதன் தயாரிப்பில், மிக சிறந்த விதத்தில், பூர்ணமான கவனம் அளிக்கப்படுகிறது.



**5** **ஏராளமான புதுக்கார்களில் உபயோகிக்கப்படுகிறது.** இன்னும் ஏராளமான. புதுக்கார்களிலும் "ட்ரக்"களிலும் மற்ற எந்த பாட்டரிகளையும் விட, "ஸ்டாண்டர்ட்" பாட்டரிகளையே உபயோகிக்கிறார்கள். இந்தியாவில், கார் தயாரிப்பில் முன்னிலையிலிருப்பவர்களை பின்பற்றுங்கள். "ஸ்டாண்டர்ட்" பாட்டரிகளையே விரும்பி வாங்குங்கள்.



**ஸ்டாண்டர்ட் பாட்டரீஸ் லிமிடெட், பம்பாய்**

விநியோகஸ்தர்கள் :

அடிஸன் அண்டு கோ. லிமிடெட், 158, மவுண்ட் ரோட், மதராஸ் 2.

கிளைகள்: பெங்களூர், வெல்லிங்டன் (நீலகிரி) கோயமுத்தூர்.

STB. 6849

"என் தொண்டை ரணத்தினால்
என்னால் விழுங்கவே முடியவில்லை"
ஆனால்

# பெப்ஸ்

அதை சமனமாக்கி குணப்படுத்தியது.






பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு வலி நிவாரண மாத்திரைகளில் சமனூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும் போதே இந்த ரசங்கள் ஆவியாக மாறி உங்கள் ஸ்வாஸத்துடன் தொண்டை, சுவாசக் குழாய் மூலமாக சுவாசப் பைக்குச் சென்றும், ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே நேராகச் சென்று வேலை செய்கின்றன. இதனால் தான் பெப்ஸை [illegible], உலக பிரசித்திப் பெற்றும் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன், இன்ப்ளூயன்ஸா மற்றும் ப்ராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

**PEPS**

பெப்ஸ் தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள்
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்

## கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ் : 9, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1

போன்: 55556 | தபால் பெட்டி நெ. 1395 | தந்தி: KALLIFUNDS

### எங்கள் நவம்பர் மாத சீட்டு வரிசை

பிற்காலத்திற்குச் சிரமமின்றிச் சேமியுங்கள்

30 மாதங்கள் — 30 சந்தாதாரர்கள்

3-வது ஓபன் ஏலங்கள்

சந்தா செலுத்த கடைசி தேதி 14-11-63
முதல் ஏலத் தேதி 15-11-63
உடனே விண்ணப்பியுங்கள்

1. நீங்கள் எங்கிருந்தும் சந்தாதாரர் ஆகலாம்.
2. தபால் அல்லது வேறு யார் மூலமோ ஏலம் கேட்கலாம்.
3. சேமிப்பாகக் கருதுகிறவர்களுக்கு குறைந்தபட்ச வட்டி உத்திரவாதம் செய்யப்படுகிறது.

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| C | 100 | 3000 |
| D | 50 | 1500 |
| E | 25 | 750 |
| F | 20 | 600 |
| G | 15 | 450 |
| H | 10 | 300 |

எமது விதிகளும் நிபந்தனைகளும் கோரிக்கையின் பேரில் தெளிவான விலாசங்களுக்கு அனுப்பப்படும்.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்.




"ஒன்னே ஒன்னு, கண்ணே கண்ணு" என்று பயில்வான் வரதனுக்கு ஒரே ஒரு மகள் தான். அவர் மகள் சுந்தரி அழகிலும் சுந்தரி தான். பூத்துக் குலுங்கும் இளமைப் பொலிவுடன், பருவ கால அங்க அமைப்புடன், அவள் கல்யாண வயசை எட்டியிருந்தாள். விரைந்து சென்ற வருஷங்கள், அதற்குள்ளாகவே அவளிடத்து இத்தகைய விசித்திர மாறுதல்களை உண்டு பண்ணி விட்டுப் போயிருந்தன.

இப்பொழுதுதான் சுந்தரியின் பெற்றோர்களான பயில்வான் வரதனையும், பத்மாவையும் கவலை கவ்விக் கொண்டது. "ஒரே மகள் சுந்தரிக்குச் சிறப்பாகக் கல்யாணம் நடக்க வேணும். அவள் முகம் கோணாமல் நல்வாழ்வு வாழவேணும்" என்ற கவலைதான் அவர்களுக்கு.

சுந்தரியின் கல்யாணத்துக்குக் குறைந்த பட்சம் மூவாயிரம் ரூபாயாவது வேண்டும். ஆனால் வரதனின் குடும்பமோ வறுமைப் பிணியினால் கட்டுண்டு கிடந்தது. தங்கள் எண்ணம் நிறைவேறும் வழி வகைகள் தெரியாது அவர்கள் தவித்தார்கள்.

அவர்கள் குடும்பம் செழுமையுடன், செல்வாக்குடன் இருந்தது ஒரு காலம்.

அப்பொழுது வரதன் நிறையப் பணம் வைத்திருந்தார். ஆறாயிரத்துக்கு மேல் அவரிடம் ரொக்கமாகவே இருந்தது. ஆனால் இருந்த பணத்தை இழந்து, ஓட்டாண்டியாகி விட்டார். அவர் உடல் நிலை இத்தகைய ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தி விட்டிருந்தது.

* * *

வரதன் பள்ளிச் சிறுவனாக இருக்கும் பொழுதே, மல்யுத்தம், குத்துச் சண்டை முதலியவைகளில் அபார மோகம்கொண்டு, அவைகளில் அக்கறை காட்டினர். அவைகளிலேயே தம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்தினர். இரவு, பகல் எந்நேரமும் அவருக்கு இதே நினைவுதான்.

தம்முடைய பதினெட்டாவது வயதிலேயே, வரதன் ஒரு சிறந்த, கைதேர்ந்த மல்யுத்த வீரராகி விட்டார். அதற்கேற்ப அவர் உடல் உறுதியுடனும், கவர்ச்சி நிறைந்த பருமனுடனும் ஒத்துழைத்து உதவி செய்தது. உருண்டு திரண்ட புஜங்களும், விரிந்து அகன்ற மார்பும், திண்மை பெற்ற தோள்களும், வலிமை கொண்ட கால்களும், களை நிறைந்த முகப் பொலிவும் சேர்ந்து, அவரை வீர சிங்கமெனவே பறைசாற்றின.

காளைப் பருவத்திலேயே வரதன் மல்யுத்தப் போட்டிகளில் சேர்ந்து, வெற்றி பெற்று, வாகை சூடி, அவரை மிஞ்சுபவர்கள் யாரும் இல்லை என்று சொல்லும்படி ஒரு மல்யுத்த வீரராக ஆனார். "வரதன் மல் யுத்தத்துக்கென்றே பிறந்த மேதை" என்று அவர் புகழ் காற்றோடு கலந்து, புவி எங்கும் பரவியது. அதிவிரைவிலேயே அவர் பயில்வான் வரதன் ஆகிவிட்டார்.

பயில்வான் வரதன், பத்மாவை மனைவியாகக் கைப் பிடித்த போது, அவர் புகழ் உச்ச நிலையை எட்டிப் பிடித்திருந்தது. இந்தத் தாம்பத்திய வாழ்வு தந்த புத்திரச் செல்வம் தான் ஒரே மகளான சுந்தரி.

வரதன் வயிற்றுப் பிழைப்புக்காக வேறு எந்த வேலையையும் மேற்கொள்ளவில்லை, மல்யுத்தம் தான் அவருக்குப் பிரதானமாக இருந்தது. அது தான் அவருக்கு மூச்சுக் காற்று. அதையே அவர் ஒரு பிழைப்பாகக் கொண்டு விட்டார்.

எம். ஜி. சாமி

வரதனை நம்பித்தானோ, அல்லது வரதனின் ஊதியத்துக்கு வழி செய்யத்தானோ, அவருடைய பால்ய நண்பர் சந்தனு அதே ஊரில் மல்யுத்தக் கோதாவொன்று வைத்து விட்டார். பல இடங்களிலிருந்தும் மல்யுத்தக்காரர்களை வரவழைத்தார் சந்தனு. போட்டி வைத்தார்; மக்களும் மட்டிலாத ஆர்வம் காட்டினர்கள்; பார்வையாளரிடமிருந்து கட்டணம் வசூலித்தார்; நிறையப் பணம் குவிந்தது.

வரதனுக்கும் வருஷத்தில் இத்தகைய போட்டிகளில் இரண்டு மூன்று வாய்ப்புகள் கிடைத்தன. தடவைக்கு ஆயிரம் இரண்டாயிரம் என்று பணமும் கிடைத்தது. எந்தப் போட்டியிலும் வரதன் தான் எதிரிகளை வீழ்த்தி வெற்றி பெறுவார்.

வரதன், வெகுண்டு எழுந்த சிங்கமெனப் பாய்ந்து, குதித்து, நடந்து, உடலை வளைத்து, முறுக்கி, துவண்டு கொடுத்து, மற்றவர்களை மண் கவ்வச் செய்து விடுவார். கோதா மேடையில் அவருடைய ஆர்ப்பாட்டங்களைப் பார்ப்பதே ஒரு தனி அழகு. அவருடைய அங்க சேஷ்டைகளைக் காண்போர் மெய்ம் மறந்து போய்விடுவார்கள். அவருக்கு அவர்தான் இணை. அவர் மேடை ஏறிவிட்டாலே போதும்; கரகோஷம் வானைப் பிளக்கும். மக்களின் உற்சாகம் மிகுந்த ஆரவாரம் காதைச் செவிடாக்கி விடும்.

மற்ற மல் யுத்தக்காரர்களுக்குப் பயில்வான் வரதன் என்றால் சிம்ம சொப்பனம் தான். "நாங்கள் தோற்றாலும் பரவாயில்லை. உயிர் பத்திரமாயிருந்தால் போதும்" என்றுதான் எண்ணுவர்.

வரதனின் திறமையைக் கண்டு வெளியூர்களிலிருந்தும் கிராக்கிகள் வந்தன. அங்கெல்லாம் போய் அவர் பங்கெடுத்துக் கொள்வார். போட்டி நடத்துவோருக்கு நிறைய வருமானத்தைத் தந்து, தாமும் நிறையப் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தார் வரதன்.

பத்மா தன் கணவனின் புகழையும், பெயரையும், நல்ல வருமானத்தையும் கண்டு பெருமை

கொண்டாள். ஆமாம், அவளுக்குப் பெருமை பிடிபடாமலேதான் இருந்தது. தன் பெண் சுந்தரி பிறந்த வேளைதான் வீட்டில் செல்வமாகவே வந்து குவிகிறது என்றெண்ணி அவள் பூரிப் படைந்தாள்.

வரதனும் பத்மாவும் இன்பத்தில் திளைத்துத்தான் போயிருந்தார்கள். எதிர்கால வாழ்க்கையைப் பற்றி அவர்கள் கவலை கொள்ளவில்லை. வாழ்க்கையின் வசதிகளை எல்லாம் செய்துகொண்டார்கள். அத்தியாவசியப் பொருள்களை யெல்லாம் வாங்கிக் குவித்தார்கள். பத்மாவுக்கும், சுந்தரியின் கல்யாணத்துக்கும் வேண்டிய நகைகளையும் வாங்கினார்கள்.

அவர்கள் குடும்ப விளக்கான சுந்தரியைக் கண்ணும் கருத்துமாகப் போற்றி, பாராட்டி, சீராட்டி, அவளேதான் தங்களின் இன்ப உலகம் என்று வளர்த்தார்கள். சுந்தரியிடம் நாளுக்கு நாள் ஏற்பட்ட வளர்ச்சியை, அழகை, தோற்றத்தைக் கண்டு மகிழ்ந்து போனார்கள். மகளுக்குப் போதிய கல்வியறிவையும் ஊட்டினார்கள்.

* * *

**போ**திய பணம் சேர்த்துக் கொண்டு, சுந்தரியைப் பணக்காரப் பெண் என்று சொல்லும்படி ஒரு நிலை வந்தவுடன், வரதன் இந்த மல்யுத்த விளையாட்டுக்கு ஒரு தலை முழுகிவிட வேண்டுமென்ற நினைப்புத்தான் பத்மாவின் உள்ளத்தின் உள்ளே இருந்தது. இருந்தாலும் அவளுக்குப் பொறுமையில்லை.

"இதோ, பாருங்கள். இப்படியே நீங்கள் உடம்பை ஒடித்து, வளைத்து, முறுக்கி, உதை வாங்கி, உதை கொடுத்து, சாவா, வாழ்வா என்ற நிச்சயமில்லாமல் இருந்து விடக் கூடாது. ஒவ்வொரு தடவையும் நீங்கள் போய்த் திரும்பி வரும் வரையில், எப்படி நான் பயந்து சாகிறேன் என்பது உங்களுக்குத் தெரியாது. இன்னும் கொஞ்சம் சம்பாதித்துக் கொண்டு இந்த வருஷத்தோடோ, அல்லது அடுத்த வருஷத்தோடோ நிறுத்திக் கொண்டு விடுங்கள்" என்று பத்மா ஒரு நாள் உள்ளத்தைத் திறந்து, தன்னுடைய கவலையை வரதனுக்குச் சொல்லி விட்டாள்.

"பத்மா, அதைத்தான் நானும் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சுந்தரியின் கல்யாணத்துக்கு வேண்டிய பணம் சேர்த்து விட்டால் போதும். பேசாமல் வீட்டில் இருந்து விடுவேன். இன்னும் ஐந்தாறு வருஷங்கள் போனால் கல்யாணம் செய்யவேண்டி யிருக்கும். அது ஒரு வழியாக முடிந்து விட்டால் என் கவலை விட்டது" என்று வரதனும் மனைவியை ஆமோதித்தார்.

* * *

**அ**வர்கள் அவ்வாறு நினைக்க, விதி வேறு விதமாக நினைத்து விட்டது.

இருந்தாற்போலிருந்து வரதன் ஒருவித அசதியையும், களைப்பையும் தம்முள்ளே உணர்ந்தார். அவர் உடலில் உள்ள வலுவைப் போல், உள்ளத்தின் வலுவும் இல்லாதது போல் தோன்றியது. அவருக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. இருதயத்தின் மேல் ஏதோ ஒரு கனம் வந்து அழுத்தியது போல் தோன்றியது. அவருடைய பலவீனம் அவருக்கு நன்றாகத் தெரிந்தது.

இதையும் பொருட் படுத்தாது அவர் ஒன்றிரண்டு போட்டிகளில் கலந்து வெற்றி கண்டார். ஆனாலும், நாளுக்கு நாள் அதிகமாகப் பயமுறுத்திய உடல் நோயை அவரால் சிறிதும் அலட்சியம் செய்ய முடியவில்லை.

வரதன் தம் நண்பர் சந்தானுவைச் சந்தித்துத் தம்முடைய உடம்பில் இருக்கும் நிலையை விவரமாகச் சொல்லி ஆலோசனை கேட்டார். சந்தானு அவரை டாக்டரிடம் அழைத்துப் போனார்.

அந்த டாக்டர் வைத்தியத்தில் பெரிய நிபுணர். அவர் வரதனின் உடலைப் பரிசோதனை செய்து பார்த்தார். அவருக்கு உண்மை விளங்கிற்று.

"வரதன்! உங்கள் உடலுக்கிருக்கும் வலிமை உள்ளத்துக்கு இல்லை. அதாவது இருதயம் மிகவும் பலவீன மடைந் திருக்கிறது. இதைத் தான் இருதயக் கோளாறு என்று சொல்லுவார்கள். உங்கள் இருதயம் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ளும் சக்தியை நாளுக்கு நாள் இழந்து கொண்டு வந்திருக்கிறது. வலுவிழந்து காணப்படும் இருதயம் திடம் பெற்று ஒழுங்காக வேலை செய்து, நீங்கள் உயிர் வாழ வேண்டுமானால், இந்த மல்யுத்த விளையாட்டை அடியோடு மறந்துவிட வேண்டும். இல்லாவிட்டால் அது 'பட்'டென்று ஒரு நாள் வெடித்து விடும். நீங்கள் ஓய்வு பெற்று வீட்டில் நிம்மதியாக உட்காருவதுதான் இதற்கேற்ற சிகிச்சை. வேறு நல்ல சிகிச்சை எனக்குத் தெரியவில்லை" என்று சொல்லி விட்டார் டாக்டர் பட்டவர்த்தனமாக. வரதன் மிக்க ஏமாற்றத்தோடு வீடு திரும்பினார்.

எந்த மல் யுத்தத்தைத் துணையாகக் கொண்டு, வாழ்வின் வசதிகளைப் பெருக்கிக் கொண்டு, தாமும், தம் சந்ததிகளும் சுகமாக வாழவேண்டுமென்று வரதன் நினைத்தாரோ, அதே மல்யுத்தம் அவர் உயிருக்குக் கேடு விளைவிக்கத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தது. இதை அவர் எதிர்பார்க்கவில்லை.

"போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்று இருக்கும் பணத்தையும், உடைமைகளையும் கொண்டு திருப்தி யடைந்து, டாக்டரின் நல்ல புத்திமதிகளை இப்பொழுது ஏற்றுக் கொள்ள வேண்டியவராகி விட்டார் வரதன்.

"அதுதான் சரி. போதும் நீங்கள் சம்பாதித்தது. வீட்டோடு இருந்து விடுங்கள். எனக்கும் நிம்மதியாக இருக்கும்" என்று பத்மாவும் அவருக்குப் புத்தி சொன்னாள்.

வரதனிடம் அப்பொழுது ரொக்கமாக ஆறாயிரம் ரூபாய் சேர்ந்திருந்தது. வேறு வருமானமில்லாத இந்த நிலையில் வட்டியும் முதலுமாகச் சேரட்டும் என்று ஐயாயிரம் ரூபாயை ஒரு பாங்கியில் போட்டு வைத்தார். கைச் செலவுக்கு ஆயிரத்தை வைத்துக் கொண்டு, வீட்டில் ஓய்வு பெற்றுக் கொண்டு உட்கார்ந்தார்.

வரதன் மல் யுத்தத்தை மறந்திருந்தாலும், அவருடைய வாழ்க்கைச் செலவுகள் முன்பிருந்தது போலவே யிருந்தன. ஆகார வசதிகளிலோ, மற்ற வசதிகளிலோ அவர் குறைவு வைக்கவில்லை.

* * *

**ஆ**று மாதங்களுக்குப் பிறகு, வரதன் பணம் போட்டு வைத்திருந்த பாங்கு துரதிர்ஷ்டவசமாக முறிந்து, இருக்கும் இடம் தெரியாமலே போய் விட்டது. பாங்கு பாஸ் புத்தகம்தான் அவரிடம் மிஞ்சி நின்றது.

எதிர்பாராத இந்த அதிர்ச்சியை அவரும் சரி, அவர் மனைவி பத்மாவும் சரி, தாங்கிச் சமாளித்துக் கொண்டார்கள். வருந்தி என்ன பயன்! போனது வரப் போவதில்லை என்று மனத்தைத் தேற்றிக் கொண்டார்கள்.

வருஷங்கள் உருண்டோடிக் கொண்டிருந்தன. ஆனால் கரைந்து சென்ற வருஷங்கள் வரதனிடமிருந்த செல்வத்தையும் கரைத்துக் கொண்டு

தான் போயின. நகை நட்டு, மற்ற மற்றப் பொருள்களை யெல்லாம் விற்று, வயிற்றுக்கு வஞ்சனை செய்யாது சாப்பிட்டாகி விட்டது. வருமானம்தான் பூஜ்யமாகி விட்டதே! வேறு வழி! கடைசியில் குடியிருந்த வீடுதான் மிஞ்சியது.

இந்த நிலையில்தான் சுந்தரி கல்யாணப் பருவத்துக்கு வந்திருந்தாள்.

வரதனும், பத்மாவும் மகளின் கல்யாணத்தையும் நல் வாழ்வையும் பற்றி மனப்பால் குடித்துக் கொண்டிருந்த நாளெல்லாம் போய், "சுந்தரிக்கு எப்படியாவது கல்யாணம் நடந்து விட்டால் போதும்" என்று கவலைப்படும்படி ஆகிவிட்டது.

வறுமையினால் வாட்டப்பட்டிருந்தாலும், வரதன் சும்மாயிருந்து விடவில்லை. இரண்டு மூன்று பிள்ளைகளைப் போய்ப் பார்த்தார். அவர்களும் சரி, அவர்கள் பெற்றோர்களும் சரி, மேலும் மேலும் பார்த்தார்கள். ஒன்றும் ஒத்து வரவில்லை. அவர் முயற்சியும் கை கூடி வரவில்லை. அவர் அலுத்துச் சலித்து வீட்டில் வந்து விழுந்தார்.

வரதனால் இந்த இக்கட்டான நிலைமையைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. சுந்தரிக்குக் கல்யாணம் நடக்க வேண்டுமென்றால், அவரிடம் பணம் அவசியம் இருந்ததாக வேண்டும்.

அவர் யோசனையி லாழ்ந்தார்.

ஒரே ஒரு வழிதான் அவருக்குப் புலனாகியது.

டாக்டர் கூறிய புத்திமதியைக் காற்றில் பறக்க விடவேண்டும். அதன் விளைவு! அவர் நீண்ட நாட்கள் வாழ முடியாது. பரவாயில்லை. எப்படியாவது சுந்தரிக்குக் கல்யாணமாகி, பத்மாவையும் மகளின் ஆதரவிலேயே விட்டு விட்டால், அதன் பிறகு எது நேர்ந்தாலும் நேரட்டும் என்று உறுதி கொண்டார்.

வரதன் துணிந்து விட்டார். மல் யுத்தத்தில் மறுபடியும் இறங்கி ஒன்றிரண்டு போட்டிகளில் கலந்து கொண்டு, பணம் சம்பாதித்து விடுவது என்ற முடிவுக்கே அவர் கடைசியில் வந்து விட்டார். ஆனால் அவர் தம் முடிவைப் பத்மாவுக்குச் சொல்ல வில்லை. சொன்னால் அவள் கண்டிப்பாகத் தடுத்து விடுவாள் அல்லவா!

அவர் தம் உடலும், பருமனும், தோற்றமும், கோதாவுக்கு ஏற்றதா யிருக்கிறதா என்பதைக் கண்ணாடியில் பார்த்துப் பார்த்து, சந்தேகமற நிச்சயமாகத் தெரிந்து கொண்டார். மனைவிக்கும், மகளுக்கும் தெரியாமல், தனிமையில் பயிற்சி செய்து பார்த்துக் கொண்டார். இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு, அவருடைய திறமையில், கிடைக்கப் போகும் வெற்றியில் அவருக்கே ஒரு அசைக்க முடியாத நம்பிக்கையும் ஏற்பட்டு விட்டது. அதன்பின் அவர் தாமதிக்க வில்லை.

• • •

நல்லது கெட்டது எல்லாவற்றிற்கும் சந்தனு தான் வரதனுக்குச் சமய சஞ்சீவி.

வரதன் சந்தனுவிடம் போனார். தம்முடைய ஆசை நிறை வேற வழி செய்யச் சொன்னார்.



தமக்கு ஒரு கோதாவை வெளியூரில் எங்காவது அமர்த்தி, தம்முடைய கஷ்ட நிலைமையில் உதவி புரியும்படி கேட்டுக் கொண்டார்.

ஆனால் சந்தனு தயங்கினார். டாக்டரின் வார்த்தையை அசட்டை செய்ய அவர் இஷ்டப்படவில்லை. வரதனின் கஷ்ட நிலையும் அவருக்குத் தெரிந்தது. ஆனால் அவரிடமோ நண்பருக்கு உதவும்படி செல்வமில்லை. அவரும் தம் சொத்தையெல்லாம் பலவிதமான வியாபாரங்களில் போட்டு நஷ்டமடைந்திருந்தார்.

வரதனுக்கு உதவ வேண்டுமானால் ஒரே ஒரு வழிதானிருந்தது. அதற்காக வரதனை ஒரு நாளைக்கு இழக்கும்படி நேரிட்டு விட்டால் என்ன செய்வது! நண்பனின் கோரிக்கையை மறுக்கத்தான் சந்தனு பார்த்தார்.

ஆனால் வரதன் கேட்கவில்லை.

"என்னப்பா, சந்தனு! இப்படித் தயங்குகிறாய்! எனக்கு என் உயிர் பிரதானமில்லை. எனக்குப் பிறகு என் மனைவியைப் பற்றியும் நான் கவலை கொள்ளவில்லை. ஆயிரங் காலத்துப் பயிர் என் மகள் சுந்தரியைப் பற்றித்தான் என்னுடைய கவலையெல்லாம். அவளுக்கு ஒரு நல்ல இடத்தில் கல்யாணம் நடக்க நீதான் வழி செய்ய வேண்டும். பணம் திரட்ட உதவி செய். இது ஒன்று செய்தால் போதும். நாற்பது வயதுக்காரனாகி விட்டேன். வாழ்ந்தால் இன்னும் பத்து வருஷமோ, இருபது வருஷமோ வாழப்போகிறேன். இதற்காக ஒரு பெண்ணின்—அருமையாய், ஆசையாய், நேசமாய், பாசமாய், கண்ணின்மணி எனக் கருதி வளர்த்த மகளின் வாழ்வைப் பாழாக்கலாமா! பெற்றோர்களின் இன்பம் பெண்ணின் வாழ்க்கையில்தானே இருக்கிறது! நீயே யோசித்துச் சொல்! ஆனால் என் மனைவிக்கும், மகளுக்கும் இது தெரிய வேண்டாம். தெரிந்தால் விபரீதமாக முடியும்" என்று வரதன் உருக்கமாகக் கூறியதைக் கேட்ட சந்தனுவும் வரதனின் பரந்த நோக்கத்தைக் கண்டு, உதவி புரிய ஒப்புக்கொண்டார்.

• • •

ஒரு நாள் வரதன், மனைவியையும் மகளையும் அருகில் அழைத்து, "வெளியூருக்கு ஒரு அலுவல் காரணமாகப் போகிறேன். வரப் பத்து இருபது நாட்கள் ஆனாலும் ஆகும். ஜாக்கிரதையாயிருங்கள்" என்று கூறி, அவர்கள் முகத்தை அன்போடு பார்த்து விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார்.

"போய் வாருங்கள். ஆனால் மல் யுத்தத்தில் மட்டும் கலந்து கொள்ளாதீர்கள். பணம் பெரிதல்ல. உங்கள் உயிர்தான் எனக்குப் பெரிசு. ஜாக்கிரதையாகப் போய்த் திரும்பி வாருங்கள்" என்று பத்மா அவருக்கு எச்சரிக்கை செய்து விடை கொடுத்தாள்.

"ஆமாம், அப்பா! அம்மா சொன்னதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். பத்திரமாகப் போய் வாருங்கள், அப்பா!" என்று சுந்தரியும் அன்பு ததும்பக் கூறி அனுப்பினாள்.

மனைவி, மகளுடைய இந்த வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொண்ட வரதனின் மனத்தை என்னவோ செய்தது. அவர் உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து கிளம்பிய ஏதோ ஒரு குரல், "உன்னுடன் வாழ்வின் சுக துக்கங்களில் பங்கு கொண்டு அன்பும் ஆசையும் செலுத்தும் அவர்களுக்கு நீ துரோகம்தான் செய்கிறாய்" என்று அவருக்கு அறிவுறுத்தியது.

ஆனாலும் வேறு ஒரு எதிர்க் குரல், "நீ இறங்கியிருக்கும் காரியம் நல்லதோ, கெட்டதோ! உன் மகளுக்கு நன்மை விளையப்போவது மட்டும் நிச்சயம். தயங்காதே, பின் வாங்காதே, உன் கடமையைச் செய்துவிடு, பின்பு நடப்பது நடக்கட்டும்!" என்று அவரை முன்னேறத் தள்ளியது.

வரதனும் தைரியத்தைத் துணையாகக்கொண்டு, தெய்வத்தின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுத் தம்முடைய குறிக்கோளில் வெற்றிகாண வேண்டுமென்ற திடசித்தத்துடன் போனார்.

• • •

போன காரியத்தில் பயில்வான் வரதன் வெற்றியையும் புகழையுமே கண்டார். அவருடைய திறமையும் வலிமையும் முன்னினும் அதிகமாகவே இருந்தன. ஐந்து வருஷங்களாகக் கோதாவையே மறந்து, ஓய்வு பெற்றுத் தொழிலில் பின்னுக்குப் போனவராக அவர் காணப்படவில்லை. அப்பொழுது தான் முதன் முதலாக, இளமையின் புதுமை முறுக்கோடு, மல்யுத்தத்தில் பாய்ந்து, அடி உதைகளை, மிதிகளை லட்சியம் செய்யாத மல்யுத்த வீரராக விளங்கினார்.

இன்னும் சொல்லப் போனால், இதுகாறும் அவரிடம் கண்டிராத சாமர்த்தியத்தைத்தான் மக்கள் கண்டனர். அவரது விளையாட்டைக் கண்டு ஆரவாரத்துடன் மக்கள் கரகோஷம் செய்தனர். அவருடைய அரிய சாகசங்களை வியந்தனர். "வரதன் தோல்வியையே காணாத வீரர்; பிறவியிலேயே மல் யுத்த மேதை" என்ற பாராட்டு மொழிகள்தான் மக்களிடமிருந்து எழுந்தன.

வரதனின் மல்யுத்த விளையாட்டு, இதுதான் கடைசியோ, இன்னும் இதைப்போன்று தம்முடைய பிரதாபமிகுந்த திறமையைக் காண்பிக்க அவருக்கு நிறைய நிறைய வாய்ப்புகள் கிடைக்க இருந்தனவோ, என்னவோ தெரியாது. ஆனால் இந்தப் போட்டியில் கலந்து கொண்டதில் பயில்வான் வரதனுக்குப் பத்தாயிரம் ரூபாய் வருமானம் கிடைத்தது.

அவருக்கு ஏற்பட்ட திருப்தியில் தம்மையே அவர் மறந்து விட்டார். ஆகவே, வேறெதைப் பற்றியும் அவர் சிந்தனை செல்லவில்லை. அவர் நண்பர் சந்தனுவுக்கும் திருப்திதான். அத்துடன் கவலையுமிருந்தது. இந்தக் கவலை வரதனின் எதிர்கால வாழ்வைப் பற்றியதுதான். அதேசமயம் போட்டியை நடத்தித் தந்தவர்கள் கொள்ளை கொள்ளையாக லாபம் அடைந்தனர். எனவே, வரதனின் அடுத்த கோதாவைப் பற்றி அவர்கள் கனவு காணத் தொடங்கினர்.

நண்பர்களான வரதனும், சந்தனுவும் எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டு தங்களூருக்குப் புறப்பட்டார்கள்.

போகும்போதே சந்தனு, "வரதன்! எல்லாம் சரிதான். பணம் கிடைத்து விட்டது. சுந்தரியின் கல்யாணமும் நடந்து விடும். உன்னைப்பற்றித்தான் எனக்குக் கவலையாகவிருக்கிறது. உன் உடம்பு எப்படி இருக்கிறது! ஏதாவது கஷ்டத்தை உணர்கிறாயா! என்னிடம் மறைக்காமல் சொல்லு!" என்றார் வரதனைப் பார்த்து.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, சந்தனு! இத்துடன் நான் மல்யுத்தத்தைப் பற்றியே மறந்து விட்டேன். பெண்ணுக்கு மாப்பிள்ளை கிடைப்பதில் எனக்கு ஒத்தாசை செய். இது ஒன்று உன்னிடமிருந்து இன்னும் பாக்கி யிருக்கிறது. நான் நீண்ட காலம் வாழத்தான் போகிறேன். நீ பார்க்கத்தான் போகிறாய்" என்றார் வரதன் சிரித்துக் கொண்டே.

அப்பொழுது அவர் ஒன்றும் மறைக்கவில்லை. எந்த விதமான உடல் கோளாறுகளையும் அவர் உணரவில்லை. பேரன் பேத்திகளைப் பார்த்து

மகிழலாம் என்ற நம்பிக்கையும் அப்பொழுது அவருக்கு ஏற்பட்டிருந்தது.

"வரதன்! எனக்குத் தூரத்து உறவில் ஒரு பையனிருக்கிறான். சோமசுந்தரம் என்று பெயர். பெற்றோர்கள் இல்லை, மாமாவின் ஆதரவில் வளர்ந்து, படித்துப் பட்டம் பெற்று நல்ல உத்தியோகத்திலிருக்கிறான். தங்கமான பையன். பளிங்குபோன்ற குணம்; சுந்தரிக்கு ஏற்றவன். அவனைப் பார்த்து நான் ஏற்பாடு செய்கிறேன். காரியம் கைகூடும் என்பது நிச்சயம். உனக்குக் கவலை வேண்டாம். இதை முடித்துக் கொண்டு ஊருக்குத் திரும்பலாம்" என்று சந்தனு வரதனை மாப்பிள்ளையின் ஊருக்கே அழைத்துப் போனார்.

சோமசுந்தரத்தை வரதனுக்குப் பிடித்துப் போனது மல்லாமல், மற்ற விஷயங்களும் ஒத்து வந்தன. கல்யாணத் தேதியும் நிச்சயமாயிற்று.

வரதன், சந்தனு, சோமசுந்தரம், சோமசுந்தரத்தின் மாமா ஆகிய இவர்களுக்குள் ஒரு கூட்டு உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்படி பெண்ணின் தாயார் பத்மாவிடமோ அல்லது மற்றவர்களிடமோ, "மாப்பிள்ளை வீட்டாரே எல்லாக் கல்யாணச் செலவுகளையும் ஏற்றுக் கொள்கிறார்கள். பெண் வீட்டாருக்கு தம்பிடி செலவில்லை என்று சொல்ல வேண்டியது" என்பதுதான்.

"ஏன் இந்த ஏற்பாடு!" என்பது பற்றிப் பிள்ளை வீட்டார் கவலைப்படவில்லை.

அடுத்தபடியாக வரதன் இன்னொரு காரியத்தையும் சாதித்துக் கொண்டார்.

சோமசுந்தரத்தைத் தனிமையில் அழைத்துச் சென்றார். "தம்பி! என்னுடைய மகள் சுந்தரியை உன்னிடம் ஒப்படைக்கிறேன். அவளுடைய நன்மைக்காகத்தான் நான் வாழ்ந்ததெல்லாம். அவளை நீ முகம் கோணாமல் வைத்துக் குடும்பம் நடத்திச் சுகமாக வாழ வேண்டியது. அத்துடன் எனக்குப் பிற்காலத்தில் என் மனைவி — அதாவது உன் மாமியாரை அவள் மூச்சிருக்கும் வரையில் காப்பாற்ற வேண்டியதும் உன் பொறுப்புதான். அவள் கஷ்டம் தெரியாமல், கவலை தெரியாமல் வாழ்ந்தவள். இந்த என் இரண்டு ஆசையையும் நீ நிறைவேற்றிவைப்பாய் என்று எனக்கு நம்பிக்கை யிருக்கிறது. நான் உயிரோடு இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, இதைத்தான் நான் உன்னிடமிருந்து எதிர்பார்க்கிறேன்" என்று வரதன் உருக்கம் நிறைந்த பரிதாபமான குரலில் சோமசுந்தரத்தினிடம் சொன்னார். அப்பொழுது அவருடைய தொண்டை கரகரத்தது. ஏதோ ஒரு வேதனை அவர் உள்ளத்தைக் கனமாக வந்து அழுத்தியது. அவருக்கு அழுகையே வந்து விடும்போல் தோன்றியது.

"இவைகளை நீங்கள் கேட்காமலே நான் செய்யக் கடமைப்பட்டவனாயிற்றே! இது கூடச் செய்யாவிட்டால், படித்துப் பட்டம் பெற்று, மனிதன் என்று வளர்ந்து பெயர் பெற்றதற்கு என்ன பயன்! ஐயா, நான் கஷ்டத்தை உணர்ந்தவன்; சின்னஞ் சிறு வயதிலேயே தாய் தந்தையர்களை இழந்தவன். அன்னையின்பாசம் வற்றாத அன்பின் வளத்தில் குன்றாத உள்ளத்தின் வாஞ்சையையும், தந்தையின் நேசத்தையும், பாசத்தையும் இன்னதென்றே உணராதவன். நான் அந்தப் பாக்கியத்தை அனுபவிக்கா விட்டாலும், என் உள்ளத்தில் அன்பு உணர்ச்சி வற்றி வறண்டு போய் விடாது. எனக்கு எல்லாரிடத்திலும் அன்பு செலுத்தத் தெரியும். என்னை நம்புங்கள்" என்றான் சோமசுந்தரம்.




"ஸார், நான் மூட்டாள் கூட ரசிக்கும்படியாக ஒரு கட்டுரை எழுதியிருக்கிறேன். படிக்கிறேன், கேளுங்கோ!"

அந்த நிமிஷமே வரதனுக்கு உள்ளம் நிறைந்த திருப்தி ஏற்பட்டது. சோமசுந்தரத்தினால் தம் குடும்பம் பெருமை பெறும் என்ற திடநம்பிக்கையும் அவருக்கு உண்டாயிற்று. அவர் முகமும் மகிழ்ச்சியால் மலர்ந்தது.

• • •

வெற்றிகரமாகக் காரியத்தை முடித்துக் கொண்டு வரதனும் சந்தனுவும் மனத் திருப்தியோடு ஊருக்குத் திரும்பினார்கள்.

போன இடத்தில் வரதன் எவ்விதச் செலவுமின்றி மாப்பிள்ளை தேடி நிச்சயம் செய்து கொண்டு வந்ததை அவர் வாய் மூலமாகவே அறிந்து கொண்ட தாயும் மகளும், இந்த எதிர்பாராத அதிர்ஷ்டத்தை எண்ணி எண்ணி அப்படியே பூரித்துப் போனார்கள்.

அதன் பிறகு காரியங்கள் மிக மிகத் துரிதமாகவே நடந்தன.

ஒரு நல்ல நாளில் சோமசுந்தரத்துக்கும் சுந்தரிக்கும் திருமணம் சிறப்பாகவே நடந்தேறியது. பெற்றோர்கள் பார்த்து மகிழ்ந்தார்கள்; கவலையையும் அப்போது மறந்தார்கள்.

பத்மாவின் மகிழ்ச்சியைவிட வரதனின் மகிழ்ச்சிதான் பன்மடங்கு அதிகரித்திருந்தது என்று சொல்லத் தேவையில்லை. அவருக்கல்லவோ தெரியும், அவர் இதற்கென்று எடுத்துக் கொண்ட உழைப்பும் சிரமமும் பிரயாசையும்!

கல்யாணத்துக்குப் பிறகு ஒரு மாதமாயிற்று; இரண்டாவது மாதமும் போயிற்று. மூன்றாவது மாத ஆரம்பத்திலேயே, வரதன் தம் உடல் நோயை உணர்ந்தார். அது முன்னிலும் மும்மடங்கு விசுவரூபமெடுத்து, அவரை அணு அணுவாய்த் துளைத்து, வேதனைசெய்து கொண்டிருந்தது. உடலில் அசதியும், களைப்பும், ஆயாசமும், பலவீனமும் மிகுந்து காணப்பட்டன. அணு அணுவாய் ஆவி பிரிந்து கொண்டிருப்பதாகத்தான் அவருக்குத் தோன்றியது. ஆயினும் அதற்காக அவர் வருந்தவில்லை. "மகளை வாழ வைத்து விட்டோம்" என்ற ஆறுதலும் திருப்தியும்தான் அவருக்கு ஏற்பட்டன. மனைவிக்கு இதைப் பற்றி அவர் ஒன்றும் சொல்லவில்லை. தம்முள்ளேயே மறைத்து வைத்துக் கொண்டார்.

மகள் சுந்தரியையும், மருமகன் சோமசுந்தரத்தையும் பார்க்க வேண்டு மென்று கடிதம் எழுதி வரவழைத்தார். அவர்களும் வந்து சேர்ந்தார்கள்.

வரதன் சுந்தரியையும் சோமசுந்தரத்தையும் தம் மனைவியையும் கண்குளிரப் பார்த்துப் பேசினார். நிறைய நிறையப் பேசினார். பேசவேண்டியதெல்லாம் பேசினார். யாரும் சந்தேகப்படாதபடி நடமாடினார். இங்கும் அங்கும் போனார். இன்னும் என்ன என்னவெல்லாமோ செய்தார். அப்பொழுதெல்லாம் உயிரை வலுக்கட்டாயமாகப் பிடித்து வைத்துக் கொண்டு, ஒவ்வொன்றும் செய்வது போலத்தான் அவருக்குத் தோன்றியது. இருந்தும் மகிழ்ச்சி நிறைவோடுதான் அவர் காணப்பட்டார்.

• • •

ஒரு வாரத்துக்குப் பிறகு ஒரு நாள் வரதன் திடீரென்று மாரடைப்பினால் இறந்து போனார் என்ற செய்தி எங்கும் பரவியது.

ஆனால் வரதன் திடீரென்று இறக்க வில்லை. தமது மகளின் நல்வாழ்வுக்காகத் தமது உயிரைத் தியாகம் செய்தார் என்ற ரகசியம் சந்தனுவைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது!

# ரசிகமணி டி.கே.சி. வாழ்க!

**புத்தனேரி ரா. சுப்பிரமணியன்**

1. அள்ளுவதால் குறையாத அருஞ்செல்வம்
பெற்றாலும் அறம்வளர்க்கும்
உள்ளமொரு லட்சத்தில் ஒருவர்க்கே
வாய்க்குமெனும் உண்மை போலே
வெள்ளமெனக் கவிச்செல்வந் துள்ளிருக்கும்
சுவையெல்லாம் விருந்து செய்யத்
தென்னாதமிழ்ச் சிதம்பரநா தரையன்றி
வேறெவரே தெரிய வல்லார்?

2. அம்புவியில் ராமகதை கம்பனால்
அழகுடைய தான தென்றால்
கம்பனது காவியமோ சிதம்பரனார்
கருத்துரையால் கவர்ச்சி பெற்றுக்
கொம்பிலுயர் தேன்குடித்த வண்டுகளாய்
அன்பர்மனம் குதிக்கு மாறு
தெம்புதரும் என்பதனைக் "கம்பர்தரும்
காட்சி"யிலே தெளிவாய்க் கண்டோம்.

3. பக்குவமாய் இனியதமிழ்ப் பாடலினை
"டி. கே. சி." படித்துக் காட்டி
இக்கவிதைக் கீடாக எக்கவியும்
பிறமொழியில் இல்லை யென்றே
தக்கபல சான்றுகளைத் தமக்குரிய
பாணியிலே தரும்அவ் வேளை
எக்களிப்பால் சொக்கிடுவோம் "இதயஒலி"
வாழ்கவென இசைப்போ மன்றோ?

4. முத்தமிழைச் சுவைக்கின்ற முறையதனைச்
சிதம்பரனார் மொழியா ரென்னில்
முத்தொள்ளா யிரம்போன்ற சொத்தெல்லாம்
அநுபவிக்க முடிவ தெங்கே?
சத்தான பாடலையுந் தரமில்லாப்
பாடலையுந் தனித்துக் காட்டும்
வித்தகரைப் போற்றிடுவோம்! மேதினியில்
'ரசிகமணி' மேதை வாழ்க!

5. குற்றாலத் தமிழ்முனிவன் கோதில்லா
மூதறிஞன்; குணவான்; அன்பு
வற்றாத அருவியென வாயாரக்
கவியின்பம் வழங்கும் வள்ளல்
கற்றோரும் மற்றோரும் கைகூப்பும்
முகப்பொலிவு கனிந்த மேலோன்
தற்றமிழர் பண்பாட்டின் திருவுருவை
நாவார வாழ்த்து வோமே!



அவள் தோற்றம்
சக்தி இரண்டு ஓர் இளமை
ததும்புகிறது. இதற்குக் காரணம்
அவள் சாப்பிடும் பைல் பீன்ஸ்.

உயர் குணமுள்ள பேதி மாத்திரை.



உண்மையான

**பைல் பீன்ஸ்**

பார்த்து வாங்குங்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

For STYLE
COMFORT
and VALUE

ALWAYS BUY

**"UMAYAL FABRICS"**



SOLE DISTRIBUTORS:

**Fabrics Agency**

"RAMA VILAS"

FORT ROAD, CANNANORE

**ஆரோக்கியமும்
அழகும்
சேர்ந்து போகிறது**



வெற்றிக்கு முக்கியமானது திட ஆரோக்கியம். மந்தமான லிவர் மலச்சிக்கல், வாயுப் பொருமல், அஜீரணம், ஞாபகமின்மை, மயக்கம் முதலியவற்றை உண்டாக்குகிறது. லிவர் ஜெனை தொடர்ந்து சாப்பிட்டால் அது லிவரை பலப்படுத்தி பூர்ண ஆரோக்கியத்தைக் கொடுக்கும்.

**லிவர்ஜென்**

லிவர் தொந்தரவுகளுக்கு நிவாரணி



ஸ்டாண்டர்ட்
பார்மஸூடிகல்
ஒர்க்ஸ் லிமிடெட்,
கல்கத்தா.






# சிறந்தது

சகல உபயோகங்களுக்கும்
ராபின்ஸன்ஸ் பெர்ல் பார்லி

கஞ்சி, கூழ், பாயசம், கறி, பார்லித் தண்ணீர் இவைகளுக்கு புதிய ருசிகரமான சத்துள்ள பெர்ல் பார்லி மிகச் சிறந்தது.

இப்போது எங்கும் கிடைக்கும்

அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
தபால் பெட்டி 664, கல்கத்தா-1.

ARPX 1A-TM



## பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டு பிடித்தது முதல் யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டி ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) உதவியால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அஜாக்கிரதையாக வைத்துக்கொண்டு பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் தராதீர்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை தாக்குகிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரிப்பு, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப் போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதைவிட சீக்கிரம் வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சலை சில நிமிஷத்தில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி—நாடிய வைத்தியம் கிடைத்ததை உணர்வீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக்கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி



BEFORE



AFTER

புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் K. K. கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப்பிறகு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். 10 நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்."

### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாகாதவரை நிக்ஸோடெர்ம் (Nixoderm) மதிப்பை இழக்கிறது. இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். நேரத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் கண்டு ஆச்சரியப்படுவீர்கள். ஒரு வாரத்துக்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். அது அளித்த உத்தரவாதமே உங்களுக்கான உறுதி




# அழகுப் போட்டி

குண்டுமணி

விஜயவர்மன் ராஜ சபையில் சேவகர்கள் புடைசூழ வீற்றிருந்தான். அவனுடைய முகம் களையிழந்து காணப்பட்டது. அவனைப் பார்த்தாலே ஏதோ பெருங்குறை வாட்டிக் கொண்டிருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம். அவன் எதிரே முதன் மந்திரி வந்து நின்றார்.

விஜயவர்மன் வேண்டுமென்றே புன்னகையை வரவழைத்துக் கொண்டு, "வாருங்கள், மந்திரியாரே! தங்கள் வரவைத்தான் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

"அரசே! தங்கள் முகவாட்டத்திலிருந்தே தாங்கள் பெருங் கவலையில் ஆழ்ந்திருக்கிறீர்கள் என்று தெரிகிறதே?"

"ஆம்! ராஜகுமாரி அழகு சுந்தரியின் திருமணத்தைப் பற்றித்தான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். வந்த ராஜகுமாரர்களெல்லாம் அவளைப் பார்த்தவுடனேயே திரும்பி விட்டார்களே? எந்த அரசகுமாரனும் அவளை மணக்க முன்வரவில்லையே என்ற கவலைதான்."

"மன்னரே! ராஜகுமாரி அழகு சுந்தரியைப் பிரும்மதேவன் படைப்பதில் பெருந் தவறு செய்து விட்டான். அவன் மீது படையெடுத்துச் சென்று அவனைத் தோற்கடித்துத்தான் அவனைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்!"

"மதி மந்திரியாரே! என் பெண் அழகில்லை என்பதை எவ்வளவு அழகாக எடுத்துக் கூறி விட்டீர்கள்? பிரும்மதேவனின் மீது படையெடுப்பது இயலக் கூடிய காரியமா? அதிருக்கட்டும். அவள் திருமணத்தை முடிக்கத் தாங்கள் ஏதாவது வழி தோன்றினால் சொல்லுங்கள்!"

"அரசர்க்கரசே! இன்று அழகு சுந்தரியைப் பார்க்க ராஜகுமாரன் அழகு சுந்தரன் வருகிறானே..."

"அவனும் ராஜகுமாரியின் அழகைக் கண்டு பயந்து ஓடி விட்டால் நாம் என்ன செய்வது?"

"பயப்பட வேண்டாம், அரசே! அந்த இளவரசன் அரச குமாரியையே மணந்து கொள்ள ஒரு ஏற்பாடு செய்திருக்கிறேன். தங்களுக்கு இஷ்டமானால்..."

"தங்கள் யோசனையை நான் என்றாவது புறக்கணித்ததுண்டா? எப்படியாவது அழகு சுந்தரியின் திருமணத்தை முடித்தாக வேண்டும்."

"நம் இளவரசியின் தோழி சொர்ணகுமாரியைக் கண்ணாடியில் தோன்றச் செய்து அரசகுமாரனைப் பார்க்கச் சொல்ல வேண்டும். பிறகு..."

"பேஷ்! சரியான யோசனை. அப்படியே செய்யலாம். அதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்ய வேண்டியது தங்கள் பொறுப்பு" என்றான் விஜயவர்மன்.

அன்று மாலை. ராஜகுமாரி அழகு சுந்தரியைப் பார்க்கத் தூர தேசத்திலிருந்து அழகு சுந்தரன் வருகிறானென்றால் நகரம் பிரமாதப்படக் கேட்கவா வேண்டும்? மக்களை அரண்மனைச் சேவகர்கள் அரண்மனை வாசலிலேயே தடுத்து நிறுத்தி விட்டனர்.

குறிப்பிட்ட நேரத்தில் தர்பார் மண்டபத்தில் அழகுசுந்தரன் ராஜகுமாரியைச் சந்திக்க ஏற்பாடாகி யிருந்தது.

அந்த நேரமும் வந்தது.

ராஜகுமாரியின் தோழி சொர்ணகுமாரி பட்டுப் பட்டாடைகளை அணிந்து கொண்டு அரசகுமாரியைப் போல் பெரிய 'நிலைக் கண்ணாடி' முன் தோன்றினாள்.

இதே சமயத்தில் தூர தேசத்திலிருந்து வந்த அரசகுமாரனும் தர்பார் மண்டபத்துக்குள் வந்து சேர்ந்தான். இருவருடைய பிரதி பிம்பங்களும் கண்ணாடியில் பிரதி பலித்தன. ஒருவரை யொருவர் கண்ணாடியில் பார்த்துக் கொண்டனர்.

அரசகுமாரன் உரத்த குரலில் "அரசே! எனக்குப் பேரழகு படைத்த ராஜகுமாரி அழகு சுந்தரியைப் பிடித்து விட்டது" என்று அறிவித்தான்.

இத் தருணத்தில் யாரும் எதிர்பாராத அதிசயம் நடந்தது. ஒரே நேரத்தில் இருவருடைய குரல்கள் தர்பார் மண்டபம் முழுவதும் எதிரொலித்தன.

ஒரு புதிய மனிதன் ஓடி வந்து, "அரசே! நான்தான் அழகு சுந்தரன், அரசகுமாரனாக நிற்கும் இவன் என் தோழன். அவன் அரசகுமாரன் இல்லை" என்று தெரிவித்தான்.

அந்தப்புரத்திலிருந்து அதே சமயத்தில் வந்த ராஜகுமாரி அழகு சுந்தரி, "இதோ கண்ணாடியில் தோன்றியவள் உண்மை ராஜகுமாரி அல்ல, என் தோழி சொர்ணகுமாரி" என்று கூறினாள்.

அழகுசுந்தரன் விஜயவர்மனைப் பார்த்து, "என்னை மன்னிக்க வேண்டும். நான் அழகாயில்லாததால் ராஜகுமாரி அழகு சுந்தரி என்னை ஏற்றுக் கொள்ள மறுத்து விடுவாளோ என்று பயந்து என் தோழனை அனுப்பி வைத்தேன்..."

"நீங்கள் தான் என்னை மன்னிக்க வேண்டும். அரசகுமாரி அழகில்லாததால் அவளை ஏற்க மறுத்து விடுவீர்களோ என்று தயங்கித்தான் ராஜகுமாரியின் தோழியை அனுப்பினேன்!"

அழகு சுந்தரனும் அழகு சுந்தரியும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். அவர்களிருவருக்கும் ஒருவரை யொருவர் பிடித்து விட்டது என்பதை அவர்களுடைய மலர்ந்த முகங்களே தெரிவித்து விட்டன.

அழகாபுரியில் இரு திருமணங்கள் கோலாகலமாக நடந்தேறின. ராஜகுமாரன் அழகுசுந்தரன் அரசகுமாரி அழகு சுந்தரியை மணந்தான். ராஜகுமாரியின் தோழி சொர்ணகுமாரியை அழகுசுந்தரனின் தோழன் சொர்ணகுமாரன் திருமணம் புரிந்து கொண்டான்.

அழகாபுரி மன்னன் விஜயவர்மன் தன் கவலை வெகு எளிதாகத் தீர்ந்து விட்டதைக் கண்டு திருப்தி யடைந்தான்.



சென்னை பார்க் டவுனில் சிறப்பாக நடை பெற்று வரும் பாரதி சங்கீத வித்யாலயத்தார் ஸ்தல ஸ்தாபன மந்திரி கனம் ராஜாராம் நாயுடு அவர்களின் தலைமையில் ஆண்டு விழா கொண்டாடினார்கள். அச்சமயம் பாரதி வித்யாலய மாணவிகள் 'பிரஹலாதன்' நாடகத்தைத் திறமையாக நடித்துக் காட்டினார்கள். நாடகத்தில் பங்கு எடுத்துக் கொண்டவர்களையும் பாரதி சங்கீத வித்தியாலய நிர்வாகிகளையும் படத்தில் காணலாம்.

நடுங்கும் குளிர் ஜுரம் மேலும் உடலில் வலி இவற்றுடன் ஆரம்பமாகும்

# மலேரியாவை

# 'பாலுட்ரின்'

# நீக்குகிறது



மலேரியாவின் சின்னங்களைத் தெரிந்து கொள்ளுங்கள்

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். பிறகு உடம்பு முழுவதும் வியர்த்து வலி உண்டாகும். இந்த அறிகுறிகள் ஏற்பட்டால் உடனேயே டாக்டரைப் பாருங்கள்.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு ஒரு டம்ளர் தண்ணீருடன் உட்கொள்ளுங்கள்.

வயதுவந்தவர்களுக்கும், 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும்: ஒரு மாத்திரை

6 லிருந்து 12 வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு: அரை மாத்திரை

6 வயதுக்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு: கால் மாத்திரை

தினந்தோறும் ஜுரம் குணம் அடையும் வரை கொடுக்கவும்.






அவனுக்கு ஆனந்தம் அளிப்பதற்கு
கையோடு ஒரு புட்டி வைத்திருங்கள்





குழந்தைக்கு வயிற்றுக் கோளாறு இல்லாதிருப்பதால் அவன் சந்தோஷமாயிருக்கிறான். குழந்தை சந்தோஷமாயிருப்பதால் தாயாரும் சந்தோஷமாயிருக்கிறாள்.





# கிரைப் ஸிரப்

தயாரிப்பாளர் :
தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிமிடெட், மல்லேஸ்வரம், பெங்களூர்
விற்பனை ஏஜண்டுகள் :
பெஸ்ட் & கம்பெனி லிமிடெட், தபால் பெட்டி நெ. 63, சென்னை



## இதைப்போன்ற டூத் பிரஷ் வேறில்லை!

உங்களுக்கேற்றபடி சைஸ்! உங்கள் வாய்க்கு பொருத்தமானது!
பற்களை உறுதிப்படுத்தும் புது அம்சங்கள்

- முற்றிலும் ஸ்டெரிலைஸ் செய்யப்பட்டது.
- கால்கேட் டூத் பிரஷ்களின் ஹாண்டில்கள் தனி வர்ண முன்னவை; உங்களுக்கு ஏற்றதை லகுவில் அறியலாம்
- பிளாஸ்டிக் ஹாண்டிலில் நிஜ நைலான் கார்கள்
- மிருதுவாக பாலிஷ் செய்கிறது; இனாமல் சிதையாது
- பல் ஈறுகளை மிருதுவாகத் தடவி உறுதிப்படுத்துகிறது

















# கால்கேட் நைலான் டூத் பிரஷ்
"துவண்டு" போவதில்லை

# சலனமும் சாந்தியும்

லோமாஸ்

யமுனா தினந்தோறும் அந்தத் தெரு வழியாகக் காலை ஏழு மணிக்குப் போகத் தவறியதே இல்லை. அந்த வழியாக யமுனா போவதை வாசலில் நின்று பார்க்கத் தவறியதேயில்லை அந்த வாலிபன்.

நூறு அடி தூரத்தில் யமுனா வரும்போதே அந்த வாலிபன் வாசலில் நின்று கொண்டு வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருப்பான்.

யமுனா அந்த வீட்டைக் கடந்து சென்றதும், அவன் தன் வீட்டு வாசற்படியை விட்டு இறங்கி, அவளுக்குச் சுமார் பத்தடி தூரத்திலே தொடர்ந்து போய் அந்தத் தெரு முனை வந்ததும் திரும்பி விடுவான்.

இந்த அதிசயச் சம்பவம் இரண்டு மாதங்களாகத் தொடர்ந்து நடந்து வந்தது.

முதலில் யமுனா அவனை யாரென்று கவனித்துப் பார்க்கவில்லை. குனிந்த தலை நிமிராமல் தன் வழியே போய்க்கொண்டிருந்தாள்.

ஒரு நாளைக்குத் தற்செயலாக யமுனா தலையை நிமிர்த்தி அவனைப் பார்த்தாள். அவன் அவளையே விழுங்கி விடுவது போலப் பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்ததும் அவளுக்கு ஒரே வெட்கமாகப் போய்விட்டது. கூடவே, அவளுக்கு அவன்மேல் அடங்காத கோபமும் வந்தது. அந்த வாலிபனுக்குத் தான் என்ன திமிர்! ஒரு பெண்மணி தெருவோடு போய்க் கொண்டிருந்தால் விறைக்க விறைக்க இப்படித்தான் பார்ப்பதா, என்ன?



அந்த யோசனையில் யமுனா சில விநாடிகள் தயங்கி நின்று விட்டாள். வாலிபன் அடுத்தகணம் அவளை நெருங்கி வந்து எதிரில் நின்றான்.

“நான் தினம் உன்னைப் பார்த்து எவ்வளவு ஏங்குகிறேன், தெரியுமா? உன் மனம் என்ன, கல்லா? கொஞ்சங் கூட என்னை ஏறெடுத்துப் பார்க்க மாட்டேன் என்கிறாயே! இது உனக்கு முறையோ, அழகா,. இல்லை, தருமந்தானோ......” என்று சினிமாவில் வரும் காதலன்மாதிரி உருக்கத்தோடு கேட்டு விட்டு அவளது முகத்தை மிகவும் கனிவோடு பார்த்தான்.

யமுனா என்ன சொல்வாள்? திடீரென்று ஒரு ஆண்மகன் ஒரு பெண்மணியோடு பேசினானென்றால் அந்தப் பெண்மணிக்கு எப்படியிருக்கும்? அதுவும் அசட்டுப் பிசட்டென்று சம்பந்தா சம்பந்தமின்றிப் பேசினால்......!

யமுனாவுக்கு என்ன பதில் சொல்லுவதென்றே தெரியவில்லை. ஒன்றும் பதில் பேசாமல் போய் விடலாம் என்றால், அவன் அவள் வழியை மறைத்துக் கொண்டு நந்தி பகவான் போல எதிரிலே நின்றான்.

யமுனாவின் மனக்குழப்பமும் மௌனமும் அவனுக்கு இன்னும் துணிச்சலைத் தந்தன.

“என்னிடம் உனக்கு என்ன வெட்கம்? ஆமாம். உனக்கு வெட்கமாகத்தான் இருக்கும். என்னை மன்னித்து விடு. என்மேல் இந்த நிலையில் உனக்குக் கோபம் உண்டாவதும் இயல்பு. என்னால் தொடர்ந்து இந்த மௌன நாடகத்தைச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. மூன்று மாதகாலமாக உன்னை எனக்

குத் தெரியும். உனக்கும் என்னைத் தெரிந்திருக்கத்தான் வேண்டும். உன்னுடைய இணையற்ற அழகில் ஈடுபட்டுத் தினந் தவறாமல் உன்னை நிழல் மாதிரி தொடர்ந்து தெருமுனை வரையில் வந்து வழியனுப்புகிறேனே! நீ ஒரு நாள் கூட என்னைக் கவனிக்க வில்லையா?'' என்று அவன் உருகி உருகி, கெஞ்சிக் கெஞ்சி, இருப்பத்தூர்த் துவரம் பருப்பு மாதிரி குழைந்து பேசினான்.

அந்த அசட்டு வாலிபனிடம் தனியாகப் பேசிக் கொண்டிருப்பதற்கு யமுனாவுக்குப் பயமா யிருந்தது. ஆனால் தப்பிச் செல்வதற்கும் வழி ஒன்றும் தோன்றவில்லை. அத்துடன் அவன் தன்னிடம் பேசியதை நினைத்ததும் அவளுக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை. உடனே யமுனா குப்பென்று நகைத்தாள்.

''ஏன் சிரிக்கிறாய்? ஒரு வேளை நான் இவ்வளவு வெளிப்படையாக நடுத் தெருவில் என் காதலை உன்னிடம் சொன்னது உனக்குப் பரிகாசமா யிருக்கலாம். என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?''

''அதெல்லாம் இல்லை. என்னுடைய சாதாரணத் தோற்றத்தைப் பார்த்து விட்டு இப்படி மெய் மறந்து போகிறீர்களே! அவளைப் பார்த்து விட்டால் உங்கள் கதி என்னவாகுமோ என்று நினைத்துக் கொண்டேன். சிரிப்பு வந்து விட்டது!'' என்றாள்.

வாலிபன் திடுக்கிட்டு, ''என்ன, அவளா? அவள் யார்?'' என்று கேட்டான்.

''உங்களுக்கு அவளை எப்படித் தெரியும்? நீங்கள்தான் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் திரும்புவது கிடையாதே! அவள் பேரழகி. அவளும் நான் வேலை பார்க்கும் கம்பெனியில் தான் வேலை பார்க்கிறாள். அவளை மட்டும் நீங்கள் பார்த்து விட்டால் நீங்கள் அயர்ந்து போய் விடுவீர்கள்!''

''அப்படியா? ஆச்சரியமா யிருக்கிறதே! நான் இதுவரையில் கவனித்ததே யில்லையே!''

''நீங்கள் நாளைக்கே பாருங்கள். நான் உங்கள் தெருவைக் கடந்து சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் மெதுவாக நடந்து வருவாள்!'' என்று சொல்லி யமுனா சரேலென்று நகர்ந்து விட்டாள்.

அந்த வாலிபனும் பிரமை பிடித்தவன் மாதிரி சிறிது நேரம் இருந்து விட்டு அவ்விடத்தை விட்டு நகர்ந்து சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் தன் வீட்டை யடைந்தான்.

* * *

யமுனா அன்று மிகவும் உற்சாகமாக வீட்டை விட்டுப் புறப்பட்டாள். அவள் அகத்தில் பொங்கிய களிப்பு, அவள் முகத்தில் நன்றாய்ப் பிரதிபலித்தது.

அன்று அந்தத் தெருவுக்கு வந்ததும் யமுனா எப்பொழுதும்போல் திகில் அடைந்து போக வில்லை. வழக்கத்துக்கு விரோதமாக அவள் மிகவும் உற்சாகத்துடன் யாரையோ எதிர் பார்த்துக் கொண்டே வந்தாள்.

யமுனா அந்த வீட்டை நெருங்கியதும் அந்த வாலிபன் அவளை ஏக்கங் கலந்த பார்வையோடு வரவேற்றான். யமுனா முதலில் கொஞ்சம் தயங்கினாள். ஆனால் அவனது அழைப்பை அவளால் ஒரேயடியாக நிராகரிக்க முடியவில்லை.

''......ஐந்து நிமிஷம் உள்ளே வந்து பேசி விட்டுப் போவதில் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது!'' என்றான் வாலிபன்.

யமுனா தயக்கத்துடன் படியேறி உள்ளே சென்றாள். அந்த அழகிய வீட்டின் வாசற் புறத்திலேயே அவனுடைய அறை இருந்தது. அறையில் மிகவும் நவீன மோஸ்தரில் மேஜை, நாற்காலிகள், சோபாக்கள் யாவும் இருந்தன.

வாலிபன் அமர்ந்திருந்த ஆசனத்துக்கு அருகில் ஒரு புஸ்தகம் பாதி பிரித்துக் குப்புறப் போடப்பட் டிருந்தது.

அவன், தான் அமர்ந்துகொண்டு அவளையும் ஆசனத்தில் அமரச் சொன்னான். ஆனால் யமுனா உட்காரவில்லை. சிலைபோல் நின்று கொண்டிருந்தாள்.

அறையில் நிலவிய மௌனத்தைக் கலைத்து வாலிபனே பேச ஆரம்பித்தான்.

''என்னை ஏமாற்றி விட்டாயே! இது உனக்கு நியாயமா? இதே காரியத்தை உன்னைத் தவிர வேறு யாராவது செய்திருந்தால்...!'' என்று மிகவும் ஆத்திரத்துடன் கேட்டான் வாலிபன்.

''ஏன்? என்ன நடந்தது?'' என்றாள் யமுனா மிகவும் சாவதானமாக.

''என்ன நடந்ததா? உன்னை யார் என்று எனக்குத் தெரியும். உன்னுடைய அநாதரவான நிலைமை எனக்குத் தெரியும். நான் நல்ல செல்வவந்தன். என் எதிரில் எத்தனையோ பேர் கைகட்டி நின்று, என் ஏவலுக்குக் காத்துக் கிடக்கிறார்கள். அப்படிப் பட்டவன் வெட்கத்தை விட்டு உன் காதலை யாசித்தேன். நீ அதை மறுத்திருந்தால்கூட நான் பொறுத்திருப்பேன். நீ அந்தக் குரூபியான பெண்ணைக் குறிப்பிட்டு, உன்னைவிட அழகி என்று சொல்லி, என்னை அவள் பின்னால் போகும்படி செய்து அவமானப் படுத்தினாய்......!'' இப்படிக் கூறும்போது வாலிபன் கண்களில் நீர் முட்டி நின்றது.

இப்பொழுது யமுனாவின் முகம் கண்ணகியின் முகமாக மாறியது.

''ஆகா, ஆகா! உம்முடைய காதலை என்னவென்பது! நீர் உண்மையாகவே ஒரு பெண்ணைக் காதலித்திருந்திரானால் இன்னொரு பெண்ணை ஏன் உம் உள்ளம் நாடுகிறது? சக்கர வட்டமாகப் பேசுகிறீர்! 'தர்மமா, நியாயமா?' என்று அடுக்குகிறீரே! நான் இன்னொரு அழகி என்றதும் நீர் உடனே சலனம் அடைந்து விட்டீரே! அழகுதான். இனிமேல் நான் இந்த வழியாக வரமாட்டேன். நான் வேலையையே விட்டு விட்டேன். ஒரு வேண்டுகோள். இனிமேல் வேறு யாரிடமும் இம்மாதிரி நடந்து கொள்ளாதீர்!'' என்று கூறி விட்டு மின்னல் வேகத்தில் யமுனா மறைந்தாள். செயலற்றுப் போன அவனால் ஒன்றும் பேச முடியவில்லை.

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும் வாசனையுடனும் இருக்க, உயர்ந்த, புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட் பவுடர். மென்மையும், நறுமணமும் சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும் வெப்பத்தில் குளுமையும் இனிமையும் தருகிறது.

ஸ்நானத்துக்குப் பின் வாசனைப் பூஷணம். ஈரத்தை உறிஞ்சி புதுமை தருகிறது.

குளுமை! குதூகலம்! கோடையின் கொடுமையில்

நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.

மிக எடுப்பானது உங்கள் வதனத்தை அழகு படுத்தும் பவுடர்.




# புரோடெக்ஸ் ஆல் பர்பஸ் டாய்லட் பவுடர்

# கோபமும் தாபமும்

வீர பாண்டியன்

"சபேசன் எங்கே புறப்படுகிறான்...!" என்று கேட்டார் குற்றாலலிங்கம் பிள்ளை.

காப்பியும் கையுமாக உள்ளே வந்த அவருடைய மகள் சுவர்ணம் ஜன்னல் வழியாகக் கூடத்தின் பக்கம் எட்டிப் பார்த்தாள்.

மாடியிலிருந்து பெட்டி படுக்கை சகிதம் கீழே இறங்கி வந்து கொண்டிருந்தான் சபேசன்.

"தெரியலியே ... கேட்டுச் சொல்லுகிறேன்" என்று காப்பியை அவர் கையில் கொடுத்துவிட்டு அறையை விட்டு வெளியே வந்தாள் சுவர்ணம்.

சபேசன் வாசற்படியைத் தாண்டினான்.

"எங்கேயாவது ஊருக்குப் போகிறீர்களா!..." என்று கேட்டுக்கொண்டே சுவர்ணம் அவனைப் பின் தொடர்ந்தாள்.

"கடைக்குப் பக்கத்தில் ஒரு அறை வாடகைக்கு எடுத்திருக்கிறேன். அங்கே போகிறேன்..."

சபேசன் மெதுவான குரலில் பதில் அளித்து விட்டு வெளியே நின்றிருந்த ஜட்கா வண்டியில் ஏறி உட்கார்ந்தான். வண்டி நகர்ந்தது.

கதவை ஒரு கையில் பிடித்தவண்ணம் பிரமை பிடித்துப் போய்ச் சுவர்ணம் ஆடாமல் அசையாமல் அப்படியே சிலைபோல நின்றிருந்தாள்.

குற்றாலலிங்கம் பிள்ளையின் காதில் மேற்படி சம்பாஷணை நன்றாக விழுந்தது. உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்து வெளியே வந்தவர் மகள் நின்ற சோக நிலையைக் கண்டு திகைத்துவிட்டார்.

"சபேசனுக்கு ஏதாவது கோபமா அம்மா..." என்று கேட்டார்.

நீண்ட ஒரு பெருமூச்சுதான் பதிலாகக் கிடைத்தது. சுவர்ணம் தந்தையின் அறைக்குள் புகுந்து காலி டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டு சமையலறையை நோக்கி நடந்தாள். அங்கே டம்ளரைத் தொப்பென்று ஒரு மூலையில் போட்டு விட்டுத் தரையில் உட்கார்ந்து குழந்தையைப் போலத் தேம்பி அழ ஆரம்பித்து விட்டாள்.

குற்றாலலிங்கம் பிள்ளையின் காதில் சுவர்ணத்தின் தேம்பல் ஒலி, சம்மட்டி அடியாக விழுந்து தாங்க இயலாத வேதனையைக் கொடுத்தது.

"சுவர்ணம்..." என்று அன்போடு கூப்பிட்டார். அவளிடமிருந்து பதில் கிடைக்காதது அவர் மனவேதனையை மேலும் அதிகப் படுத்தியது.

மெதுவாக சமையலறைப் பக்கம் வந்து உள்ளே எட்டிப் பார்த்தார். சுவர்ணம் தரையில் கால்களைக் கட்டிக் கொண்டு தலை குனிந்த வண்ணம் சோகமே உருவாக உட்கார்ந்திருந்தாள்.

"சுவர்ணம், எல்லாருக்கும் நான் கெட்டவனாகி விடுகிறேன். ஆனால் என் மனம்தான் உனக்குப் புரியும். இந்தப் பாழாய்ப் போன முன் கோபம் தான் எப்பொழுதும் என்னைக் கெடுக்கிறது."

தழ தழத்த குரலில் இப்படிக் கூறிய குற்றால லிங்கம் பிள்ளையின் குரலில் குற்றத்தை மனப் பூர்வமாக ஒப்புக் கொள்ளும் பணிவு கலந்திருந்தது.

தன்னுடைய முன் கோபத்தால் விளைந்த அந்தத் துர்ப்பாக்கிய சிக்கலைத் தீர்ப்பதற்கு ஏதாவது தகுந்த வழி யிருக்கிறதா — என்று அவர் மூளை தீவிரமாக யோசனை செய்ய ஆரம்பித்தது.

ஒரு குடம் பாலில் துளி விஷம் கலந்தது போன்ற ஒரு கெட்ட குணம் குற்றாலலிங்கம் பிள்ளையிடம் அமைந்து, அவரிடமுள்ள ஆயிரம் நல்ல குணங்களைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கிக் கொண்டிருந்தது. அதுதான் முன் கோபம்.

இந்த முன் கோபத்தால் அவர் வாழ்வில் எத்தனையோ அதிர்ச்சி யடையக்கூடிய நிகழ்ச்சிகள் நடந்து விட்டன. எடுத்த எடுப்பில் தன்னை மறந்து ஏதோ பேசி விடுவார். கோபத்தில் வெறி பிடித்துத் தாண்டவமாடுவார். அடுத்த விநாடியில் வேகம் குறைந்துவிடும். குழந்தையை விடச் சாதுவாகி விடுவார். ஆனால் கோபத்தில் அவர் செய்த செயல்கள் அதற்குள் எல்லை மீறி விபரீதமான சூழ்நிலைகளை உண்டாக்கி விடும்.

சுமார் ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு இப்படித்தான் அவருடைய முன் கோபம் அவர் வாழ்வில் ஒரு பேரிடியை உண்டாக்கி வைத்தது.

ஒரு நாள் இரவு வெளியே சென்றிருந்த குற்றால லிங்கம் வெகு நேரம் வீடு திரும்பாததால் சுவர்ணத்தின் அன்னை காமாட்சி வீட்டுக்குள் படுத்து நல்ல தூக்கத்தில் ஆழ்ந்து விட்டிருந்தாள். வெகு நேரம் கழித்து வீடு திரும்பிய பிள்ளை நீண்ட நேரம் கதவைத் தட்டிய பிறகுதான் காமாட்சி தூக்கம் கலைந்து எழுந்து வந்து கதவைத் திறந்தாள். இந்த அற்ப விஷயம் பிள்ளையின் கோபத்தைத் தூண்டி விடவே ஒரு விநாடியில் மனிதத் தன்மையை இழந்து விட்டார். அதன் பலன் அந்த உத்தமியின் உயிருக்கே உலையாக முடிந்து விட்டது. சுவர்ணம் தாயை இழந்து விட்டாள்.

இதே போல, கணவன் வீட்டிலிருந்து தன் வீட்டுக்கு வந்திருந்த அவருடைய சகோதரி தனலட்சுமியை ஏதோ ஒரு அற்ப விஷயத்துக்காக அளவுக்கு மீறிப் பேசிவிட்டார். உடனே அந்த அம்மாள் "இனி இந்த வீட்டில் அடியெடுத்து வைக்கப் போவதில்லை" என்று சபதம் செய்து விட்டு, அந்த வீட்டை விட்டே வெளியேறி விட்டாள்.

அவள் சென்ற பிறகுதான் பிள்ளை பழைய நிலைக்குத் திரும்பினார். அப்புறம் தங்கையை வருந்தி வருந்தி அழைத்துப் பார்த்தார். அவள் ஒரேயடியாக மறுத்து விட்டாள். பிள்ளையின் மனம் எவ்வளவோ வேதனைப் பட்டது. ஆனால் தங்கையின் மனம் சமாதானமடையவே இல்லை.

அந்தத் தனலட்சுமியின் மகன்தான் சபேசன்.

தனலட்சுமியின் குடும்பம் இறுதியாகச் சின்னா பின்னமாகி விட்டது. அவளுடைய கணவர் திடீரென ஒருநாள் இறந்தார். பச்சிளம் பாலகனை சபேசனுடன் தன்னந்தனியாக அவள் பட்ட கஷ்டங்கள் சொல்லி முடியாதவையாகும். ஆனால் அந்தச் சமயத்திலும் அவள் தமையன் வீட்டுப் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. எப்படியோ பல கஷ்டங்கள் பட்டுச் சபேசனை எஸ். எஸ். எல். ஸி. வரை படிக்க வைத்துவிட்ட தனலட்சுமி இருந்தாற் போலிருந்து ஒருநாள் கண்ணை மூடிக் கொண்டாள். சபேசன் அனாதரவாக நடுத்தெருவில் நின்றான். அப்பொழுது குற்றாலலிங்கம் பிள்ளை பிரபல ஜவுளி வியாபாரியாகத் தம் ஊரில் செல்வத்திலும் செல்வாக்கிலும் உயர்ந்து நின்றார். சபேசன் அனாதையாகிவிட்ட செய்தி கேட்டதும் ஒரு விநாடியும் தாமதியாமல் விரைந்து சென்றார்.

முன் கோபத்தால் தங்கைக்கு இழைத்த தீமைக்குப் பிராயச் சித்தமாக சபேசனைச் செல்வமாக வளர்ப்பது என்பது அவருடைய தீர்மானம். தவிரவும் தனக்கு இருக்கும் அவ்வளவு திரண்ட செல்வத்தைத் தமக்குப் பிறகு நிர்வகிக்கும் நம்பிக்கையான ஆண் வாரிசு இல்லாததும் அவரது அந்த முடிவுக்கு ஒரு காரணமாகும்.

ஆனால் அவர் எண்ணம் அவ்வளவு சுலபத்தில் ஈடேறவில்லை. நீண்ட நாட்களாகக் குற்றாலலிங்கம் பிள்ளையின் வீட்டுத் தொடர்பு அற்றிருந்ததால் அவருடன் சபேசன் பேசிப் பழக இதுவரை சந்தர்ப்பமே ஏற்பட்டதில்லை. அதனால் அழைத்த உடனே அவருடன் செல்ல அவன் விரும்பவில்லை.

சபேசன் இயற்கையாகவே சங்கோச சுபாவம் படைத்தவன். யாருடனும் கலகலப்பாகப் பேசிப் பழகி அறியாதவன். அது மட்டுமின்றிப் பள்ளிப் படிப்பின் போது ஏற்பட்ட பல அனுபவங்களாலும், அவனுக்கு ஏற்பட்டு வந்த அரசியல் அறிவினாலும், அவனுக்குப் பணக்காரர்களிடம் காரணமற்றதொரு வெறுப்பு படிந்திருந்தது. இந்தக் காரணங்களால் எங்காவது ஒரு வேலை தேடிக்கொண்டு பிறர் உதவியின்றித் தன் வாழ்வைத் தானே அமைத்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம் அவனிடம் நிலைத்திருந்தது.

அதனால் குற்றாலலிங்கம் பிள்ளையின் அழைப்பை அறவே மறுத்து விட்டான். பிள்ளையோ விடுவதாக இல்லை. நிரந்தரமாகத் தன் வீட்டில் தங்க விருப்பமில்லை என்றாலும் விருந்தாளியாகவாவது கொஞ்ச நாட்கள் தங்கியிருந்து விட்டுத் திரும்பி விடலாம் என்ற அவரது கடைசி யோசனையை அரை மனதுடன் ஒப்புக் கொண்டான் சபேசன். ஆனால் அப்போது சபேசனுக்குக் குற்றாலலிங்கம் பிள்ளையின் வீட்டில் மனத்தைக் கவரும் ஒரு காந்த சக்தி யிருக்கிறது என்ற விஷயம் புரியாது.

குற்றாலலிங்கம் பிள்ளையின் வீட்டு வாசற்படி ஏறிய உடனே மலர்ந்த முகத்துடன் வரவேற்ற சுவர்ணத்தின் எழில் ததும்பும் முகம் சபேசனின் வைராக்கியத்தை அந்த நிமிஷத்திலேயே ஒரு அசைப்பு அசைத்து வைத்தது.

அப்புறம் பத்து நாட்கள் வீட்டில் தங்கியிருந்தபோது சபேசனின் தீர்மானமே முழு மூச்சாக மாறி விட்டது. ஏனென்றால் காலையில் கண் விழிப்பதிலிருந்து இரவு படுக்கப் போகும் வரை சுவர்ணத்தின் அன்பு தவழும் உபசரிப்பு அவனுக்குக் கிடைத்துக் கொண்டிருந்தது. தப்பித் தவறிச் சுவர்ணம் ஓய்ந்திருந்தாலும் குற்றாலலிங்கம் பிள்ளை "என்ன சுவர்ணம், அத்தான் டிபன் பண்ணியாச்சா! சாப்பிட்டாச்சா! கேள். ரொம்பக் கூச்சப் படுகிற பிள்ளை" என்று அவளை விரட்டிக் கொண்டே இருந்தார்.

சபேசனை வீட்டுக்கு அழைத்து வந்தபோது தங்கை மகனை ஆதரிக்க வேண்டும் என்ற நல்லெண்ணம் மட்டுந்தான் குற்றாலலிங்கம் பிள்ளையின் மனத்தில் நிறைந்திருந்தது; ஆனால் அவன் வந்த பத்து நாட்களில் சுவர்ணத்தையும், சபேசனையும் சேர்த்துப் பார்க்கும் சந்தர்ப்பங்களில் அவர் மனத்தில் வேறுவித எண்ணம் ஒன்று உருவாகியது. சபேசன் வந்ததிலிருந்து சுவர்ணம் புது மலர்ச்சியும் குதூகலமும் பெற்று விளங்குவதைக் கண்டு, சபேசனை மாப்பிள்ளையாக்கி வீட்டுடன் வைத்துக் கொள்ளவேண்டும் என்று அவர் முடிவு கட்டினார்.

* * *

ஒரு நாள் காலை சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தபோது சபேசன் மெல்லப் பேச்சை எடுத்தான். "இன்று மாலை புறப்படலாம் என்று நினைக்கிறேன்" என்றான் சபேசன்.

குற்றாலலிங்கம் பிள்ளை பதில் பேசாமல் சுவர்ணத்தின் முகத்தைப் பார்த்தார்.

"அத்தான் சும்மா சொல்லுகிறார்கள் அப்பா. ஒரு மாதம் கழித்துத்தான் போகப் போவதாக என்னிடம் சொல்லி யிருக்கிறார்கள்" என்று ஒரு போடு போட்டாள் சுவர்ணம்.

சபேசன் திகைத்து விட்டான். அவன் அப்படிச் சொல்லி யிருக்க மாட்டான் என்று குற்றாலலிங்கம் பிள்ளைக்குத் தெரியும். மகளின் மனோ நிலையைப் புரிந்து கொண்ட அவர் சிரித்துக் கொண்டே, "அதுதானே கேட்டேன். அப்போ ரொம்ப நல்லதாப் போச்சு......" என்று கூறி எழுந்தார்.

அவர் கடைக்குச் சென்ற பிறகு சுவர்ணத்திடம், "ஒரு மாதம் கழித்துப் போவதாக நான் எப்பொழுது சொன்னேன்!" என்று வியப்பு நிறைந்த குரலில் கேட்டான் சபேசன்.

"அதனால் என்ன! நான் என்னவோ சொல்லி விட்டேன். நீங்கள் வேண்டுமானால் சாயங்காலமே புறப்பட்டு விடுங்களேன்" என்றாள் சுவர்ணம்.

"நீயே சொல்லிவிட்ட பிறகு நான் எங்கே போவது!" என்று கூறிக்கொண்டே சுவர்ணத்தைப் பார்த்தான் சபேசன்.

சபேசன் அப்புறம் நிரந்தரமாக அங்கேயே தங்கிவிட்டான் என்பதைக் கூறத் தேவையில்லை. குற்றாலலிங்கம் பிள்ளை நகரத்தின் வேறொரு



பகுதியில் திறக்கப்பட்ட தமது புதுக் கடையைச் சபேசனின் முழு நிர்வாகத்தில் விட்டார். ஒரு வருடம் வரை குற்றாலலிங்கம் பிள்ளை சபேசனின் திறமையைப் பார்க்கும் நோக்கத்துடன் அவன் நடவடிக்கைகளை அதிகமாகக் கண்காணித்தார். சபேசன் மிகத் திறமையுடனும், லாபகரமாகவும் கடையை நிர்வகிப்பதைக் கண்ட பிறகு அவன் மீது அவருக்குப் பரிபூரணமான நம்பிக்கை விழுந்து விட்டது. தமக்கு மாப்பிள்ளையாக, எந்த வழியில் பார்த்தாலும் சபேசனுக்குத் தகுதியுண்டு என்பதை உணர்ந்து கொண்டதால் அவர் மனத்திலிருந்த பெரும்பாரம் இறங்கி அங்கே அமைதிகரமான மகிழ்ச்சி குடிகொண்டது.

ஆனால் குற்றாலலிங்கம் பிள்ளையின் முன்கோபத்துக்குச் சபேசன் பல தடவை ஆளாக நேர்ந்தது. காரணமின்றிப் பல தடவைகள் அவர் தன்னைக் கோபித்துக் கொள்வதைக்கூட அவனால் சகித்துக் கொள்ள முடிந்தது. ஆனால் கோபாவேசத்தில் அவர் சொல்லும் சில வார்த்தைகள் அவனை வேதனைக்குள்ளாக்கும். ஆனால் இந்த வேதனைகளெல்லாம் சுவர்ணத்தின் மலர்ந்த முகத்தைக் காணும் வரைதான். தன் மனத்தோடு ஒன்றிய அவளது இனிய உபசாரணைகள் மீண்டும் அவனைச் சாந்தப்படுத்தி மகிழ்ச்சி யூட்டி விடும்.

ஆனால் இன்னொரு சங்கடமும் அடிக்கடி ஏற்படுவதுண்டு. சபேசன் வீட்டுக்கு வந்த புதிதில் மிகவும் அடக்கமாகவும், மரியாதையாகவும் பழகிய சுவர்ணம் நெருங்கிப் பழக நேர்ந்த காரணத்தாலும் தனக்கு அவனே கணவனாக நேரிடலாம் என்ற நம்பிக்கை நிலைத்து விட்டதாலும், சற்று அதிக உரிமையுடன் அவனுடன் பழக ஆரம்பித்தாள். அவனிடம் அவள் மரியாதைக் குறைவாக எப்பொழுதும் நடந்து கொள்ள மாட்டாள். ஆனால் எடுத்ததற்கெல்லாம் சபேசனிடம் சண்டை பிடிப்பது, கண்டிப்பது, கோபித்துக் கொண்டு சில நாட்கள் பேசாமலிருப்பது என்றெல்லாம் அவள் செய்யத் தலைப்பட்டாள்.

சபேசனோ இதை உணர்ந்து கொள்ள முடியாமல் தத்தளித்தான்.

குற்றாலலிங்கம் பிள்ளை அவனை வந்து அழைத்த போது, இவ்வளவு பெரிய பணக்காரர் தன்னிடம் உண்மையான பற்றுதலை வைக்க முடியாதென்றும், உலகத்துக்குப் பயந்து தங்கை மகனை தனக்கு ஆதரவு காட்டுவதுபோல் நடிக்கிறார் என்றும், அவர் வார்த்தையை நம்பிச் சென்றால் திடீரென ஒரு நாள் நட்டாற்றில் விட்டுத் தூர்த்தி விடுவார் என்றும் சபேசனுடைய உள்ளுணர்வு அவனை எச்சரிக்கை செய்தது.

நாளாக நாளாக இந்த மனப்பான்மை ஓரளவு மறைந்து விட்டது என்றாலும் ஏதாவது சிறு சலசலப்பு ஏற்படும்பொழுது அந்த சஞ்சல மனப்பான்மை முழு வேகத்துடன் பீறிட்டெழுந்து நின்று தாண்டவமாட ஆரம்பித்து விடும்.

குற்றாலலிங்கம் பிள்ளையைச் சபேசன் பூரணமாகப் புரிந்து கொண்டிருந்தால் அவருடைய முன்கோபத்தைப் பற்றி லட்சியம் செய்யாமல் இருந்திருக்கலாம். ஏனெனில் அது வெறும் புஸ்வாணம். வெடிக்காது, ஆபத்தும் கிடையாது. சுவர்ணத்தின் கோபம் குழந்தை விளையாட்டு, மருந்துக்கும் அதில் வினை கலக்காது. இதைப்பற்றிச் சிந்திக்க வேண்டியதில்லை. வாழ்வில் சற்று அனுபவம் பெற்றவனாக இருந்தால் குற்றாலலிங்கம் பிள்ளையின் வீட்டு வாழ்வை ஒப்பற்ற சுக வாழ்வாக மாற்றிக்கொண்டு அந்த வீட்டுக்கே ராஜா மாதிரி இருந்துவிட முடியும். சபேசனோ நிலையற்ற உள்ளத்தினால் ஊசலாடுவதிலேயே தன் சக்தியின் பெரும் பகுதியை இழந்து நின்றான்.

ஒரு அற்ப நிகழ்ச்சியின் விளைவாக எழுந்த பேச்சுக்கள் குமுறும் எரிமலையாக இருந்த சபேசனின் உள்ளத்தை வெடிக்க வைத்து விட்டது.

குற்றாலலிங்கம் பிள்ளை சுவர்ணத்துக்காக மிகவும் விலையுயர்ந்த வைரமாலை யொன்றை வாங்கினார். அதைச் சபேசனிடம் கொடுத்துச் சுவர்ணத்திடம்



சென்ற அக்டோபர் 20-ம் தேதி கம்ப்ட்ரோலர் காரியாலயத்து உத்தியோகஸ்தர்கள் பிரதம மந்திரி வெள்ள நிவாரண உதவி நிதிக்காக இனிய கதம்ப நிகழ்ச்சி ஒன்று நடத்தினார்கள். இந்த நிகழ்ச்சிக்கு நவநகர் மகாராஜா ஜாம் ஸாஹேப்பும், சௌராஷ்டிராவின் ராஜப் பிரமுகரும், சௌராஷ்டிரத்தின் முதன் மந்திரியும் மற்ற மந்திரிகளும் விஜயம்செய்து சிறப்பித்தார்கள். அற்புதமாக நடனமாடி மகிழ்வித்த இளம் நங்கையையும் நவநகர் மகாராஜா ஜாம் ஸாஹேப் அவர்களையும் உதவி கம்ப்ட்ரோலர் ஸ்ரீ விசுவநாதன் அவர்களையும் படத்தில் காணலாம்.

கொடுக்கச் சொல்லி யிருந்தார். வைர மாலையை வீட்டுக்கு எடுத்து வந்த சபேசன் பிறகு சுவர்ணத்தினிடம் அதைச் சேர்ப்பிக்கலாம் என்று கருதித் தன் அலமாரியில் வைத்துப் பூட்டினான். பின்னர் மறந்தே விட்டான்.

இந்த விஷயத்தை வேலை மும்முரத்தில் குற்றாலலிங்கம் பிள்ளையும் மறந்து விட்டார். சுவர்ணம் வைர மாலை வேண்டும் என்று தந்தையிடம் கேட்டிருந்தாலும் அவர் அதை வாங்கிவிட்டது புரியாததால் இதைப் பற்றிய பேச்சையே எடுக்கவில்லை.

இப்படி ஒரு மாதம் ஓடி விட்டது. ஒருநாள் தன் தோழி ஒருத்தியின் திருமணத்துக்குச் சுவர்ணம் போயிருந்தாள். அங்கே வந்திருந்த மற்றத் தோழிகளுடன்விளையாட்டாகப் பேசிக் கொண்டிருந்தாள். தோழிகளில் ஒருத்தி வைர மாலை அணிந்து வந்திருந்தாள். அவள் சுவர்ணத்தின் செல்வ நிலைக்கு எத்தனையோ படிகள் தாழ்ந்தவள்; ஆகவே இது சுவர்ணத்துக்கு ஒரு பெரும் குறைவாகப் பட்டது.

"ஏண்டி சுவர்ணு உன் அப்பாவிடம் ஒரு மாதத்துக்கு முன்பே வைர மாலைக்காகச் சொல்லி யிருப்பதாகக் கூறினாயே" என்று சற்றுக் குத்தலாகக் கேட்டாள் வைர மாலை அணிந்தவள்.

"பணம் இருந்தால் மட்டும் போதாதடி......செலவு செய்வதற்கு மனசும் வேணும்..." என்றாள் இன்னொருத்தி.



குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் சமீபத்தில் நடைபெற்ற நான்காவது குழந்தைப் புத்தகக் கண்காட்சியைக் கல்வி மந்திரி கனம் ஸி. சுப்ரமணியம் அவர்கள் திறந்து வைத்தார்கள். மந்திரியின் இடது பக்கம், அவரது குமாரிகளையும், வலது பக்கம் சங்கக் காரியதரிசி திரு வள்ளியப்பாவையும் காணலாம்.

சுவர்ணத்துக்கு ரோஷம் வந்து விட்டது. "நாளை சாயங்காலத்துக்குள் வைரமாலை வாங்கிப் போட்டுக் கொண்டு உங்களுக்குக் காண்பிக்கா விட்டால் என் பெயர் சுவர்ணம் அல்ல......" என்று சபதம் போட்டுவிட்டு வீட்டுக்கு வந்த சுவர்ணம் தந்தையிடம் வந்து விஷயத்தைக் கூறிச் சிறு குழந்தை போல ஓவென்று அழ ஆரம்பித்து விட்டாள்.

"வைர மாலையைச் சபேசன் உன்னிடம் கொடுக்க வில்லையா!" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் குற்றாலலிங்கம் பிள்ளை.

"வைர மாலையா! எனக்குத் தெரியாதே!" என்று ஒன்றும் புரியாமல் விழித்தாள் சுவர்ணம்.

முழு விவரத்தையும் கேட்டவுடன் அவளுடைய கோபம் முழுவதும் சபேசன்மீது திரும்பியது.

"நீங்கள் எதற்காக அப்பா கண்டவர்களிடம் வைர மாலையைக் கொடுக்க வேண்டும்! உயர்ந்த பொருளின் அருமை எல்லாருக்கும் தெரிந்து விடுமா!" என்று சீறினாள்.

"கடுத்தெருவில் கிடந்தவனை கடுவீட்டில் உட்கார வைத்தால் இப்படித்தான்...... எவ்வளவு அலட்சியம்! என்ன தைரியம் இருந்தால் இப்படி அலட்சியமாக நடந்து கொள்ள முடியும்......" என்று குற்றாலலிங்கம் பிள்ளை கோபத்தால் தலைகால் தெரியாமல் குதியாய்க் குதித்தார்.

இந்த நாடகத்தைச் சபேசன் மாடியிலிருந்து பார்த்துக் கொண்டுதான் இருந்தான். "உயர்ந்த பொருளின் அருமை எல்லாருக்கும் தெரிந்து விடுமா!" என்ற சுவர்ணத்தின் சொல்லும், "கடுத்தெருவில் கிடந்தவனை கடு வீட்டில் வைத்தால்..." என்ற குற்றாலலிங்கம் பிள்ளையின் வாக்கும் சபேசனின் தன்மான உணர்ச்சியைத் தூண்டிக் கிளறி விட்டது.

அலமாரியைத் திறந்து வைரமாலை அடங்கிய சிறு பெட்டியைக் கையிலெடுத்துக் கொண்டு கீழே இறங்கி வந்து குற்றாலலிங்கம் பிள்ளையின் முன்னால் வைத்தான். பிறகு திரும்பினான்.

"சபேசா......" என்று அடித் தொண்டையில் கத்தினார் குற்றாலலிங்கம் பிள்ளை.

சபேசன் நின்றான்.

"இந்த வீட்டுக்கும் உனக்கும் இனி ஒத்து வராது; நீ உடனே உன் ஜாகையை மாற்றிக் கொள். தெரிகிறதா!" என்றார் பிள்ளை.

சபேசன் மாடிக்குச் சென்று விட்டான். சுவர்ணம் அவசர அவசரமாக முகத்தை அலம்பிப் பிரமாதமாக உடுத்திக் கொண்டு வைர மாலையை அணிந்து கொண்டு தன் சபதத்தை நிறைவேற்றிய பெருமையுடன் தோழிகளைப் பார்க்க வெளியே புறப்பட்டு விட்டாள்.

இவ்வளவு அமர்க்களமும் சில மணி நேரங்கள் தான். சுவர்ணத்தின் கழுத்தில் வைரமாலை ஏறிய உடனே அவளுடைய கோபம் இருந்த இடமே தெரியாமல் ஓடிவிட்டது. குற்றாலலிங்கம் பிள்ளையின் கோபம் அன்றிரவு சாப்பாடு நேரத்துக்குள் போன இடம் தெரியவில்லை.

ஆனால் சபேசனின் மனத்தில் மட்டும் அந்தச் சம்பவம் ஆறாத வடுவாக நிலைத்து விட்டது.

மாலையில் வெளியே புறப்பட்ட சபேசன் எங்கெங்கோ சுற்றிவிட்டு இரவு ஒன்பது மணிக்குத் திரும்பினான். மாடிக்குப் போய் உடைகளைக் கூட மாற்றிக் கொள்ளாமல் படுத்துக் கொண்டான்.

சற்று நேரத்துக்கெல்லாம் சுவர்ணம் மேலே வந்தாள். வரும்போதே "என்ன......ராஜாவைச் சாப்பிடக் கூப்பிட்டால்தான் வருவாரோ" என்று இரைந்து கேட்டுக் கொண்டே வந்தாள். இதை அவள் பரிகாசமாகத்தான் கேட்டாளே தவிர, குற்றம் சாட்டும் எண்ணத்துடன் அல்ல. ஆனால் சபேசன் மனத்தில் இது தவறான கோணத்தில் ஊடுருவிப் பாய்ந்து வேதனை செய்தது.



சட்டென்று எழுந்து "யாரும் என்னை வந்து அழைக்க வேண்டியதில்லையே!" என்று கடுமையான குரலில் சொன்னான்.

சுவர்ணம் திகைத்துவிட்டாள். இப்படிக் கடுமையாக அவன் பேசிக் கேட்டது கிடையாது. சற்று நிதானித்து விட்டு, "உடம்பு சரியாக இல்லையா?" என்று பரிவுடன் கேட்டாள்.

"என் உடம்பு எப்படிப் போனால் உனக்கு என்ன! இப்பொழுது எனக்குச் சாப்பாடு வேண்டாம்; நீ போகலாம்" என்று மளமள வெனக் கூறிவிட்டு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு படுக்கையில் படுத்தான் சபேசன்.

சுவர்ணம் கீழே இறங்கிச் சென்றாள். சிறிது நேரத்துக்குள் ஒரு டம்ளரில் பால் எடுத்துக் கொண்டு மேலே வந்தாள்.

"இந்தப் பாலையாவது சாப்பிடுங்களேன்......" என்று கனிவுடன் சொன்னாள்.

சபேசன் அவள் பக்கம் திரும்பாமலே "ஒன்றும் வேண்டாம்..." என்று கூறிவிட்டுப் போர்வையை நன்றாக இழுத்துப் போர்த்திக் கொண்டான்.

கொஞ்ச நேரம் நின்று பார்த்து விட்டுச் சுவர்ணம் பேசாமல் திரும்பி விட்டாள்.

மறுநாள் காலையில் சிற்றுண்டி பருகிக் கொண்டிருந்த போது சுவர்ணத்தின் முகத்தைக் கவனித்த சபேசன் திகைப்படைந்தான். சதா மலர்ச்சி ததும்பி இருக்கும் அந்த முகத்தில் சோகத்தின் சாயல் படிந்து கிடந்தது.

இலையில் இட்டிலியைப் போடுவதற்காகச் சுவர்ணம் குனிந்தபோது சபேசன் மெதுவான குரலில், "சுவர்ணம், என்னை மன்னித்துவிடு" என்றான்.

சபேசன் வார்த்தையை முடிக்கு முன்பு அங்கே குற்றாலலிங்கம் பிள்ளை வரவே அவன் அத்துடன் நிறுத்திக் கொண்டான். சுவர்ணமும் மௌனமாக உள்ளே போய்விட்டாள்.

தன் அறைக்குள் நுழையும்போது குற்றாலலிங்கம் பிள்ளை சபேசன்மீது ஒரு கண்ணோட்டம் விட்டார். பிறகு "என்ன சபேசா, உடம்பு சரியாக இல்லையா?" என்று கேட்டார்.

சபேசன் ஒன்றும் பேசாமல் எழுந்து கையலம்பிக் கொண்டான்.

"உடம்பு சரியில்லை என்றால் பேசாமல் ஓய்வு எடுத்துக் கொள். இன்று கடைக்குப் போக வேண்டாம்" என்றார்.

நேற்று அடித்துவிடுபவர் மாதிரி பேசிய குற்றாலலிங்கமா இவர் என்று சபேசனால் நம்பவே முடியவில்லை. உண்மையாகவே தன்மீது பரிவு காட்டுகிறாரா! அல்லது வேண்டுமென்றே குத்திக் காட்டுகிறாரா என்று அவனால் யூகித்துக் கொள்ள முடியவில்லை. கடைக்குப் புறப்பட்டுப் போய் விட்டான்.

கடைக்குப் போனவுடன் அவன் செய்த முதல் வேலை பக்கத்தில் ஒரு அறையை வாடகைக்குப் பிடித்ததுதான். ஒரு சாப்பாடு ஹோட்டலில் கணக்கு வைத்துக் கொண்டான்.

சாப்பிட்ட பிறகு கடையில் உட்கார்ந்து குற்றாலலிங்கம் பிள்ளைக்கு ஒரு கடிதம் எழுதினான்.

அனாதையாகக் கிடந்த தனக்கு உயர்வான வாழ்வு அளித்தமைக்கு நன்றி தெரிவித்தும், அவர் வீட்டில் தங்கி அவருடன் சரிசமமாக வாழத் தனக்குத் தகுதியில்லை என்று தான் கருதுவதால் இனித் தனிவாழ்வு வாழத் தீர்மானித்து விட்டதாகவும், தன் உழைப்புக்கு ஏதோ ஒரு அளவு சம்பளத்தை நிர்ணயித்து விட்டால் அதைக் கொண்டு தன் வாழ்க்கையைக் கழிக்கத் தீர்மானித்திருப்பதாகவும் குறிப்பிட்டிருந்தான்.

வியாபார சம்பந்தமாக வந்திருந்த கடிதங்களோடு அந்தக் கடிதத்தையும் சேர்த்துக் கடைப் பையன் மூலம் பிள்ளையிடம் அனுப்பி வைத்தான்.

அன்று மாலைதான் சபேசன் வீட்டுக்குப் போய்ப் பெட்டி படுக்கைகளுடன் வண்டியில் தான் வாடகைக்குப் பிடித்த அறைக்குத் திரும்பினான்.

சபேசனின் அந்தத் தீவிர நடவடிக்கை காரணமாகக் குற்றாலலிங்கம் பிள்ளையும், சுவர்ணமும் உண்மையாகவே பயந்து போய் விட்டனர்.



சென்னை நகர சபை சிப்பந்திகள் கூட்டுறவு பாங்கின் முப்பதாண்டு நிறைவு விழாவை யொட்டி நகரசபை சிப்பந்திகளால் "மலர்ந்த வாழ்வு" என்னும் நாடகம் அக்டோபர் 20-ந் தேதி சென்னை அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்றது. கூட்டுறவு பாங்கின் அநுகூலங்களைச் சிறந்த முறையில் எடுத்துக் காட்டும் கருத்தமைந்த நாடகத்தைத் தொழில் நடிகர்களும் வியக்கும் வண்ணம் நகரசபை சிப்பந்திகள் நடத்தினார்கள். முக்கியமாக, கதா நாயகனாகவும், அவனுடைய சகோதரனாகவும் நடித்தவர்களின் நடிப்பு பெரிதும் சிறப்பு வாய்ந்திருந்தது. நாடகத்துக்குத் தலைமை வகித்த கல்வி ஆசிரியர், நாடக ஆசிரியரையும், நடிகர்களையும் மிகவும் பாராட்டிப் பேசினார். நாடகத்தின் ஒரு காட்சியையும், ரசிக மகா சபையின் ஒரு தோற்றத்தையும் படத்தில் காணலாம்.

---

தீர்மானமாகச் சபேசன் எழுதியிருந்த கடிதத்திலிருந்து அவன் கொண்டுள்ள முடிவு அப்படியொன்றும் அவசரக் கோலம் அல்ல என்பதையும், மனத்தில் ஏற்பட்ட பெரியதொரு வேதனையின் விளைவாக அவன் தீர்க்கமானதொரு முடிவுக்கு வந்து விட்டான் என்பதையும் குற்றாலலிங்கம் பிள்ளை உணர்ந்தார். தன் மீது கோபித்துக் கொண்டு அவன் எங்காவது ஓடிப் போயிருந்தால் கூட அவர் மனம் இப்படி சங்கடப்பட்டிராது; தன் மீது சுமத்தப்பட்ட பொறுப்பையும் அலட்சியமாக நழுவ விடாமல் தன் சூழ்நிலையை மட்டும் மாற்றிக் கொள்ள விரும்புவதாக அவன் அறிவித்திருந்தது அவர் மனத்தைத் தாக்கியது.

சுவர்ணத்துக்குத் திகிலே பிடித்து விட்டது; தாயன்பு தடைப்பட்டுத் தவித்து நின்றபோது தான் சபேசன் அங்கு தஞ்சம் புகுந்தான். சுவர்ணத்தின் மனம் உடனே சபேசனின் இதயத்தோடு ஒட்டிக் கொண்டு விட்டது. தன்னுடைய உயிரையே அவனிடம் ஒப்படைத்து விட்டாள் என்றால் அதில் மிகையொன்றுமில்லை.

சபேசனுக்குக் கோபம் வந்தால் இப்படி ஒரு நடவடிக்கை எடுப்பான் என்ற நினைவே அவள் மனத்தில் என்றைக்கும் ஏற்பட்டதில்லை. அவன் தனக்கே உரிமையானவன், எக்காரணத்தை முன்னிட்டும் தன்னைவிட்டுப் பிரிய மாட்டான் என்று திட்டவட்டமாக அவள் முடிவு கட்டி வைத்திருந்தாள். கோபம் வந்தால் முன்பெல்லாம் இரண்டொரு நாள் சுவர்ணத்தினிடம் அவன் பேசமாட்டான். பிறகு அவனே அவன் கோபத்தைப் போக்கி விடுவான். அதனால் கடைசியாக அவன் எடுத்த நடவடிக்கை அவள் மனத்தை அதிர்ச்சி யடைய வைத்து விட்டது.

ஏங்கிப் போய்ச் சலனமற்று உட்கார்ந்துவிட்ட சுவர்ணத்தின் நிலைதான் குற்றாலலிங்கம் பிள்ளைக்குப் பெரிய கவலையை உண்டு பண்ணியது. தங்கை, மனைவி ஆகியோரின் பரிதாப நிலையை எண்ணிப் பார்க்கப் பார்க்க அவருடைய மனம் அமைதியிழந்து தடுமாற ஆரம்பித்தது. "கண்ணுக்குக் கண்ணாகப் போற்றி வரும் ஒரே செல்வமான சுவர்ணத்துக்கும் ஏதாவது ஒன்று ஏற்பட்டு விட்டது என்றால்......" என்று நினைக்கும் போதே அவர் உள்ளம் நடுங்கியது.

சபேசனைச் சமாதானப்படுத்த அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பயனற்றுப் போய்விட்டன.

ஆகவே குற்றாலலிங்கம் பிள்ளை தர்ம சங்கடமான நிலையில் நின்று தத்தளித்தார்.

* * *

ஒரு நாள் இரவு, சுமார் பத்து மணியிருக்கும். நல்ல நிலா ஒளி வீசிக் கொண்டிருந்தது. பக்கத்து ஊருக்கு ஏதோ வேலையாகச் சென்றிருந்த சபேசன் குறுக்கு வழியாக ஆற்றங்கரை மீது நடந்து வந்து கொண்டிருந்தான்.

அந்த வழி குற்றாலலிங்கம் பிள்ளையின் வீட்டுப் பின்புறமாகத் தான் சென்றது. அவர் வீட்டுக்குப் பின்புறம் விசாலமான தோட்டம், தோட்டத்தை ஒட்டித்தான் ஆறு இருந்தது. கொல்லைப்புற வழியாக ஆற்றுக்கு வரலாம். நிலாக் காலங்களில் இரவு நேரங்களில் குற்றாலலிங்கம் பிள்ளை, சுவர்ணம் சகிதம் சபேசன் எத்தனையோ தடவை ஆற்றங்கரைக்கு வந்து அமர்ந்து உல்லாசமாகப் பொழுது போக்கி யிருக்கிறான்.

குற்றாலலிங்கம் பிள்ளையின் வீட்டை நெருங்கிய போது சபேசனின் மனதில் சுவர்ணத்தைப் பற்றிய நினைவுகள் பீறிட்டு எழுந்தன. இந்த நேரத்தில் அவள் என்ன செய்து கொண்டிருப்பாளோ என்று எண்ணியபோது அவன் மனம் விம்மியது.

ஆற்றங்கரைப் படித்துறைப் பக்கம் வந்த போது அவன் கால்கள் மேலே நகர மறுத்துத் தயங்கின. அங்கு உட்கார்ந்திருக்கும் உருவம் யார்!

"யாரது!" என்று கேட்டுக் கொண்டே அந்த உருவத்தை நெருங்கிய சபேசன் மின்சார விசையால் தாக்குண்டவன்போல அதிர்ச்சி யடைந்து

நின்றான். "சுவர்ணம்" என்று அவன் வாய் அவனை அறியாமல் அரற்றியது.

சுவர்ணம் மௌனமாக எழுந்து நின்றாள்.

"இந்த நேரத்தில் இங்கே என்ன செய்கிறாய்..." என்று எத்தனையோ சிந்தனைகள் வார்த்தையில் கொப்பளிக்க, வினவினான் சபேசன்.

சுவர்ணம் அவனை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்துவிட்டு "ஆற்றில் விழுந்து சாகலாம் என்று வந்திருப்பேன். நீங்கள் உங்கள் வழியே போங்களேன்......" என்று பொரிந்து கொட்டினாள். ஆத்திரத்தால் அவள் வார்த்தைகள் குழறின.

"இது என்ன பைத்தியக்காரத்தனமான பேச்சு சுவர்ணம்......" என்று தழதழத்த குரலில் கேட்டான் சபேசன்.

"நான் எப்படிப் போனால் உங்களுக்கென்ன! நீங்கள் உங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போங்கள்......" என்று வெறிபிடித்தவள் போலக் கத்தினாள் சுவர்ணம்.

"சுவர்ணம்......" என்று நெஞ்சை அடைக்கும் குரலில் கூறிக்கொண்டு அவள் கைகளைப் பிடித்தான் சபேசன். சுவர்ணத்தின் கைகளில் இரண்டு கண்ணீர்த் துளிகள் விழுந்து தெளித்தன.

"அத்தான்......" என்று அவனைக் கட்டிக் கொண்டு விம்மினாள் சுவர்ணம். அந்த இரண்டு ஜோடிக் கண்களில் இருந்து பெருகிய கண்ணீர் ஊற்று அவர்கள் மனத்தில் குவிந்து கிடந்த பளுவைக் கரைத்துக் கொண்டு ஓடிவிட்டது.

"சென்றதை மறந்து விடுவோம். வீட்டுக்குப் போகலாம் வா" என்றான் சபேசன்.

"உம்......" என்றாள் சுவர்ணம்.

இருவரும் கை கோத்துக் கொண்டு சந்தோஷமாக வீட்டுக்குச் சென்றனர்.

வீட்டை அடைந்ததும் "வீராசாமி..." என்று வேலைக்காரனைக் கூப்பிட்டாள் சுவர்ணம்.

அவன் ஓடிவந்து "என்னம்மா!" என்றான்.

சுவர்ணம் சபேசனின் சட்டைப் பைக்குள் கவனமாகக் கையை விட்டுச் சாவிக் கொத்தை எடுத்து வேலைக்காரன் கையில் கொடுத்து "இவர் அறைக்குப் போய் அங்கிருக்கிற பெட்டி படுக்கை எல்லாம் எடுத்து வந்து மாடி அறையில் வை..." என்று உத்தர விட்டாள்.

வேலைக்காரன் போவதற்கும் குற்றாலலிங்கம் பிள்ளை உள்ளே பிரவேசிப்பதற்கும் சரியாக இருந்தது. அவர் சபேசனைக் கண்டு ஒரு கணம் பிரமித்து நின்று விட்டார்.

"இரண்டு பேரும் கை அலம்பிக் கொண்டு சாப்பிட வாங்க..." என்று மகிழ்ச்சி பொங்கக் கூறிவிட்டுச் சுவர்ணம் உள்ளே சென்றாள்.

குற்றாலலிங்கம் பிள்ளையின் முகத்தைப் பார்க்க வெட்கப்பட்டுக் கொண்டு சபேசன் தலை குனிந்து கொண்டான்; குற்றாலலிங்கம் பிள்ளை மெய் மறந்து ஒரு பெரு மூச்சுவிட்டு அதன்மூலம் தம் மனப் பளுவைக் கீழே உருட்டி விட்டார்.

## ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் ஸ்ரீ துர்க்கா பூஜை விழா



அக்டோபர் மாதம் 13-ம் தேதி முதல் 18-ம் தேதி வரை சென்னை மயிலை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் ஸ்ரீ துர்க்கா பூஜை விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டது.

கல்கத்தாவிலிருந்து பூஜைக்கெனக் கொண்டு வரப்பட்ட ஓர் அழகிய ஸ்ரீ துர்க்கா பிரதிமை மடத்திலே பலவித வண்ண மாலைகளாலும் வேறு வகையாலும் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்திலே, சிறப்பாக விழாவிற்கெனத் தயாரிக்கப்பட்ட பீடத்திலே அமர்த்தப்பட்டு, மந்திர பூர்வமாகப் பிராணப் பிரதிஷ்டை செய்யப் பெற்றது. பல விவரங்களோடு கூடிய பூஜை முறை அதற்குரிய சிரத்தையோடும், காலந் தவறாத ஒழுங்கோடும் பின்பற்றப் பட்டது.

தினந்தோறும் பூஜையைக் காண மக்கள் திரள் திரளாக வந்த வண்ணமிருந்தனர்.

இன்னொரு முக்கியமான நிகழ்ச்சி ஏழைகளுக்கு உணவு வழங்குதல். இது நவமி பூஜை நாளன்று மயிலாப்பூர் பி. எஸ். உயர்தரப் பள்ளிக்கூடத்திலுள்ள நீண்ட தாழ்வாரங்களிலும், மாளிகையிலும் நடத்தப் பட்டது. அன்று ஏறக்குறைய 4500 மக்கள் பல்சுவை உண்டி பெற்று இன்புற்றுச் சென்றனர்.



அக்டோபர் 19உ விழாவின் கடைசி நாளன்று கடலில் பிரதிமையை மூழ்குவிப்பதற்காகப் பெருஞ் சிறப்புற்ற ஊர்வலம் ஒன்று புறப்பட்டது.

மடத்தின் வாசலிலிருந்து புறப்பட்ட ஊர்வலம் இன்ஸ்பெக்டர் ஜெனரல் (போலீஸ்) ஆபீசுக்கு எதிரேயுள்ள கடற்கரை வரை ரஸ்தாக்களில் போக்குவரத்துக்கு இடையூறின்றி ஆயிரக்கணக்கான மக்கள் புடை சூழச் சென்றது. 'துர்க்கா மாதா கீ ஜே' 'மஹா மாயா கீ ஜே' 'ஓம் சக்தி ஓம்' என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன. நீரில் பிரதிமையை மூழ்குவிக்குமுன் வாண வேடிக்கைகளுடன் கற்பூர ஆரத்தியும் நடைபெற்றது.

# சர் ஜீவன் சிலாஜித் லேகியம்

எல்லா காலங்களிலும் பலத்தை அளிக்கிறது



இது ஹிமாலய மலைகளிலிருந்து எடுக்கப்பட்ட சிறந்த லேகியம்

இதை உபயோகிப்பதால் தேக புஷ்டியும், ரத்த விருத்தியும் ஏற்படுவதுடன், வயிற்று வலி, பசியின்மை, க்ஷயம், இருமல், மலச்சிக்கல், வெகு மூத்திரம், வாய்வு, மூலம் முதலிய சகல ரோகங்களும் நிவர்த்தியாகும்.

மாணவர்கள் ஞாபக சக்தி பெற்று சுறுசுறுப்பு அடைவார்கள். வயோதிகர்கள் பலம் பெறுவார்கள். ஸ்திரீகளுக்கு ஏற்படும் சகல ரோகங்களும் தீரும். குழந்தைகள் ஆரோக்கியமடைவார்கள்.

விலை: 44 நாட்கள் டப்பி ரூ. 5-4-0 : 22 நாட்கள் டப்பி ரூ. 3-4-0

தபால் செலவு இறும்

**நீலகிரி டிப்போ,** அக்கிபேட்டை சவுக், பெங்களூர் ஸிடி

NILGIRI DEPOT, AKKIPET SQ., BANGALORE CITY


---


ஸ்தாபிதம்: 1936 தந்தி: 'CORONATION' சிவகாசி

# காரனேஷன் லித்தோ ஒர்க்ஸ்

தபால் பெட்டி நெ. 2

**சிவகாசி** (தென் இந்தியா)

★

நல்ல முறையில் சகலவிதமான பல கலர் லேபிள்கள், பீடி, ஜவுளி, தீப்பெட்டி, சோப்பு, ஊதுவத்தி, சோடா வாட்டர் மற்றும் இதர கைத்தொழிலுக்குத் தேவையான போஸ்டர்கள், ஷோ கார்டுகள் முதலியன பிரிண்ட் செய்து சப்ளை செய்கிறோம். விபரங்களுக்கு எழுதுங்கள்.

★

மேலும் திருமணங்களுக்கும், வாழ்த்துதலுக்கும் தேவைப்படும் அழைப்புப் பத்திரிகைகள் அழகான பல வர்ணச் சித்திரங்களுடன் தயாரிக்கிறோம். சாம்பிள் விரும்புவோர் தபால் செலவிற்காக ரூபாய் ஒன்று அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.


---


3 வாசனைக் கலாரத்னங்கள்

# கம் கம் ஜவாஜ் ★ கம்பால் ★ கமகர் அகர்பத்திகள்.

**டி.எஸ்.சுகந்தாலயா,**

வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

# சங்கடமான இருமலிலிருந்து விரைவான குணம்



சக்தி, விரைவாக வேலைசெய்யும் திறன், சாப்பிடுவதற்கு ருசி ஆகிய எல்லாம் சேர்ந்து "ஜெப்ராலு"க்கு நாடு முழுவதிலும் நல்ல பிரசித்தியை அளித்திருக்கிறது.

# 'ZEPHROL' COUGH SYRUP

TRADE MARK BRAND



manufactured by

**MAY & BAKER LTD**

distributed by

MAY & BAKER (INDIA) LTD., BOMBAY - CALCUTTA - MADRAS - NEW DELHI - GAUHATI



## தி பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு லிட்.

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414 · மதராஸ்-5

தந்தி 'EVERMENS'.... போன் 83834



சேரக் கடைசி தேதி

**12-11-53**

முதல் ஏலத் தேதி

**14-11-53**

உடனே சேருங்கள்

**எங்கள் சிறந்த தீபாவளி சீட்டு வரிசை**

(2-வது சனிக்கிழமை ஏலங்கள்)

**மாதாந்திர சீட்டு வகைகள்**

25 மாதங்கள் 25 மெம்பர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டின் மதிப்பு |
|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500 |
| C | ரூ. 50/- | ரூ. 1,250 |
| D | ரூ. 25/- | ரூ. 625 |
| E | ரூ. 20/- | ரூ. 500 |
| F | ரூ. 15/- | ரூ. 375 |
| G | ரூ. 10/- | ரூ. 250 |

இலவசமாக நிபந்தனைகளும் விண்ணப்ப பாரங்களும் தெளிவான விலாசமுடன் விண்ணப்பித்தால் அனுப்பப்படும். சீட்டில் சேர்த்துக் கொள்ளும் உரிமை கம்பெனியைச் சேர்ந்தது. மற்றவை வழக்கம்போல்.

(போர்டார் உத்திரவுப்படி)

எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

# யோகாசன சிகிச்சை

வி. என். குமாரசாமி

## 7. உணவளவே யாகுமாம் உடல்

யோகாசன சிகிச்சையைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதற்குமுன், நாம் ஆரோக்கியமாக வாழ உற்ற துணையா யிருக்கும் உணவு, உடை, உழைப்பு, உறக்கம், உறவு, ஸ்நானம், ஒழுக்கம் முதலியவைகளைப் பற்றி ஓரளவு தெரிந்து கொள்ளுவது நல்லது.

ஒவ்வொரு பகுதியைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால் பொதுவாய் ஆரோக்கியமாய் இருக்க யோகாசன முறைகளைக் கைக் கொள்ளுபவர்கள் அனுசரிக்க வேண்டிய குறைந்த பட்ச அளவு மட்டும் இங்கு சுருக்கமாய் எழுத விரும்புகின்றேன். இவைகளை யோகாசனம் பழகுகிறவர்கள்தான் அனுசரிக்க வேண்டும் என்பதில்லை. ஆசனம் பழகாத மற்றவர்களும் அனுசரிக்கலாம். ஆரோக்கியமாய் இருக்கலாம். ஆரோக்கிய விதிகள் எல்லோருக்கும் தகும். பொதுச் சொத்து.

"தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுமாம் குணம்"

என்பது போல, "உணவளவே யாகுமாம் உடல்" என்று சொல்லலாம்.

இந்த உடல் பிருதிவி—மண், அப்பு—நீர், தேயு—நெருப்பு, வாயு—காற்று, ஆகாயம்—வெளி ஆகிய ஐம்பூதங்களால் ஆனதும் பிருதிவி – மண் – உணவு தான் உடலை உருவாக்குவதில் முக்கிய பங்கு கொள்ளுகின்றது. நாம் எந்த உணவை எம்முறையில் உண்கின்றோமோ அதன்படிதான் உடல் அமைகின்றது. அதற்குத் தக்கபடி அறிவு-பண்பு, ஒழுக்கம் முதலியன வெல்லாம் அமைகின்றன. உணவு, ஆரோக்கிய மாளிகை அமைப்பதற்குச் செங்கற்களைப் போன்றது. மற்றவை யெல்லாம் சுண்ணாம்பு, சிமிட்டி, மணல், ஜன்னல் வாசக்கால், மேல் கூரை முதலியவைகளைப் போன்றவை. இந்த உணவாகிய செங்கல்லை எவ்வளவு திறமையாய், நல்ல ரகமாய்த் தேர்ந்தெடுக்கிறோமோ அவ்வளவுக்கும் மாளிகையானது உதிராமல், உளுத்துப் போகாமல் உறுதியாயும் நீடித்தும் நிற்கும். எனவே உடலை உருவாக்கும் உணவு ஞானம் சிறிதளவாவது நமக்குத் தெரிந்திருக்க வேண்டியது அவசிய மல்லவா?

உணவு என்றால் என்ன? எதை உணவாகக் கொள்ளுவது உத்தமம். எவ்வாறு சாப்பிடுவது? என்பதை யெல்லாம் அறிய வேண்டும்.

கலை ஞானம் வேண்டும், அரசியல் ஞானம் வேண்டும், உலக ஞானம் வேண்டும், சரித்திர ஞானம் வேண்டும் என்று இம்மாதிரி மற்ற ஏனைய ஞானங்கள் வேண்டும் என்று நாகரிகமாய்ச் சொல்லும் இந்தக் காலத்தில் உணவு ஞானமும் வேண்டும் என்று சொல்லப்போனால், எல்லோரையும் சாப்பாட்டு ராமன்களாய் ஆகச் சொல்லுகிறார்போல் இருக்கிறது என்றும் எண்ணலாம்.

உணவுக் கலை ஒரு அற்புதமான கலை. அதிசயமான கலை. மற்றெல்லாக் கலைகளைக் காட்டிலும் சிறந்த கலை. அதுவே மற்றெல்லாவற்றிற்கும் அஸ்திவாரமான கலை. அப்பேர்ப்பட்ட ஒரு கலையை நடைமுறையில் கைக்கொள்ளுபவர்கள் பெண்மணிகளாவர். இவர்களெல்லாம் ஏதோ தலைமுறை தத்துவமாய் வந்த சமையல் பாகத்தைக் கையாளுகின்றார்களே தவிர இன்ன வஸ்துவில் இன்ன சத்துக்கள் இருக்கின்றன. இவைகளை யெப்படிச் சமைத்தால் சத்து இழக்காமல் சமைக்கலாம், அன்றாட உணவில் எந்தெந்த பதார்த்தங்கள் எவ்வளவு சேர்க்கப்பட வேண்டும், என்ற போதுமான ஞானமின்றியே சகோதரிகள் நடத்து கொள்ளுகிறார்கள் என்பது வருந்தத் தக்க உண்மை. இவர்களுக்குப் போதிய விஞ்ஞான அறிவு, உணவு அறிவு இல்லாமையே இதற்குக் காரணம் என்று வழக்கமாகச் சொல்லிக் கல்வி முறையின்மேல் குற்றம் சுமத்தி விட்டு முடிக்கலாம். ஆனால் ஏதோ ஒரு சிறிதளவாவது கற்ற கல்வியை நடைமுறையில் நடத்த முயற்சியாவது செய்கின்றார்களா என்பதுதான் இன்றையக் கேள்வி. படித்தவர்க ளெல்லாம் சுத்த மோசமாக உணவு முறையில் நடந்து கொள்ளுகிறார்கள்! கஞ்சி வடித்த சாதம், காரம், மசாலை, புளி, பெருங்காயம் இவைகள் கலந்த பதார்த்தங்கள், காபின் என்னும் விஷம் கலந்த காப்பி, மற்றும் டீ, கோக்கோ இத்தியாதி. சாதாரணமாய்ப் பெண்

---

### கலையரங்க நிகழ்ச்சி

●

பம்பாயிலுள்ள செம்பூர் சௌத் இந்தியன் அசோஸியேஷன் ஆதரவில், தசரா வைபவத்தையொட்டி அக்டோபர் 10-ந் தேதியன்று குமாரி சரோஜா (ஸ்ரீ கே. என். கே. மூர்த்தியின் குமாரி)வின் பரதநாட்டியம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. மேற்படி பரத நாட்டிய வைபவத்துக்கும் பம்பாய் நகரப் பிரமுகர்களும், ஏராளமான ரசிகர்களும் வந்திருந்து சிறப்பித்தனர். ***



கள்தான் சமையல் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். என்றாலும் அநேகமாய்ச் சிறிது சௌகரியமான குடும்பங்களில் ஆண்களை வைத்தும் சமையல் செய்கிறார்கள். இவர்களைப் பார்க்கும்போது நளன், பீமன் முதலிய பாக சாஸ்திரத்தில் தேர்ந்தவர்களைப் பற்றிக் கவனம் வந்து விடுகிறது. ஏனெனில் நளபாகம், பீம பாகம் என்று இருக்கிறதே தவிர, தமயந்தி பாகம், திரௌபதி பாகம் என்று பெயர் இடவில்லை அல்லவா! எனவே, பாக சாஸ்திரத்திலும் அக்காலத்தில் ஆண்களே தேர்ந்திருந்தார்களென்று தெரிகிறது. அவர்களின் பிரதிநிதிகளாக ஆண்கள் சமையல் வேலை செய்வதில் ஆச்சரியமில்லை. ஆனால் அப்படிச் செய்பவர்கள் உணவு ஞானத்துடன் செய்கிறார்களா என்பது தான் இப்பொழுதைய பிரச்னை. இவர்களும் ஏதோ தலைமுறையாக வந்த ஒரு முறைப்படி (சிலவற்றை இவர்கள் சௌகரியம் போல் மாற்றியும் இருக்கலாம்) செய்கின்றார்களே தவிர, ஆரோக்கியம், உடல் நலம் இவைகளுக்கு இப்படி யிருந்தால் நல்லது என்னும் விஷயம் பற்றி அவர்களுக்குக் கொஞ்சமும் தெரியாது.

வீடுகளே இந்தக் கதி யென்றால், ஓட்டல்களில் கேட்க வேண்டுமா! எதை வேக வைத்தாலும் ஜலத்தை வடி கட்டித்தான் தீருவது என்பது அவர்கள் சங்கற்பம். இதை மாற்ற வீடுகளிலேயே முடியவில்லை யென்றால், லாபமே பிரதானமான ஓட்டல்களில் எப்படி நடக்கும்!

உதாரணமாக முட்டைக்கோஸ் ஒரு நல்ல ஆகாரம். அதை வேக வைத்து, ஜலத்தைக் கொட்டி விட்டுத்தான் பொரியல் செய்வார்களே தவிர, அளவுடன் ஜலம் வைத்து, அளவுடன் அனலில் வைத்து, அளவுடன் வேக வைக்கத் தெரியாது. அப்படிச் செய்தால் தான் நல்லது. சத்து இழக்காமல் இருக்கும், என்றால், 'ஐய, ருசிக்காதே, ஒரு மொந்தையாய் அல்லவா இருக்கும்' என்று உடனே பதில் வரும். அருமையான ஜீவாதாரமான அரிசியையே வேக வைத்துக் கஞ்சி எனும் அமுதத்தைப் பிரித்து, வடித்து எடுத்து விடுபவர்களுக்கு, காய்கறி வகைகளின் வெந்த ஜலத்தை எடுக்கக் கூடாது என்று சொன்னால் புரியுமா! இவர்களை எப்படித்தான் எந்த விதத்தில்தான் சீர்திருத்தம் செய்வது என்று தெரியவில்லை. எத்தனையோ அறிவாளிகள், டாக்டர்கள், விஞ்ஞானிகள் இவைகளைப் பற்றியெல்லாம் விவரமாகச் சொல்லுகிறார்கள். ஆராய்ந்து ஆராய்ந்து உள்ளங்கை நெல்லிக்கனி போல் காட்டுகிறார்கள். ஆனால் இன்னும் நமக்குப் போதிய விழிப்பு இந்த விஷயத்தில் ஏற்படவில்லை. ஏற்பட்டாலும் அடுப்படி அதிகாரிகளிடம் செல்லுவதில்லை.

அரசியல் சுதந்திரம் என்னமோ அடைந்து விட்டோம். ஆனால் ஆரோக்கிய சுதந்திரம் அடைந்தோமில்லை. அதை எப்பொழுது அடைகிறோமோ அப்பொழுது தான் மக்களிடையே சுபிட்சம், சுகம், ஆனந்தம் பெருகும். பெற்ற சுதந்திரமும் உண்மையான சுதந்திரம் ஆகும்.

நாம் தற்போதுள்ள நிலைக்குக் காரணம் என்ன என்பதைக் கீழ்வரும் ஆராய்ச்சியின் முடிவிலிருந்து ஒருவாறு தெரிந்து கொள்ளலாம்.

நமது அரசாங்கத்தாரால் நடத்தப்படும் ஆராய்ச்சி நிலையம் ஒன்று கூனூரில் இருக்கிறது. அங்கு ஆகார விஷயமாய்ப் பல ஆராய்ச்சிகள் நடத்துகிறார்கள். அங்கு ஆயிரக் கணக்கான வெள்ளை எலிகள், முயல்கள், சீமைப் பெருச்சாளிகள், குரங்குகள் முதலியன வெல்லாம் இருக்கின்றன. அவைகளுக்குப் பலவித உணவுகளைத் தந்து ஆராய்ச்சி செய்கின்றனர்.

ஒரே விதமான வீட்டு வசதி, குடி நீர், ஸ்நான வசதி, சூரிய வெளிச்சம் முதலியவைகளுள்ள கூடுகளைக் கட்டி வெள்ளை எலிக் கூட்டங்களை இரண்டு பாகமாகப் பிரித்தார்கள். ஒரு கூட்ட எலிகளுக்கு நெருப்பில் சுட்ட நெய், எண்ணெய் தடவின ரொட்டித் துண்டுகள், சிறிது வேக வைத்த பருப்பு, தவிட்டுடன் கூடிய அரிசிச் சாதம், பச்சை காரட், முட்டைக் கோசு, பச்சைப் பால், சிறிது இறைச்சி, எலும்பு இவைகள் கொடுக்கப்பட்டன. மற்றொரு கூட்டத்துக்குக் கஞ்சி வடிக் கட்டின அரிசிச் சாதம், குழம்பு, வேக வைத்து ஜலம் எடுத்த காய்கறிகள் போன்ற சத்தில்லா ஆகாரங்களைக் கொடுத்தார்கள். இம்மாதிரி ஒரு நாள், ஒரு மாதமல்ல. நான்கு வருடங்கள் கொடுத்தார்கள். இந்த நான்கு வருடங்களில் இந்த இரண்டு விதக் கூட்டங்களில் எத்தனையோ இறப்பு, பிறப்பு எல்லாம் நடந்திருக்குமல்லவா! எத்தனை தலைமுறைகள் தோன்றி யிருக்கும்! அதனையெல்லாம் கண்காணித்தார்கள். வியாதிகள் வந்தன. இறந்தன. இறந்த எலிகளை அறுத்து எந்த வியாதியால் இறந்தன என்று கண்டார்கள். இப்படி யெல்லாம் நான்கு வருடங்கள் அரும்பாடுபட்டுக் கடைசியில் அவர்கள் வெளியிட்ட பயங்கர உண்மையைக் கேளுங்கள்.

"முதல் சொன்ன சத்திழக்காத ஆகாரங்கள் கொடுத்து வந்த எலிக் கூட்டங்கள் நன்கு வளர்ச்சி யடைந்தன. நல்ல ஆரோக்கியமாக இருந்தன. நோய் நொடிகள் வருவதில்லை. அமைதியாய் வாழ்ந்தன. சண்டை சச்சரவு கிடையாது. ஆயுளும் அதிகமானது. குறைப் பிரசவம், இளம் வயதில் சாவு கிடையாது. ஆக அக்கூட்டம் சந்தோஷமாய் ஆரோக்கியமாய் இருந்தன.

"இரண்டாவது சொன்ன சத்திழந்த ஆகாரங்களைத் தின்று வளர்ந்த எலிக் கூட்டங்கள் நன்றாய் வளரவில்லை. அடிக்கடி நோய் கண்டன. அதன் காரணமாய் இறந்தன. குறைப் பிரசவம் சகஜமாய் நடந்தன. அநேகம் வயதுக்கு முன் இறந்தன. தொத்து நோய்கள் கண்டன. அமைதியே யின்றிப் பரபரப்பாய்த் திரிந்தன. சற்றுப் பலசாலியான எலிகள் சிறிது பலவீனமான எலிகளைத் தாக்கின. சண்டை, சச்சரவு உண்டாயிற்று. பலவித வயிற்றுக் கோளாறுகள், குடல் கோளாறுகள் வயிற்று வீக்கம் முதலியன கண்டன. சரும நோய், மயிர் உதிர்தல், சொறி, கொப்புளங்கள், பெரி பெரி உண்டாயின. இருதய வியாதிகள் வந்தன. புற்று நோயும் வந்தது. மூத்திரப் பையில் கற்கள், கர்ப்பத்தில் குஞ்சு சாவது, காது நோய் சீழ்வடிதல், அடி னாயிட்ஸ் கண் நோய்கள் முதல் சாதாரணமாய் நமக்கு என்னென்ன தற்போது உண்டாகின்றனவோ அவைகளனைத்தும் அந்த எலிக் கூட்டங்களுக்கும் உண்டாயின

என்னே பயங்கரம்! எவ்வளவு எளிதாக நமக்கு விளக்கம் தந்திருக்கின்றார்கள்! இதை விட நமக்கு எப்படி விளக்க முடியும்! இந்தப் பயங்கர மாபெரும் உண்மையை, அடுப்படியில் இருக்கும் சகோதர சகோதரிகள் அறிவார்களா!

எனவே, நமது ஆரோக்கியப் பிரச்னையெல்லாம், ஏன் எல்லாப் பிரச்னைகளுமே பெரும்பாலும் உணவைச் சார்ந்தே இருக்கின்றன என்பதை இதை விடத் தெளிவாய் எப்படி அறிய முடியும்!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10

**வெண்மையாக**
சலவை செய்யப்
பட்டுள்ளன

**பிரகாசமாக**
சலவை செய்யப்
பட்டுள்ளன

# ஸன்லைட்
# சோப்பில் தான்

துணிகளை
அடித்துத் துவைக்காமலே
வெண்மையாகவும்
பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!




S. 204-50 TM

REGD. NO. M 4392

*Registered as a newspapers in Ceylon*


# நாள் முழுவதும்





# புத்துணர்ச்சி





# அளிக்க . . .





## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்






ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

HBP. 7-X30 TM